## "காப்பிரைட் ரிஜிஸ்டர் அறிவிப்பு"

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த திருப்புகழ்ப் பாடல்களை மகா-ா-ா-ஸ்ரீ மு. ரா. கந்தசாமிக் கவிராய ரவர்கள் செய்த சந்தக் குழிப்பும், அரும்பதவுரையும் சேர்த்துச் சீர்திருத்தி 1—2 பாகங்களாக அச்சிட்டு இருந்ததில், ஷை கவிராயரவர்களுக்குள்ள காப்பிரைட் சுதந்திரத்தை யான் கிரயத்திற்குப் பெற்று, அச்சிட்டுக் காப்பிரைட் ரிஜிஸ்டர் செய்திருப்பதால், இப் புத்தகங்களை எனது உத்திரவன்றி யாரேனும் அச்சிடுவரேல், "யான் கோரும் நஷ்டங்களுக்கும், இந்தியன் காப்பிரைட் சட்டதண்டனைக்கும் உட்படுவார்கள்" என்பதை இதன்மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்ஙனம்,

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்,

ஸ்ரீ கோபால் மஹால்,

மதுரை.

குமரன் துணை.

திருப்புகழ் இரண்டாம் புத்தகம்.

# இப்புத்தகத்திலடங்கியவை.

உ

குமரன் துணை.

# திருப்புகழ் இரண்டாம் புத்தகம்.

# பதிப்புரை

திருவளர் தாமரைச் செம்மல ரவனு
மரியு மமரரு மலக்கண் டேத்
தண்ணருள் புரிவா னொண்ணெரி யொண்ட
ஐம்முகப் பெருமா னுமிழி யகத்தே
இருமூன் றுறு பொறியா யெய்திப் பொன்னாகி
மூவிரு முகத்து முதல்வனாய் நின்று
சூரறுத் தும்பர் துயரம் போக்கித்
தேவப் பிடியைத் திருமணங் கொண்டு
வள்ளிநா யகியை யுள்ளி மணந்து
தனையுண ரடியார் நினைவெலா முதவிக்
காக்குங் கருணைக் கடம்பணி தடம்புயக்
கந்தவே டிருவடிக் கமலத் துணையைச்
சிந்தையுட் கொண்டு தினமும் பரவிப்
பணிந்தவன் திருவருள் பாலித்திடலால்,

திருப்புகழ் முதற்புத்தகம் அச்சிடப்பெற்று முடிந்தது போலவே இந்த இரண்டாம்புத்தகமும் முற்றுப்பெறுவதாயிற்று. இதன்கட்பதிப்பிடப்பெற்ற பாடல்கள் 611. இவற்றுக்கும் அங்கங்கே சந்தக்குழிப்பைத் தலைப்பிற் சேர்த்தும், அரும்பதப்பொருளை இறுதிக்கட்காட்டியும், கிடைத்த சிலபிரதிகளை வைத்துப்பரிசோதித்து, இயன்றவரை திருத்தங்களைச் செய்தும் எடுத்த பணியை இறைவனருளாலொருவாறு முடித்தேம். சிற்சில கவிகளில் மட்டும்

தையச்சந்தத்துக்கும், தன்னச் சந்தத்துக்கும் பேதமில்லாமல் வருதலையறிந்துளேமாயினும் யாமாக ஒன்றுஞ் செய்தற்கின்மையால் இருந்தவாறே பதிப்பிட்டுள்ளேம். இத்தகைய கவிகள் பிற்காலத்தவரால் இடைச்செருகலாக வந்திருக்கலாமென்றுங் கருதுகின்றேம். இவை எவ்வாறாயினும் இருந்த மட்டில் ஒருவாறு சுத்தப்பதிப்பாக்கி வெளியிட வேண்டுமென்ற பேரவாவால் சந்தங்களை இருந்தவாறே விட்டுவிட்டேம். இதுவரை அச்சிடப் பெறாத சிற்சில செய்யுட்கள் மட்டும் பழைய ஏட்டுப் பிரதிகளிற் காணப்பட்டவாறு இறுதிக்கட் சேர்த்துள்ளேம். இன்னுஞ் சில கவிகள் கிடைத்திருக்கின்றன. அவை பெரிதும் சிதைவுபட்டுள்ளமையால் மற்றுஞ் சில பிரதிகள் தேடித் திருத்தமான பாடங் கண்டபின்னர் இனி வேறு பதிப்பிடுங்கால் சேர்க்கலாமென வைத்துளேம். திருப்புகழ்ப் பழம்பிரதிகளை வைத்திருப்பவர் எமக்கனுப்புவார்களாயிற் பேருபகாரமாகும். அங்ஙனம் உபகரிப்பவர்கட்கு அச்சுப்பிரதி ஒன்று கொடுக்கச் சித்தமாயிருக்கின்றேம். இந்தமட்டிலாவது யாமெடுத்த பணியை முற்றுவித்த குமாரக்கடவுள் திருவடித் தாமரைமலர்களை எப்பொழுதும் இறைஞ்சி வாழ்த்துவேமாக.

குமாரக்கடவுள் திருவடிகளே சரணம்.

இங்ஙனம்,

மதுரை,
ஆனந்த ஹு
கார்த்திகைமீ

மு. ரா. கந்தசாமிக் கவிராயர்.

# ஸ்தல அகராதி.

## ஸ்தல அகராதி.



ஸ்தல அகராதி முடிந்தது.

# பாட்டு முதற்குறிப்பு அகராதி.

# பாட்டு முதற்குறிப்பு அகராதி.



உ

முருகக்கடவுள் துணை.

## திரு அருணை

ஆசிரிய விருத்தம்.

---

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
　　ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
　　குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகமொன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுக மொன்றே
　　வள்ளியைம ணம்புணர வந்தமுகமொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
　　ஆதியரு ணாசலம மர்ந்தபெரு மாளே.

வேலுமயிலுந் துணை.



திருச்செந்தூர்.

உ

குமரன் துணை.

# ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்.

## இரண்டாம் புத்தகம்.

### காஞ்சிபுரம்.

இது காஞ்சிபுரம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து மேற்கே
ஒருமைல் துலைவில் இருக்கிறது.

தனதனத் தத்த தந்த தனதனத் தத்த தந்த
தனதனத் தத்த தந்த தனதான.

637. அறிவிலாப் பித்த ருன்ற னடிதொழாக் கெட்ட வஞ்சர்
அசடர்பேய்க் *கத்தர் நன்றி யறியாத
அவலர்மேற் சொற்கள் கொண்டு கவிகளாக் கிப்பு கழ்ந்து
அவரைவாழ்த் தித்தி ரிந்து பொருள்தேடிச்
சிறிதுகூட் டிக்கொ ணர்ந்து தெருவுலாத் தித்தி ரிந்து
தெரிவைமார்க் குச்சொ ரிந்து அவமேயான்
திரியுமாற் கத்து நிந்தை யதனைமாற் றிப்ப ரிந்து
தெளியமோ க்ஷத்தை யென்று அருள்வாயே
இறைவர்மாற் றற்ற செப்பொன் வடிவம்வேற் றுப்பி ரிந்து
இடபமேற் கச்சி வந்த உமையாள்தன்
இருளைநீக் கத்த வஞ்செய் தருளநோக் கிக்கு ழைந்த
இறைவர்கேட் கத்த குஞ்சொல் உடையோனே
குறவர்கூட் டத்தில் வந்து கிழவனாய்ப் †புக்கு நின்று
குருவியோட் டித்தி ரிந்த தவமானைக்
குணமதாக் கிச்சி றந்த வடிவுகாட் டிப்பு ணர்ந்த
‡குமரகோட் டத்த மர்ந்த பெருமாளே. (க)

* கத்தர்-தலைவர். † புக்கு-புகுந்து. ‡ குமரகோட்டம்-காஞ்சிபுரத்தி லுள்ள முருகக்கடவுள் கோயில்.

தனதனந் தத்தத் தத்தன தத்தந்
தனதனந் தத்தத் தத்தன தத்தந்
தனதனந் தத்தத் தத்தன தத்தந் தனதான.

638. அதிமதங் கக்கப் பக்கமு கக்குஞ்
சரிதனந் தைக்கச் சிக்கென நெக்கங்
கணைதருஞ் செச்சைப் பொற்புய னத்தன் குறவாணர்
அடவியந் தத்தைக் கெய்த்துரு கிச்சென்
றடிபணிந் திட்டப் பட்டும யற்கொண்
டயர்பவன் சத்திக் கைத்தல னித்தன் குமரேசன்
துதிசெயும் சுத்தப் பத்தியர் துக்கங்
களைபவன் பச்சைப் பக்ஷிந டத்துந்
துணைவனென் றர்ச்சித் திச்சைத ணித்துன் புகழ்பாடிச்
சுருதியின் கொத்துப் பத்தியு முற்றுந்
துரியமுந் தப்பித் தத்வம னைத்துந்
தொலையுமந் தத்துக் கப்புற நிற்கும் படிபாராய்
கதிபொருந் தக்கற் பித்துந டத்தும்
கனல்தலம் புக்குச் சக்ரமெ டுக்குங்
கடவுளும் *பத்மத் தச்சனு முட்கும் படிமோதிக்
கதிரவன் பற்குற் றிக்†குயி லைத்திண்
சிறகரிந் தெட்டுத் திக்கர்வ குக்குங்
கடகமுந் தட்டுப் பட்டொழி யக்கொன் றபிராமி
பதிவ்ரதம் பற்றப் பெற்றம கப்பெண்
பரிவொழிந் தக்கிக் குட்படு தக்கன்
பரிபவம் பட்டுக் கெட்டொழி யத்தன் ‡செவிபோயப்
பனவிபங் கப்பட் டப்படி வெட்கும்
படிமுனிந் தற்றைக் கொற்றம்வி ளைக்கும்
பரமர்வந் திக்கக் கச்சியில் நிற்கும் பெருமாளே. (உ)

---

* பத்மதச்சன் - தாமரைமலரிலிருக்கும் பிரமன். † குயிலைத்திண் சிற கரிந்து என்றது தக்கன் யாகத்தில் இந்திரன் குயிலுருக்கொண்டு பறந்து ஓடியபோது சிறகரிந்த கதையை யுணர்த்தும். ‡ பனவி செவி போம் என்றது அக்காலத்தில் தக்கன் மனைவி காது அறுபட்டதை யுணர்த்தும். இக் கதைகள் காசிகாண்டம் தக்கன் வேள்வியழித்த படலம் 32-45ம் பாடல்களிற் கண்டவை, பனவி-தக்கன் மனைவி, கச்சி-காஞ்சிபுரம்.

639. கனகதம் பத்தைச் செச்சையை மெச்சுங்
கடகசங் கத்துப் பொற்புய வெற்பன்
கடலுள்வஞ் சித்துப் புக்கதொர் கொக்கும் பொடியாகக்
*கறுவுசெஞ் சத்திப் பத்மக ரத்தன்
குமரனென் றர்ச்சித் தப்படி செப்புங்
கவிமொழிந் தத்தைக் கற்றற வுற்றும் புவியோர்போய்க்
†குனகியுங் கைக்குக் கற்பக மொப்பென்
‡தனகனென் றிச்சைப் பட்டத ளிக்கும்
குமணனென் றெப்பிட் டித்தனை பட்டிங் கிரவான
குருடுகொண் டத்தச் சத்தம னைத்துந்
திருடியுஞ் சொற்குத் தக்கதொ டுத்துங்
குலவியுங் கத்தப் பட்ட கலக்கந் தெளியாதோ
சனகனன் புற்றுப் பெற்றம டப்பெண்
தனிபெருங் கற்புச் சக்ரந டத்துந்
தகையிலங் கைச்சுற் றத்தை§மு ழுத்துஞ் சுடவேவெஞ்
சமரசண் டக்கொற் றத்தவ ரக்கன்
கதிர்விடும் பத்துக் கொத்துமு டிக்குந்
தனியொரம் பைத்தொட் டுச்சுரர் விக்னங் களைவோனும்
தினகரன் சொர்க்கத் துக்கிறை சுக்ரன்
||சசிதரன் திக்குக் கத்தர கத்யன்
திசைமுகன் செப்பப் பட்டவ சிட்டன் திரள்வேதஞ்
செகதலஞ் சுத்தப் பத்தியர் சித்தம்
செயலொழிந் தற்றுப் பெற்றவர் மற்றும்
சிவனும்வந் திக்கக் கச்சியில் நிற்கும் பெருமாளே. (௩)

---

640. செடியுடம் பத்தித் தெற்றியி ரத்தஞ்
செறிநரம் பிட்டுக் கட்டிய கட்டஞ்
சிறைதிரண் டொக்கத் தொக்கவி னைப்பந் தவிகாரம்
திமிரதுங் கத்தத் துத்திரை யெற்றுஞ்
செனனபங் கத்துத் துக்கக டற்கண்
திருகுறும் பைப்பட் டுச்சுழல் தெப்பங் கரணுதி

---

* கறுவு - சினங்கொண்ட. † குனகி - சந்தித்து. ‡ தனகன் - தன வந்தன். § முழுத்தும் - முழுதும். || சசிதரன் - ஈசானியன்.

குடிபுகும் பொக்கப் புக்கிலி றப்பின்
குடிலம்வெந் தொக்குக் கொட்டில்ம லத்தின்
குகைசுமந் தெட்டுத் திக்கிலு முற்றுந் தடுமாறும்

குவலயங் கற்றுக் கத்தியி ளைக்குஞ்
சமயசங் கத்தைத் தப்பியி ருக்குங்
குணமடைந் துட்பட் டொக்கவி ருக்கும் படிபாராய்

படிதருங் கற்புக் கற்பக மூக்கண்
கொடிபசுஞ் சித்ரக் *குத்தர முத்தம்
பணிநிதம் பத்துச் சத்தி யுகக்குங் குமரேசா

பரவசங் கெட்டெட் டக்கர நித்தம்
பரவுமன் பர்க்குச் சித்தி யளிக்கும்
பரமர்வந் திக்கத் தக்கப தத்தன் குருநாதா

தொடியிடும் பத்மக் கைக்குமி டைக்குஞ்
சுருள்படும் பத்திப் பட்ட குழற்குந்
துகிர்கடைந் தொப்பித் திட்ட விதழ்க்குங் குறமானின்

சுடர்படுங் கச்சுக் கட்டு முகைக்குந்
துவளுநெஞ் சத்தச் †சுத்த விருக்கும்
சுரரும்வந் திக்கக் கச்சியில் நிற்கும் பெருமாளே. (௪)

641. கனக்ரவுஞ் சத்திற் சத்தியை விட்டன்
றசுரர்தண் டத்தைச் செற்ற விதழ்ப்பங்
கயனைமுன் குட்டிக் கைத்தளை யிட்டும் பரையாளும்

கடவுளன் புற்றுக் கற்றவர் சுற்றும்
பெரியதும் பிக்கைக் கற்பக முற்றங்
கரதலம் பற்றப் பெற்ற ஒருத்தன் ஜகதாதை

புனவிளந் தத்தைக் கிச்சை யுரைக்கும்
புரவலன் பத்தர்க் குத்துணை நிற்கும்
புதியவன் செச்சைப் புட்ப மணக்கும் பலபாரப்

புயனெனுஞ் சொற்கற் றுப்பிற கற்கும்
பசைபொழிந் ‡தத்தத் திக்கென நிற்கும்
§பொருடொறும் பொத்தப் பட்டதொ ரத்தம் பெறுவேனோ

* குத்தரம்-மலை. † சுத்த இருக்கும் - சுத்தமாகிய இருக்கு வேதமும். ‡ அத்தத்து இக்கென நிற்கும் - அத்தத்தில் கரும்புபோல் இனித்து நிற்கும். § பொருள் தொறும் பொத்தப்பட்டது ஒரு அத்தம் - நலம் அமையச் செய்யுள்தோறும் பொதியப்படுவதாகிய ஒரு ஒப்பற்ற செல்வத்தை.

அனல்விடுஞ் செக்கட் டிக்*கய மெட்டும்
பொரவரிந் திட்டெட் டிற்பகு திக்கொம்
பணிதருஞ் சித்ரத் தொற்றை யுரத்தன் திடமாக

அடியொடும் பற்றிப் பொற்கயி லைக்குன்
றதுபிடுங் கப்புக் கப்பொழு தக்குன்
றணிபுயம் பத்துப் பத்துநெ ரிப்புண் டவனீடுந்

தனதொரங் குட்டத் தெட்பல டுக்குஞ்
சரியலன் கொற்றத் துக்ரவ ரக்கன்
தசமுகன் கைக்குக் கட்க மளிக்கும் பெரியோனும்

தலைவியும் பக்கத் தொக்க விருக்குஞ்
சயிலமுன் தெற்குச் சற்குரு வெற்புந்
தணியலும் பெற்றுக் கச்சியில் நிற்கும் பெருமாளே. (ரு)



642 தெரியலஞ் செச்சைக் கொத்து முடிக்கும்
பரிதிகந் தத்தைச் சுற்ற நடத்துஞ்
சிறைவிடுஞ் சொர்க்கத் துச்சுர ரைக்கங் கையில்வாழும்

சிறுவனென் றிச்சைப் பட்டு பஜிக்கும்
படிபெரும் பத்திச் சித்ர கவித்வஞ்
சிறிதுமின் றிச்சித் தப்பரி சுத்தம் பிறவாதே

பரிகரஞ் சுற்றத் தக்கப்ர புத்வம்
பதறியங் கட்டப் பட்டனர் தத்வம்
பலவையுங் கற்றுத் தர்க்க மதத்வம் பழியாதே

பரபதம் பற்றப் பெற்ற எவர்க்கும்
பரவசம் பற்றிப் பற்றற நிற்கும்
பரவ்ரதம் பற்றப் பெற்றிலன் மற்றென் துயர்போமோ

சரியுடன் துத்திப் பத்திமு டிச்செம்
பணதரங் கைக்குக் கட்டிய னெட்டன்
தனிசிவன் பக்கத் தற்புதை †பற்பந் திரிசூலம்

தரிகரும் பொக்கத் தக்கமொ ழிச்சுந்
தரியரும் பிக்‡கப் பித்தத னத்தந்
தரிசுரும் பிக்குப் பத்மைபெ வர்க்குந் தெரியாத

* கயமெட்டும்-அட்டதிக்குயானைகளும் † பற்பம்-திருநீறு. ‡ கப்பித்த-கிளைத்த.

பெரிய*பண் டத்தைச் சத்திய பித்தன்
பிரிதியுண் கற்புப் பச்சையெ றிக்கும்
ப்ரபையள்தண் டிற்கைப் பத்மமடப்பெண் கொடிவாழ்வே

பிரமாண் டத்தைத் தொட்டதொர் வெற்பும்
பிளவிடுஞ் சத்திக் கைத்தல நித்தம்
பெருமிதம் பெற்றுக் கச்சியில் நிற்கும் பெருமாளே. (௬)

---

643. புனமடந் தைக்குத் தக்க புயத்தன்
குமரனென் †றெத்திப் பத்தர் துதிக்கும்
பொருளைநெஞ் சத்துக் கற்பனை முற்றும் பிறிதேதும்

புகலு‡மெண் பத்தெட் டெட்டியல் தத்வம்
சகலமும் பற்றிப் பற்றற நிற்கும்
பொதுவை§யென் றொக்கத் தக்கதொ ரத்தந் தனைநாளும்

சினமுடன் தர்க்கித் துச்சிலு கிக்கொண்
‖டறுவரும் கைக்குத் திட்டொரு வர்க்குந்
தெரிவருஞ் சத்யத் தைத்தெரி சித்துன் செயல்பாடித்

திசைதொறுங் கற்பிக் கைக்கினி யற்பந்
திருவுளம் பற்றிச் செச்சை மணக்குஞ்
சிறுசதங் கைப்பெற் பத்ம மெனக்கென் றருள்வாயே

கனபெருந் தொப்பைக் கெட்பொரி யப்பம்
கனிகிழங் ¶கிக்குச் சர்க்கரை $முக்கண்
கடலைகண் டப்பிப் பிட்டொடு மொக்குந் திருவாயன்

கவளதுங் கக்கைக் கற்பக முக்கண்
திகழுநங் கொற்றத் தொற்றை மருப்பன்
கரிமுகன் சித்ரப் பொற்புகர் வெற்பன் தனையீனும்

பனவி0யொன் றெட்டுச் சக்ரத லப்பெண்
கவுரிசெம் பொற்பட் டுத்தரி யப்பெண்
பழையவண் டத்தைப் பெற்ற மடப்பெண் பணிவாரைப்

பவதரங் கத்தைத் தப்ப நிறுத்தும்
பவதிகம் பர்க்குப் புக்கவள் பக்கம்
பயில்வரம் பெற்றுக் கச்சியில் நிற்கும் பெருமாளே. (௭)

---

* பண்டத்தை-பண்தத்தை † எத்தி-எத்தி. ‡ எண்பத்தெட்டு எட்டு-௯௯. § என்று-சூரியன். ‖ அறுவரும்-அறுவகைச் சமயத்தாரும். ¶ இக்கு-கரும்பு. $ முக்கண்-தேங்காய். 0 ஒன்றெட்டுச்சக்கரம் நவகோணசக்கரம்.

644. கனிதருங் *கொக்குக் †கட்செவி வெற்பும்
பழநியுந் தெற்குச் சற்குரு வெற்புங்
கதிரையுஞ் சொற்குட் பட்டதிருச்செங் கிலும்வேலும்

கனவிலுஞ் செப்பத் தப்பு மெனைச்சங்
கடவுடம் புக்குத் தக்கவ னைத்துங்
களவுகொண் டிட்டுக் கற்பனை யிற்கண் சுழல்வேனைப்

புனிதனம் பைக்குக் கைத்தல ரத்னம்
பழையகங் கைக்குற் றப்புது முத்தம்
புவியிலன் றைக்கற் றெய்ப்பவர் வைப்பென் றருகாவெப்

பொழுதும்வந் திக்கைக் கற்ற வனைப்பின்
பிழையுடன் பட்டுப் பத்தருள் வைக்கும்
பொறையையென்செப்பிச்செப்புவதொப்பொன் றுளதோதான்

‡அனனியம் பெற்றற் றற்றொரு பற்றுந்
தெளிதருஞ் சித்தர்க் குத்தெளி சிற்கொந்
தமலைதென் கச்சிப் பிச்சிம லர்க்§கொந் தளபாரை

‖அறவிநுண் பச்சைப் பொற்கொடி கற்கண்
டமுதினுந் தித்திக் கப்படு சொற்கொம்
பகிலவண் டத்துற் பத்திசெய் முத்தின் பொலமேரு

தனிவடம் பொற்புப் பெற்றமு கைக்குன்
றிணைசுமந் தெய்க்கப் பட்ட நுசுப்பின்
தருணிசங் குற்றுத் தத்துதி ரைக்கம் பையினூடே

தவமுயன் றப்பொற் புப்¶படி கைக்கொண்
டற$மிரண் டெட்டெட் டெட்டும்வ ளர்க்கும்
தலைவிபங் கர்க்குச் சத்ய முரைக்கும் பெருமாளே. (அ)

---

* கொக்கு-மாமரம். † கட்செவிவெற்பு-திருச்செங்கோடு. ‡ அனனியம் - அன்னியமின்மை. § கொந்தளபாரை - கூந்தலாகிய பாரத்தையுடையவள். ‖ அறவி-தர்மத்தை வளர்ப்பவள். ¶ படி-அறுநாழிநெல். படி கைக்கொண்டதைக் காஞ்சிப் புராணம் தழுவக்குழைந்த படலத்திற் காண்க. $ இரண்டெட்டு-பதினாறு, எட்டெட்டு-பதினாறு, ஆக முப்பத்திரண்டு.

645. செறிதரும் *செப்பத் துற்பல வெற்பும்
பிறிதுமங் கத்தைக் குற்ற விருப்புஞ்
சிகரிதுண் டிக்கக் கற்ற தனிச்செஞ் சுடர்வேலும்

திரள்புயங் கொத்துப் பட்ட வனைத்துந்
தெளியநெஞ் சத்துப் புற்று மயக்கந்
திரள்ப்பிரபஞ் சத்தைப் †புற்புத மொக்கும் படிநாடும்

அறிவறிந் தத்தற் கற்றது செப்புங்
கடவுளன் பத்தர்க் கச்சம றுத்தன்
பருள்பவன் பொற்புக் கச்சியுள் நிற்கும் பெருமாளென்

றவிழுமன் புற்றுக் கற்றும னத்தின்
செயலொழிந் தெட்டப் பட்டந னைச்சென்
றடைதரும் பக்வத் தைத்தமி யெற்கென் றருள்வாயே

குறியவன் செப்பப் பட்ட எவர்க்கும்
பெரியவன் கற்பிக் கப்படு சுக்ரன்
குலைகுலைந் துட்கச் சத்ய‡ மிழற்றுஞ் §சிறுபாலன்

குதலையின் சொற்குத் தர்க்க முரைக்குங்
கனகனங் கத்திற் குத்தி நிணச்செங்
குடர்பிடுங் கித்திக் குற்ற முகச்சிங் கமுராரி

பொறிவிடுந் துத்திக் கட்செவி யிற்கண்
துயில்கொளுஞ் சக்ரக் கைக்கிரி சுத்தம்
புயலெனும் பொற்புப் பெற்ற நிறத்தன் சகதாதை

புனிதசங் கத்துக் கைத்தல நிர்த்தன்
‖ பழையசந் தத்தைப் பெற்ற மடப்பெண்
புகலு ¶கொண் டற்குச் சித்தி யளிக்கும் பெருமாளே. ()

---

* செப்பத்து உற்பலவெற்பு - செங்கழுநீர்மலை, திருத்தணிகை. † புற்புதம்-நீர்க்குமிழி. ‡ மிழற்றும்-சொல்லும், § சிறுபாலன்-பிரகலாதன். ‖ பழைய சந்தத்தைப் பெற்ற மடப்பெண் என்றது, அரனுடைய சத்தியே அரி ஆதலால் அந்தப் பூர்வ நிலைமையைக் குறித்தது. இதை "அரியலால் தேவியில்லை ஐயனையாறனார்க்கே" என்னும் தேவாரத்தாலும் உணர்க. ¶ 'கொண்டற்குச் சித்தியளிக்கும் பெருமாள்" என்றது, ஷண்முகக்கடவுள் திருஞானசம்பந்த சுவாமிகளாய்த் திரு அவதாரஞ்செய்துற்ற காலத்தே கச்சியில் தவஞ்செய்து கொண்டிருந்த விஷ்ணு மூர்த்திக்கு அனுக்கிரகஞ் செய்ததை. இக்கதை காஞ்சிப்புராணம் திருமேற்றளிப் படலத்திற் கண்டது.

646. கறையிலங் குக்ரச் சத்தித தரிக்குஞ்
சரவணன் சித்தத் தூக்குளொ ளிக்குங்
கரவடன் கொற்றக் *குக்குட வத்தன் தனிவீரக்

கழலிடும் பத்மக் கட்செவி வெற்பன்
பழனிமன் கச்சிக் கொற்றவன் மற்றுங்
கடகவஞ் சிக்குக் கத்தனெ னச்செந் தமிழ்பாடிக்

குறையிலன் புற்றுக் குற்றம றுக்கும்
†பொறைகள் ‡நந் தற்பப் புத்தியை விட்டென்
குணமடங் கக்கெட் டுக்குண மற்றென் றிலதான

குணமடைந் தெப்பற் றுக்களு மற்றுங்
குறியொடுஞ் சுத்தப் பத்தரி ருக்குங்
குருபதஞ் சித்திக் கைக்கருள் சற்றுங் கிடையாதோ

பிறைகரந் தைக்கொத் துப்பணி மத்தந்
தலையெலும் பப்புக் கொக்கிர கக்கம்
பிரமனன் றெட்டற் கற்றதி ருக்கொன் றையுவேணிப்

பிறவுநின் றொக்கத் தொக்கும ணக்குஞ்
சரணியம் பத்மக் கைக்கொடி முக்கண்
பெறுகரும் பத்தக் கத்தருள் நற்பங் கயவாவித்

திறைகொளுஞ் சித்ரக் குத்துமு கைக்கொம்
பறியுமந் தத்தைக் கைக்கக மொய்க்குந்
த்ரிபுரைசெம் பட்டுக் கட்டு§நு சுப்பின் திருவான

தெரிவையந் தர்க்கிச் சத்தியெ வர்க்குந்
தெரிவருஞ் சுத்தப் பச்சைநி றப்பெண்
சிறுவதொண் டர்க்குச் சித்திய ளிக்கும் பெருமாளே. ()

---

647. அரியயன் ‖புட்பிக் கக்குழு மிக்கொண்
டமரர்வந் திக்கத் தட்டுரு வச்சென்
றவுணரங் கத்தைக் குத்திமு றித்தங் கொருகோடி

---

* குக்குடம் - கோழி. † பொறை - பெருந்தன்மை. ‡ நந்த அற்பப் புத்தியை விட்டு எனப்பிரிக்க. நந்த - விர்த்தியாக. § நுசப்பு - இடை. ‖ புட்பிக்க - வாய்மலர்ந்து தங்கள் தங்கள் குறைகளைக்கூற.

அலைகைநின் றுருத்தித் *தித்திய றுத்தும்
பலவியங் கொட்டச் †சக்கடி கற்றந்
தரியுடன் பற்றிக் ‡குச்சரி மெச்சும் படிபாடிப்

பரிமுகங் கக்கச் செக்கண்வி ழித்தும்
பவுரிகொண் டெட்டுத் திக்கையு டைத்தும்
படுகளம் புக்குத் தொக்குந டிக்கும் படிமோதிப்

படைபொருஞ் சத்திப் பத்மநி னைத்துஞ்
சரவணன் கச்சிப் பொற்ப னெனப்பின்
பரவியுஞ் சித்தத் துக்குவ ரத்தொண் டடைவேனோ

பெரியதண் §செச்சைக் கச்சணி வெற்பும்
சிறியவுஞ் சிக்கொத் தெய்த்தநு சுப்பும்
ப்ரிதியொழிந் தொக்கக் ‖கைக்கிளை ¶துத்தங் குரலாதி

பிரிவில்கண் டிக்கப் பட்டவு ருட்டும்
கமுகமுஞ் சிற்பச் சித்ரமு ருக்கும்
பிரதியண் டத்தைப் பெற்றருள் சிற்றுந் தியும்நீலக்

கரியகொண் டற்கொப் பித்தக துப்புந்
திலதமுஞ் செப்பொற் பட்டமு முத்தின்
கனவடங் கட்டப் பட்டக ழுத்துந் திருவான

கருணையுஞ் சுத்தப் பச்சைவ னப்புங்
கருதுமன் பர்க்குச் சித்திய ளிக்குங்
கவுரியம் மைக்குப் புத்ரஎ வர்க்கும் பெருமாளே. (கக)

---

648. தசைதுறுந் தொக்குக் கட்டளை சட்டஞ்
சரியவெண் கொக்குக் கொக்கந ரைத்தந்
தலையுடம் பெய்த்தெற் புத்தளை நெக்கிந் ரியமாறித்

தடிகொடுந் திக்குத் தப்பந டக்கும்
தளர்வுறுஞ் சுத்தப் பித்தவி ருத்தன்
தகைபெறும் பற்கொத் துக்கள னைத்துங் கழலாநின்

---

* தித்தியறுத்தல் - தாளச்சதியறுத்தல். † சக்கடி-பரிகாசம். ‡ குச்சரி ஓர் பண். § செச்சை - குங்குமக்குழம்பு. ‖ கைக்கிளை, ¶ துத்தம் - சுரக்ஞான முறைப்படி எழுவகை இசையி னெவ்வொன்று.

*றசலருஞ் செச்செச் செச்செயெ னச்†சந்
ததிகளும் சிச்சிச் சிச்சியெ னத்தங்
‡கரிவையும் துத்துத் துத்துவெ னக்கண் டுமியாமல்

தவருநிந் திக்கத் தக்கபி றப்பிங்
§கலமலஞ் செச்சைச் சித்ரம ணித்தண்
டையாவிந் தத்திற் புக்கடை தற்கென் றருள்வாயே

‖குசைமுடிந் தொக்கப் ¶பக்கரை யிட்டெண்
டிசையினுந் தத்தப் $புத்தியை நத்துங்
குரகதங் கட்டிக் கிட்டிந டத்தும் ○கதிர்நேமிக்

குலரதம் புக்கொற் றைக்கணை யிட்டெண்
டிரிபுரஞ் சுட்டுக் கொட்டை பரப்புங்
குரிசில்வந் திக்கக் கச்சியில் நிற்குங் கதிர்வேலா

திசைமுகன் தட்டுப் பட்டெழ **வற்குஞ்
சிகரியுங் குத்துப் பட்டுவி ழத்தெண்
டிரை ††யலங் கத்துப் புக்குல விச்சென் றெதிரேறிச்

சிரமதுங் கப்பொற் கட்டிகை யிட்டன்
றவுணர்நெஞ் சிற்குத் திக்கறை கட்கஞ்
சிதறிநின் றெட்டிப் பொட்டெழ வெட்டும் பெருமாளே.

649\. புரைபடுஞ் செற்றக் குற்றம னத்தன்
தவமிலன் சுத்தச் சத்யவ சத்யன்
புகலிலன் சுற்றச் செத்தையுள் நிற்குந் துரிசாளன்

பொறையிலன் கொத்துத் தத்வவி கற்பஞ்
சகலமும் பற்றிப் பற்றற நிற்கும்
பொருளுடன்பற்றுச்சற்றுமில்‡‡வெற்றன் கொடியேனின்

கரையறுஞ் சித்ரச் சொற்புகழ் கற்குங்
கலையிலன் கட்டைப் புத்தியன் மட்டன்
கதியிலன் செச்சைப் பொற்புய வெற்புங் கதிர்வேலும்

---

* அசலர் - உலகோர். † சந்ததி - பிள்ளைகள். ‡ அரிவை - மனைவி. § அலம் அலம் - போதும் போதும். ‖ குசை - கடிவாளம். ¶ பக்கரை - அங்கவடி. $ புத்தியை நத்துங் குரகதம் - வேதப்பரி. ○ கதிர்நேமி - சூரிய சந்திரர்களாகிய சக்கரம். ** வற்கும் - வலிமை கொள்ளும். †† அலங்கம் - கொத்தளம். ‡‡ வெற்றன் - வீணன்.

கதிரையுஞ் சக்ரப் பொற்றைய மற்றும்
பதிகளும் பொற்புக் கச்சியு மூற்றுங்
கனவிலுஞ் சித்தத் திற்கரு திக்கொண் டடைவேனே

*குரைதருஞ் சுற்றுச் சத்தசமுத்ரங்
கதறிவெங் துட்கக் கட்புர துட்டன்
குலமடங் கக்கெட் டொட்டொழியச்சென் றொருநேமிக்

குவடொதுங் கச்சொர்க் கத்தரி டுக்கங்
கெடநடுங் கத்திக் கிற்கிரி வர்க்கங்
†குலிசதுங் கக்கைக் ‡கொற்றவ னத்தங் குடியேறத்

தரைவிசும் பைச்சிட் டித்தவி ருக்கன்
சதுர்முகன் சிட்சைப் பட்டொழி யச்சந்
ததமுவந் திக்கப் பெற்றவர் நத்தம் பகையோடத்

தகையதண் டைப்பொற் சித்ரவி சித்ரந்
தருசதங் கைக்கொத் தொத்துமு ழக்குஞ்
சரணகஞ் சத்திற் பொற்கழல் கட்டும் பெருமாளே. ()

---

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தந்ததான.

650. சலமலம் விட்டத் தடம்பெ ருங்குடில்
சகலவி னைக்கொத் திருந்தி டும்படி
சதிர வுறுப்புச் §சமைந்து வந்தொரு தந்தைதாயும்

தரவரு பொய்க்குட் கிடந்த கந்தலில்
உறையுமு யிர்ப்பைச் சமன்து ரந்தொரு
தனியிலி ழுக்கப் படுந்||த ரங்கமும் வந்திடாமுன்

பல ¶வுரு வத்தைப் பொருந்தி யன்றுயர்
படியுநெ ளிக்கப் படர்ந்த வன்கண
படமயில் புக்குத் துரந்து கொண்டிகல் வென்றிவேலா

பரிமள மிக்கச் சிவந்த நின்கழல்
பழுதற நற்சொற் றெரிந்து மன்பொடு
பகர்வதி னிச்சற் றுகந்து தந்திட வந்திடாயோ

---

* குரைதரும் - ஒலிக்கின்ற. † குலிசதுங்கக்கைக்கொற்றவன் - வச்சிராயுதப்படைகொண்ட இந்திரன். ‡ கொற்றவன் நத்தம் எனப்பிரிக்க. § சமைந்து - உவந்து என்க. || தரங்கம் - ஆபத்து. ¶ உருவம் -வர்ணம்.

சிலையுமெ னப்பொற் சிலம்பை முன்கொடு
சிவமய மற்றுத் திடங்கு லைந்தவர்
திரிபுர மத்தைச் சுடுந்தி னந்தரி திண்கையாளி

திருமகள் கச்சுப் பொருந்தி டுந்தன
தெரிவையி ரக்கத் துடன்பி றந்தவள்
திசைகளி லொக்கப் படர்ந்தி டம்பொரு கின்றஞானக்

கலைகளை ணக்கொத் தடர்ந்து வம்பலர்
நதிகொளா கத்திற் பயந்து கம்பர்மெய்
கருகஇ டத்திற் கலந்தி ருந்தவள் கஞ்சபாதம்

கருணைமி குத்துக் கசிந்து ளங்கொடு
கருதும வர்க்குப் பதங்கள் தந்தருள்
கவுரிதி ருக்கொட் டமர்ந்த இந்திரர் தம்பிரானே. (கச)

---

651. தலை*வல யத்துத் தரம்பெ றம்பல
புலவர்ம திக்கச் சிகண்டி குன்றெறி
தருமயில் செச்சைப் புயங்†க யங்குற வஞ்சியோடு

தமனிய முத்துச் சதங்கை கிண்கிணி
தழுவிய செக்கச் சிவந்த பங்கய
சரணமும் வைத்துப் பெரும்ப்ர பந்தம்வி ளம்புகாளப்

புலவனெ னத்தத் துவந்த ரந்தெரி
தலைவனெ னத்தக் கறஞ்செ யுங்குண
புருஷனெ னப்பொற் பதந்த ருஞ்சன னம்பெறுதோ

‡பொறையனெ னப்பொய்ப் ப்ரபஞ்ச மஞ்சிய
துறவனெ னத்திக் கியம்பு கின்றது
புதுமைய லச்சிற் பாம்பொ ருந்துகை தந்திடாதோ

குல§சயி லத்துப் பிறந்த பெண்கொடி
உலகடை யப்பெற் றவுந்தி யந்தணி
குறைவற முப்பத் திரண்ட றம்புரி கின்றபேதை

குணதரி சக்ரப் ரசண்ட சங்கரி
கணபண ரத்நப் புயங்க கங்கணி
குவடுகு னித்துப் புரஞ்சு டுஞ்சின வஞ்சிநீலி

---

* வலயம் - அகன்றபூமி. † கயம் குறவஞ்சி - தெய்வானை, வள்ளி.
‡ பொறையன்-சாத்வீகன். § சயிலம்-மலை.

கலபவி சித்ரச் சிகண்டி சுந்தரி
கடியவி டத்தைப் பொதிந்த கந்தரி
கருணைவி ழிக்கற் பகந்தி கம்பரி எங்களாயி

கருதிய பத்தர்க் கிரங்கு மம்பிகை
சுருதிது திக்கப் படுந்த்ரி யம்பகி
கவுரிதி ருக்கோட் டமர்ந்த இந்திரர் தம்பிரானே. (௧௫)

---

தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத்
தனத்தத்தத் தனத்தத்தத் தனதான.

652. இதத்துப்பற் றிகழ்த்துப்பற் றிருட்பொக்கக் கருத்திட்டத்
தியக்கத்திற் றியக்குற்றுச் சுழலாதே

எலுப்புச்சுக் கிலக்கத்தத் தடித்*தொக்குக் கடத்தைப்பெற்
றெடுத்துப்பற் றடுத்தற்பத் துழலாதே

†சுதத்தத்தத் சதத்தத்தப் பதத்தர்க்குற் றவற்றைச்சொற்
றுவக்கிற்பட் டவத்தைப்பட் டயராதே

துணைச்செப்பத் தலர்க்கொத்துற் பலச்செச்சைத் தொடைப்பத்திக்
கடப்பப்பொற் கழற்செப்பித் தொழுவேனோ

கொதித்துக்குத் திரக்கொக்கைச் சதித்துப்பற் றிகைக்குட்பொற்
குலத்தைக்குத் திரத்தைக்குத் தியவேலா

குறத்தத்தைக் கறத்‡தத்திக் கு§முத்தத்தத் தமொக்||கிக்குக்
குலத்துக்குக் குடக்கொற்றக் கொடியோனே

கதச்சுத்தச் சுதைச்சித்ரக் களிற்றுக்கொற் றவற்குக்கற்
பகச்சொர்க்கப் புரப்பொற்பைப் புரிவோனே

கடுக்கைக்கட் செவிக்கற்றைச் சடைப்பக்கக் கொடிக்கற்புக்
கடற்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே (௧௬)

---

* தொக்குக்கடம் - தோல்போர்த்த உடல். † சுத தத் தத் சதத்து அத்த பதத்தர் - சுத்தமாகிய அந்தந்தசத்தத்துக்கும் அர்த்தம் விசாரிக்கும் இலக்கணிகள். ‡ அத்தி - தெய்வானை. § முத்த அத்தத்து அம் ஒக்கும்-முத்தாபரண மணிந்த தோள்களின் அழகுக்கு ஒப்பாகும். || இக்குக்குலத்து கரும்புக்கு ஒத்த குலமாகிய மூங்கிற் காம்பையுடைய.

653. எனக்குச்சற் றுனக்குச்சற் றெனக்*கத்தத் தவர்க்கிச்சைப்
பொருட்பொற்றட் டிடிக்கைக்†குக் குடில்மாயம்
எனக்கட்டைக்கிடைப்பட்டிட் டனற்சுட்டிட் டடக்கைக்குப்
பிறக்கைக்குத் தலத்திற்புக் கிடியாமுன்
தினைக்குட்சித் திரக்கோச்சைக் குறத்தத்தைத் தனத்தைப்பொற்
பெறச்செச்சைப் புயத்தொப்பித் தணிவோனே
செருக்கிச்சற்‡றுறுக்கிச்சொற் பிரட்டத்துட் டரைத்தப்பித்
திரட்டப்பிக் கழற்செப்பத் திறல்தாராய்
§பனைக்கைக்கொக் கனைத்தட்டுப் படக்குத்திப் படச்‖சர்ப்பப்
பணைத்¶துட்கக் கடற்றுட்கப் பொரும்வேலா
பரப்பற்றுச் சுருக்கற்றுப் பதைப்பற்றுத் திகைப்பற்றுப்
பலிப்பப்பத் தருக்கொப்பித் தருள்வாழ்வே
கனிக்குத்திக் கனைத்துச்சுற் றிடப்பச்சைக் கனப்பக்ஷிக்
கிடைப்புக்குக் களிப்புக்குத் திரிவோனே
கலிக்கொப்பிற் சலிப்பற்றுக் கதிக்கொத்திட் டெழிற்சத்திக்
கடற்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே. ()

654. இறைச்சிப்பற் றிரத்தத்திட் டிசைக்கொக்கப் பரப்பப்பட்
டெலுப்புக்கட் டளைச்சுற்றிச் சுவர்கோலி
எடுத்துச்செப் பெனக்கட்டிப் புதுக்குப்புத் தகத்திற்புக்
கெனக்குச்சற் றுனக்குச்சற் றெனுமாசைச்
சிறைக்கொத்திப் பிறப்பிற்பட் டுறக்கச்சொப் பனத்துற்றுத்
திகைக்கப்பட் டவத்தைப்பட் டுழலாதுன்
திருப்பத்மத் திறத்தைப்பற் றுகைக்குச்சித் திரத்தைச்சொற்
$றிதக்கொற்றப் புகழ்ச்செப்பித் திரிவேனோ
பிறைச்செக்கர்ப்புரைக்கொத்துச் சடைப்பச்சைக் கொடிக்கிச்சைப்
பிறக்குற்றத் திருப்பக்கச் சிவநாதர்
பெருக்கப்புத் தடைக்கைக் °கற் பகத்தொப்பைக்கணத்துக்குப்
பிரச்சித்தக் கொடிக்குக்கட் கொடியோனே

* அத்தத்தவர் - பொருட்பெண்டிர், விலைமாதர். † கு - சிறுமை. ‡ உறுக்கி - கோபித்து § பனைக்கைக்கொக்கன் - தாருகாசுரன். ‖ சர்ப்பப்பணம்-பணமுடிதரித்த ஆதிசேடன். ¶ துட்க-அஞ்ச. $ திதம் நிலைமை. ° கற்பகத்தொப்பைக் கணம்-விநாயகருடைய வயிறுபோலப்பருத்த வயிற்றையுடைய பூதகணம்.

பறைக்கொட்டிக் களைச்சுற்றக் குறட்செக்கட் கணத்திற்குப்
பலிக்குப்பச் சுடற்குத்திப் பகிர்வேலா
பணப்பத்திக் கணத்துத்திப் படுக்கைக்கச் சபத்திச்சைப்
படுக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே (௧அ)

---

655. கடத்தைப்பற் றெனப்பற்றிக் கருத்துற்றுக் களித்திட்டுக்
கயற்கட்பொற் பிணைச்சித்ரத் தனயாதர்
கலைக்குட்பட் டறக்கத்திச்சலித்துக்* கட்டளைச்சொற்பொய்த்
திரைக்குட்பட் டறச்செத்திட் டுயிர்போனால்
எடுத்துக்கொட் டிடக்கட்டைப் படத்தெட்டத் தணற்றட்டக்
கொளுத்திச்சுற் றவர்ப்பற்றற் றவர்போமுன்
இணக்கிப்பத் திமைச்செச்சைப் பதத்தைப்பற் றுகைக்குச்சொற்
றமிழ்க்கொற்றப் புகழ்ச்செப்பித் திரிவேனோ
அடைத்திட்டுப் புடைத்துப்பொற் பதச்சொர்க்கத் தனைச்சுற்றிட்
டலைப்புப்பற் றெனச்சொற்றிட் டறுகூரை
அடித்துச்செற் றிடித்துப்பொட் டெழப் †பொர்ப்புப் படக்குத்திட்
டலைத்துச்சுற் றலைத்தெற்றுக் கடல்மாயப்
புடைத்திட்டுப் படிக்குட்செற் றடப்புக்குக் கதத்துக்கக்
கயிற்கொக்கைப் படக்குத்திப் பொருவோனே
புனத்திற்பொற் குறத்திக்குப்புணர்க்கொத்தப் ‡ பசப்பெத்திப்
புணர்க்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே (௧௯)

656. கருப்பற்றிப் பருத்தொக்கத் தரைக்குற்றிட் டுருப்பெற்றுக்
கருத்திற்கட் பொருட்பட்டுப் பயில்காலம்
கணக்கிட்டுப் பிணக்கிட்டுக் கதித்திட்டுக் கொதித்திட்டுக்
கயிற்றிட்டுப் பிடித்திட்டுச் சமனாவி
பெருக்கப்புத் தியிற்பட்டுப் புடைத்துக்கக் கிளப்பிற்பொய்ப்
பிணத்தைச்சுட் டகத்திற்புக் கனைவோரும்
§பிறத்தற்சுற்றமுற்றுற்றிட் டழைத்துத்||தொக்கறக்கத்துப்
பிறப்புப்பற் றறச்செச்சைக் கழல்தாராய்

---

* கட்டளை - கற்பனை. † பொர்ப்பு - பொருப்பு. ‡ பசப்பெத்தி - பல வேடமெடுத்திதம்பேசி. § பிறத்தற் சுற்றம் - பிறரையும் தம் சுற்றத்தாரையும். || தொக்கு - ஞாபகத்தாலுண்டாகும் துக்கம்.

பொருப்புக்கற் புரக்கச்சுத் தனப்பொற்புத் தினைப்பச்சைப்
புனக்கொச்சைக் குறத்தத்தைக் கினியோனே
புரத்தைச்சுட் டெரித்துப்பற் றலர்க்குப்பொற் பதத்துய்ப்பைப்
புணர்த்தப்பித் தனைக்கற்பித் தருள்வோனே
செருக்கக்*குக் கரைக்குத்திச் †செருப்புக்குப் பிடித்தெற்றிச்
சினத்திட்டுச் சிதைத்திட்டுப் பொரும்வீரா
திருத்தத்திற் புகற்சுத்தத் தமிழ்ச்செப்புத் ரயச்சித்ரத்
திருக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே. (௨௦)

657. கறுக்கப்பற் ‡றுவர்ப்பிட்டுச் சிரித்துச்சற் றுறுக்கிக்கட்
பிறக்கிட்டுப் படக்கற்பித் திளைஞோர்தம்
கழுத்தைச்சிக் கெனக்கட்டித் தனச்செப்புப் படக்குத்திட்
டுருக்கிக்கற் பழிக்கப்பொற் பெழுகாதல்
புறப்பட்டுக் களிக்கக்கற் புறத்தைப்பிட் டாக்கிப்பொற்
பணிக்கட்டிற் புறத்துற்றுப் புணர்மாதர்
பொருத்தத்தைத் தவிர்த்துச்சற் றிரட்சித்துப் புரப்பப்பொற்
பதத்தைப்பெற் றிருக்கைக்குப் பெறுவேனோ
திறற்கொக்கைப் படக்குத்திச் செருக்கிக்கொக் கரித்துச்சக்
கரிக்குப்புத் திரற்குற்றுத் தனிபூணச்
சினத்துப்பொற் பொருப்பைப்பொட் டழுத்தித்§திக்கரித்துப்புத்
திரத்தத்திற் சிரித்துற்றுப் பலபேய்கள்
பறிக்கப்பச் சிறைச்சிக்கட் கறிக்குப்பைச் சிரச்சிக்குப்
பரப்பொய்க்கட் டறப்புக்குப் பொருதோனே
பணிச்செச்சைத் தொடைச்சித்ரப் புயத்துக்ரப் படைச்சத்திப்
படைக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே. (௨௧)

தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
தத்தத் தத்தத் தனதான.

658. அற்றைக் கற்றைக் கொப்பித் தொப்பித்
தத்தத் தத்தத் தருவோர்தாள்
அர்ச்சித் திச்சித் தக்கத் தக்கத்
தொக்குத் திக்குக் குடில்பேணிக்

* குக்கரை - நாயினுங்கேடான அசுரரை. † செருப்புக்குப்பிடித்து - போர்க்களம்புகுந்து பிடித்து, அல்லது மிதியடிபடும்படி பிடித்து ‡ துவர் - ஓர்வகை நிறமுள்ள தூள். § திக்கரித்து - நிந்தித்து.

செற்றைப் புற்சொற் கற்றக் கற்றுச்
செத்துச் செத்துப் பிறவாதே
செப்பச் செப்பப் பச்சைப் பச்சைச்
செச்சைச் செச்சைக் கழல்தாராய்
துற்றுப் பிற்புக் குற்றக் கொக்கைத்
*துட்கத் †திட்கப் பொரும்வேலா
சுத்தப் பத்திச் சித்திச் ‡சொர்க்கச்
§சொர்க்கத் தத்தைக் கினியோனே
கற்றைப் பொற்றைப் பற்றக் குத்திக்
கத்தக் கத்தக் களைவோனே
கற்புச் சத்திப் பொற்புச் சத்திக்
கச்சிச் சொக்கப் பெருமாளே. (உ௨)

---

659. சுத்தச் சித்தத் தொற்பத் தர்க்குச்
சுத்தப் பட்டிட் $டமுறுதே
தொக்கப் பொக்கச் சிற்கட் சிக்குட்
சொற்குற் றத்துத் துறைநாடிப்
பித்தத் தைப்பற் றித்தைத் தற்றுற்
றுத்துக் கித்துப் பிணிமாதர்
பெட்டிற் கட்டுத் தட்டுப் பட்டுப்
பிற்பட் டிட்டுத் தளர்வேனோ
அத்தத் தத்திக் கத்தற் கெய்த்தத்
தத்திக் கத்துப் பலமீவாய்
அர்ச்சித் துப்பொற் செக்கொச் சைத்தத்
தைக்குச் செச்சைத் தொடைசூழ்வாய்
கத்தத் தித்தத் தத்திற் கொக்கைக்
கைத்தச் சத்திப் படையேவும்
கற்புச் சத்திப் பொற்புச் சத்திக்
கச்சிச் சொக்கப் பெருமாளே. (உ௩)

---

* துட்க - பயப்பட. † திட்க - திடுக்கிட. ‡ சொர்க்கம் - மார்பு.
§ சொர்க்கத்தை - தெய்வானை. $ அம்முறுதே - நலம்பெறுதே.

தத்தத் தத்தத் தனனத் தத்தத் தத்தத் தனனத்
தத்தத் தத்தத் தனனத் தனதான.

660. *கொக்குக் கொக்கத் தலையிற் பற்றுச் சிக்கத் தளகக்
கொத்துற் றுக்குப் பிணியுற் றவனுகிக்
குக்கிக் கக்கிக் கடையிற் பற்றத் துற்றுக் கழலக்
கொத்தைச் சொற்கற் றலகிற் பலபாஷை
திக்கித் திக்கிக் குளறிச் செப்பித் தப்பிக் கொடுபொய்ச்
செற்றைச் சட்டைக் குடிலைச் சுமைபேணும்
சிக்கற் றுட்குக் கருணைச் சுத்தச் சித்தித் தமிழைத்
திட்டத் துக்குப் புகலப் பெறுவேனோ
அக்கிட் டிக்கிட் டமருக் கொட்டிக் கிட்டிட் டெதிரிட்
†டத்ரத் தெற்றிக் கடுகப் பொருசூரன்
அச்சுக் கெட்டுப் படைவிட் டச்சப் பட்டுக் கடலுட்
புக்குப் பட்டுத் ‡துருமத் தடைவாகத்
தக்குத் திக்குத் தறுகட் டொக்குத் தொக்குற் றதுகட்
கைக்கொட் டிட்டிட் டுடல்சிற் கணமாடிச்
சத்திக் குத்தித் துடியிற் சத்திக் கக்கைச் சமர்செய்ச்
சத்திக் கச்சிக் குமரப் பெருமாளே. (உச)

---

தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
தத்தத் தனனத் தனதான.

661. தத்தித் தத்திக் கட்டப் பட்டுச்
சத்தப் படுமைக் கடலாலே
§சர்ப்பத் தத்திற் பட்டுக் கெட்டுத்
தட்டுப் படுமப் பிறையாலே
சித்தத் துக்குப் பித்துற் றுக்கச்
சித்ரக் கொடியுற் றழியாதே
செப்பக் கொற்றச் சிறப்பப் பத்திச்
செச்சைத் தொடையைத் தரவேணும்

---

* கொக்குக்கொக்க-நரைக்க. †அத்ரத்து-பாணத்தால். ‡துருமம்-மரம்.
§. சர்ப்பத்தத்து - கிரகணம்.

கொத்துத் திக்குப் பத்துட் புக்குக்
குத்திக் கிரியைப் பொரும்வேலா
கொச்சப் *பொச்சைப் பொற்பிற் பச்சைக்
கொச்சைக் குறவிக் கினியோனே
சுத்தப் பத்தத் தர்க்குச் சித்தத்
துக்கத் தையொழித் திடும்வீரா
சொர்க்கத் துக்கொப் புற்றக் கச்சிச்
சொக்கப் பதியிற் பெருமாளே. (உ௫)

☞ குறிப்பு:—இப்பாடலின் ஒவ்வோரடியிலும் இறுதிப்பாகத்தை எடுத்தமைக்கப் பிறிதொரு பாடலாமாறுகாண்க:—

சத்தப் படுமைக் கடலாலே தட்டுப் படுமப் பிறையாலே
சித்ரக் கொடியுற் றழியாதே செச்சைத் தொடையைத் தரவேணும்
குத்திக் கிரியைப் பொரும்வேலா கொச்சைக் குறவிக் கினியோனே
துக்கத் தையொழித் திடும்வீரா சொக்கப் பதியிற் பெருமாளே

---

தத்தத்தத் தத்தத் தத்தத்தத் தத்தத்
தத்தத்தத் தத்தத் தனதான.

662. பொக்குப்பைக் †கத்தத் தொக்குப்பைக் குத்துப்
பொய்த்தெத்துத் ‡தத்துக் குடில்பேணிப்
பொச்சைப்பிச் சற்பக் கொச்சைச்சொற் கற்றுப்
பொற்சித்ரக் கச்சுக் கிரியார்தோய்
துக்கத்துக் கத்திற் சிக்குப்பட் டிட்டுத்
துக்கித்துக் கெய்த்துச் சுழலாதே
சுத்தச்சித் தத்துப் பத்திப்பத் தர்க்கொத்
துச்சற்றர்ச் சிக்கப் பெறுவேனோ
திக்குத்திக் கற்றுப் §பைத்தத்தத் திக்குச்
செற் ‖பத்ரக் கொக்கைப் பொரும்வேலா
செப்பச்சொர்க் கத்துச் செப்பொற்றத் தைக்குச்
செச்சைக்கொத் தொப்பித் தணிவோனே

---

* பொச்சை - சிறுமலை. † கத்தம் - மலம். ‡ தத்து - ஆபத்து.
§ பை தத்து அத்தி - பசிய அலை மோதுகின்ற கடல். ‖ பத்திரம் - இலை.

*கக்கக்கைத் தக்கக் கக்கட்கக் கக்கிக்
கட்கத்தத் தர்க்குப் பெரியோனே
கற்றைப்பொற் றெத்தப் பெற்றப்பொற் சிறப்பக்
கச்சிக்குட் சொக்கப் பெருமாளே. (உக)

---

தனதத்தத் தனதத்தத் தனதத்தத் தனதத்தத்
தனதத்தத் தனதத்தத் தனதான.

663. அயிலப்புக் கயலப்புத் தலைமெச்சுற் பலநச்சுக்
க†ளூரத்தைக் கனவெற்புத் தனமேகம்
அளகக்கொத் தெனவொப்பிப் புளுகிச்சொற் பலகற்பித்
திளகிக்கற் புளநெக்குத் தடுமாறித்
துயில்விட்டுச் செயல்விட்டுத் துயர்வுற்றுக் கயர்வுற்றுத்
தொடியர்க்கிப் படிபெத்துச் சுழலாதே
சுருதிப்பொற் பொருள்சொக்கர்க் குரவிட்டுத் தமர்பற்றித்
தொழுசெச்சைச் சுழல்பற்றிப் பணிவேனோ
புயலத்தைக் குயில்தத்தைக் கிளைபுக்குத் துளைபச்சைப்
புனமுத்தைப் புணர்சித்ரப் புயவீரா
புரவிக்கொட் பிரதற்றத் திருள்திக்கிப் படிமட்கப்
புகல்பொற்குக் குடவெற்றிக் கொடியோனே
‡கயிலச்சுத் தரதத்துச் சயிலத்துத் தரநிற்கக்
§காணிச்சித் தருள்கச்சிப் பதியோனே
கடலிற்கொக் கடல்கெட்டுக் காமுட்கத் தாமுட்கப்
பொருசத்திக் கரசொக்கப் பெருமாளே (உஎ)

---

* கக்கு அக்கை தக்க அக்கக்கட்கு அக்கு அக்கிகட் கத்த அத்தர்-பிரமன் முதலியோர் சரீரத்தினின்றுங் கழன்ற எலும்பைத் தகுந்த தமது அங்கங்களுக்கு ஆபரணமாக்கிய அக்கினிக்கண்ணையுடைய கர்த்தராகிய பிதா. அங்கங்கட்கு என்பது அக்கக்கட்கு எனவும், ஆக்கு என்பது அக்கு எனவும் விகாரப்பட்டன. † உரத்தைக் கனவெற்ப - உரத்த + ஐ + கன + வெற்பு. ‡கயில்-விமானக் கொடுங்கை மேற்பாகம். §காணி-சிற்பவேலைசெய்யும் தபசி.

தத்தத் தனதான தத்தத் தனதான.

664. அற்றைக் கிரைதேடி அத்தத் திலுமாசை
பற்றித் தவியாத பற்றைப் பெறுவேனே
வெற்றிக் கதிர்வேலா வெற்பைத் துளைசீலா
கற்றற் றுணர்போதா கச்சிப் பெருமாளே. (உஅ)

தத்தத் தனதன தத்தத் தனதன
தத்தத் தனதன தனதான.

665. கச்சிட் டணிமுலை தைச்சிட் டுருவிய
மச்சக் கொடிமதன் மலராலும்
கச்சைக் கலைமதி நச்சுக் கடலிடை
அச்சப் படவெழு மதனாலும்
பிச்சுற் றிவளுள மெய்ச்சுத் தளர்வது
*சொச்சத் தரமல இனிதான
பிச்சிப் புதுமலர் †வைச்சுச் சொருகிய
செச்சைத் தொடையது தரவேணும்
பச்சைத் திருவுமை இச்சித் தருளிய
கச்சிப் பதிதனில் உறைவோனே
பற்றிப் பணிபவர் குற்றப் பகைகெட
உற்றுப் பொரவல கதிர்வேலா
இச்சித் தழகிய கொச்சைக் குறமகள்
மெச்சித் தழுவிய திருமார்பா
எட்டுக் குலகிரி முட்டப் பொடிபட
வெட்டித் துணிசெய்த பெருமாளே. (உகூ)

தனதன தானந்தன தனதன தானந்தன
தனதன தானந்தன தனதான.

666. ‡கமலரு சோகாம்பர முடி§நடு வேய்பூங்கணை
கலகமர் வாய்தோய்ந்தம ளியின்மீதே
களையற மீதூர்ந்‖தெழு மதனவி டாய்போம்படி
கனவிய வாரேந்தின இளநீர்தோய்ந்

* சொச்ச-சொல்ல. † வைச்சு-வைத்து. ‡கமலரு சோகாம்பரமுடி கமலம்-முதல்கணை. அரு அசோகு-நடுக்கணை. பரம் ஆம் முடி கனமான நீலோற்பலக் கடைக்கணை. § நடு ஏய் பூங்கணை-இவற்றிற்கு இடையாகும் மா, முல்லை என்னும் இருகணைகள் ஆகிய பஞ்சபாணங்கள். 'கமலம் × அரு அசோகு × ஆம்பரம் × முடி + நடு — ஏய்......கணை' எனப்பிரித்தும் பொருள் கொள்ளலாம், ‖ எழுமதன-எழு-அ மன்மதனுடைய.

தெமதுயிர் நீலாஞ்சன மதர்விழி யால் வாங்கிய
இவளுடன் மால்கூர்ந்திடும் அநுபோகம்
இனிவிட வேதாந்தப ரமசுக வீடாம்பொருள்
இதவிய பாதாம்புயம் அருள்வாயே

அமகர * ஆசாம்பர அதுகர ஏகாம்பர
† அது லன நீலாம்பரம் அறியாத
‡ அநகர நாளாங்கிதர் தழையுமை யாள்சேர்ந்தருள்
அறமுறு சீகாஞ்சியில் உறைவோனே

விமல$கி ராதாங்கனை தனகிரி தோய்காங்கெய
|| வெடிபடு தேவேந்திர னகர்வாழ்க
விரிகடல் தீமூண்டிட நிசிசரர் வேர்மாண்டிட
வினையற வேல்வாங்கிய பெருமாளே. (௩௦)

---

தனன தானன தத்தன தனதன
தானா தத்தத் தனதான.

667. கரும மானபி றப்பற வொருகதி
காணா தெய்த்துத் தடுமாறும்
கலக காரண துற்குண சமயிகள்
நானா வர்க்கக் கலைநூலின்

வரும நோகவி கற்புவி பரிதம
னோபா வத்துக் கரிதாய
மவுன பூரித சத்திய வடிவினை
மாலா மெற்குப் புகல்வாயே

தரும வீமவ ருச்சுன நகுலச
காதே வர்க்குப் புகலாகிச்
சமர பூமியில் விக்ரம வளைகொடு
நாளோர் பத்தெட் டினிலாளும்

---

* ஆசாம்பர-திகம்பர. † அதுல அனம் நீல அம்பரம் அறியாத - ஒப்பில்லாத அன்ன ரூபங்கொண்ட பிரமன் நீலநிறமுற்ற ஆகாயத்தில் முடிதேடியறியாத. ‡ அநகர் அம்நாள அங்கிதர்-பாபரகிதாது அழகிய முலைக்காம்பின் தழும்புடையவர். $ கிராத அங்கனை - வேடப்பெண். || வெடி-நறுமணம்.

குருமகி தலமுட் பட வுளமது
கோடா மறசத் ரியர்மாளக்
குலவு தேர்கட வச்சுதன் மருகசு
மாரா கச்சிப் பெருமாளே. (ருக)

---

தனதன தத்தத் தாந்த தானன
தனதன தத்தத் தாந்த தானன
தனதன தத்தத் தாந்த தானன தனதான.

668. கலகலெ னப்பொற் சேர்ந்த நூபுர
பரிபுர மொத்தித் தாந்த ஞமென
கரமல ரச்சிற் றுந்தொ மாடிய பொறியார்பைங்
கடிதட முற்றுக் காந்த ளாமென
இடைபிடி பட்டுச் சேர்ந்த ஆலிலை
கனதன பொற்பிட் டோங்கு மார்பொடு வடமாடச்
சலசல சச்சச் சேங்கை பூண்வளை
பரிமள பச்சைச் சேர்ந்து லாவிய
* சலசமு கத்துச் சார்ந்த வாள்விழி சுழலாடத்
தரளந கைப்பித் தாம்ப வாரிதழ்
குலமுகி லொத்திட் டாய்ந்த † வோதியர்
சரசமு ரைத்துச் சேர்ந்த தூவையர் உறவாமோ
திலதமு கப்பொற் காந்தி மாதுமை
எனையருள் வைத்திட் டாண்ட நாயகி
சிவனுரு வத்திற் சேர்ந்த பார்வதி சிவகாமி
திரிபுவ னத்தைக் காண்ட நாடகி
குமரிசு கத்தைப் பூண்ட காரணி
சிவைசுடர் சத்திச் சாம்ப வீயுமை அருள்பாலா
அலகையி ரத்தத் தோங்கி மூழ்கிட
நரிகழு குப்பிச் சேர்ந்து வாயிட
அசுரர்கு லத்தைக் காய்ந்த வேல்கரம் உடையோனே
அமரர்ம கட்குப் போந்த மால்கொளும்
விபுதகு றத்திக் காண்ட வாதினம்
அழகுசி றக்கக் காஞ்சி மேவிய பெருமாளே. (ருஉ)

* சலசம் - தாமரை. † ஓதியர் - கூந்தலோடு கூடியவர்.

தத்தா னத்தா தத்தா னத்தா
தத்தா னத்தத் தனதான.

669. கொத்தார் பற்கா லற்றே கப்பாழ்
* குப்பா யத்திற் செயல்மாறிக்
கொக்கா கிக்கூ னிக்கோல் தொட்டே
கொட்டா விக்குப் புறவாசி

தித்தா நிற்றூர் செத்தார் கெட்டே ன்
அஆஉஊ எனவேகேள்
† செற்றே சுட்டே விட்டே றிப்போ
மப்போ துத்துக் கமறாதே

நித்தா வித்தா ரத்தோ கைக்கே
நிற்பாய் கச்சிக் குமரேசா
நிட்டூ ரச்சூர் கெட்டோ டப்போர்
நெட்டோ தத்திற் பொருதோனே

முத்தா ரத்தோ ளிற் ‡ கோ டற்பூ
முட்டா திட்டத் தணிவோனே
முற்றா நித்தா அத்தா சுத்தா
முக்தா முத்திப் பெருமாளே. (ருரு)

---

தானத் தத்தத் தத்தன தத்தத் தனதான.

670. கோவைச் சுத்தத் துப்பத ரத்துக் கொடியார்தம்
கோலக் கச்சுக் கட்டிய முத்தத் தனமேவி
பாவத் துக்குத் தக்கவை பற்றித் திரியாதே
பாடப் பத்திச் சித்த மெனக்குத் தரவேணும்

மாவைக் குத்திக் கைத்தற எற்றிப் § பொரும்வேலா
மாணிக் கச்சொர்க் கத்தொரு ‖ தத்தைக் கினியோனே
சேவற் பொற்கைக் கொற்றவ கச்சிப் பதியோனே
தேவச் சொர்க்கச் சக்கர வர்த்திப் பெருமாளே. (ருச)

* குப்பாயம் - சட்டை, சரீரம். † செற்று - சென்று. ‡ கோடற்பூ - வெண்காந்தள் மலர். § பொரும் - போரிடும். ‖ தத்தை - தெய்வானை.

தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன தந்ததான.

971. சித்தி ரத்திலுமி குத்த பொற்பவள
மொத்த மெத்தஅழ குற்ற குத்தமுகை
சிற்ப சிற்பயிரொ ரொத்த சிற்றிடைய வஞ்சிமாதர்

சித்த மத்தனையு முற்ற ளப்பகடல்
மொய்த்த சிற்றுமண லுக்குமெட்டியது
சிக்கு மைக்குழல்கள் கத்து ரிப்பரிம ளங்கள்வீசப்

* பத்தி ரத்திலுமி குத்த கட்கயல்கள்
வித்து ருத்தநுவ ளைத்த நெற்றிவனை
பற்க ளைப்பளிரொ ளச்சி ரித்துமயல் விஞ்சைபேசிப்

பச்சைரத்நமயி லைப்பொ லத்தெருவி
லத்தி யொத்தமத மொத்து நிற்பர்வலை
பட்டு ழைத்து†குழி யுற்ற அத்தியென மங்குவேனோ

தத்த னத்தனன னத்த னத்தனன
தித்தி மித்திமிதி மித்தி மித்திமித
தக்கு டுக்குடுடு டுக்கு டுக்குடென சங்குபேரி

சத்த முற்றுகடல் திக்கு லக்கிரிகள்
நெக்கு விட்டுமுகி லுக்கு லர்ப்பமுடி
‡ சக்கிமுக்கியிட கட்க துட்டசுர ரங்கமாள

வெற்றி யுற்ற§கதிர் பத்தி ரத்தையரு
ளிச்சு ரர்க்கதிப திப்ப தத்தையுற
வித்த ளித்துமதி பெற்ற தத்தைமண முண்டவேலா

வெட்கி டப்பிரம னைப்பி டித்துமுடி
யைக்கு லைத்து‖நட லைச்செ ருக்கையழி
வித்த ரத்தர்புகழ் கச்சி யுற்றுமகிழ் தம்பிரானே. (௲)

* பத்திரம் - அம்பு. † குழி யுற்ற அத்தி - படுகுழியில் வீழ்ந்த யானை.
‡ சக்கிமுக்கிவிட - ஒன்றோடொன்று உரச. § கதிர் பத்திரம் - வேலாயுதம்.
‖ நடலை - வஞ்சனை.

தான தத்தனத் தான தானனத்
தான தத்தனத் தான தானனத்
தான தத்தனத் தான தானனத் தனதான.

672. சீசி முப்புரக் காடு நீறெழச்
சாடி நித்திரைக் கோசம் வேரறச்
சீவன் முத்தியிற் கூட வேகளித் தநுபூதி

சேர அற்புதக் கோல மாமெனச்
சூரி யப்புவிக் கேறி யாடுகச்
சீலம் வைத்தருட் டேறி யேயிருக் கறியாமற்

பாசம் விட்டுவிட் டோடிப் போனது
போது மிப்படிக் காகி லேனினிப்
பாழ்வ ழிக்கடைக் காம லேபிடித் தடியேனைப்

பாரடைக்கலக் கோல மாமெனத்
தாப ரித்து*நித் தார மீதெனப்
பாத பத்மநற்†போதை யேயெனக் கருள்வாயே

தேசில் துட்டநிட் டூர கோதுடைச்
சூரை வெட்டியெட் டாசை யேழ்புவித்
தேவர் முத்தர்கட் ‡கேத மேதவிர்த் தருள்வோனே

சீர்ப டைத்தழற் சூல மான்மழுப்
§பாணி வித்துருப் பாத னோர்புறச்
சீர்தி கழ்ப்புகழ்ப் பாவை யீனுபொற் குருநாதா

காசி முத்தமிழ்க் கூட‖லேழ்மலைக்
¶கோவ$லத்தியிற் கானoநான்மறைக்
காடு பொற்கிரிக் காழி யாரூர்பொற் புலிவேளூர்

காள அத்தியப் பால்சி ராமலைத்
தேச முற்றுறப் பூசை மேவிநற்
காம கச்சியிற் சால மேவுபொற் பெருமாளே. (௩௪)

---

* நித்தாரம்-நித்தியமாகிய ஆரம். † போதையே - புட்பத்தையே. ‡ ஏதம் - குறை. § பாணி - கரம். ‖ ஏழ்மலை - திருவேங்கடம் ¶ கோவல்-திருக்கோவலூர். $ அத்தியின்கானம்-திருஆனைக்கா o நான்மறைக்காடு-வேதாரணியம்.

தத்தனதனந்த தத்தனதனந்த
தத்தனதனந்த தனதான.

673. நச்சரவமென்று நச்சரவமென்று
நச்சுமிழ்களங்க மதியாலும்
நத்தொடுமுழங்க னத்தொடுமுழங்கு
* நத்திரைவழங்கு கடலாலும்
இச்சையுணர்வின்றி யிச்சையெனவந்த
இச்சிறுமிநொந்து மெலியாதே
எத்தனையுநெஞ்சில் எத்தனமுயங்கி
இத்தனையிலஞ்சல் எனவேணும்
பச்சைமயில்கொண்டு பச்சை† மறமங்கை
பச்சைமலையெங்கும் உறைவோனே
பத்தியுடனின்று பத்திசெயுமன்பர்
பத்திரமணிந்த கழலோனே
கச்சிவர்குரும்பை ‡ கச்சவர்விரும்பு
கச்சியிலமர்ந்த கதிர்வேலா
கற்பகவனங்கொள் கற்பகவிசும்பர்
§ கைத்தளை களைந்த பெருமாளே. (௩௭)

---

தன்ன தத்தன தனன தத்தன
தனன தத்தன தனதான.

674 ‖ படிறொழுக்கமு மடமனத்துள
படிபரித்துட னொடிபேசும்
பகடி கட்குள மகிழ மெய்ப்பொருள்
பலகொடுத்தற உயிர்வாடா
மிடியெனப்பெரு வடவை சுட்டிட
விதனமுற்றிட மிகவாழும்
¶ விரகு கெட்டரு நரகு விட்டிரு
வினையறப்பதம் அருள்வாயே
கொடியிடைக்குற வடிவி யைப்புணர்
குமர கச்சியில் அமர்வோனே

---

* நத்திரை - விசேஷதிரை † மறமங்கை - கொலைத்தொழில் புரியும் வேடக்குலத்துதித்த வள்ளிநாயகி! ‡ கச்சவர் - வெறுத்தவர். § கைத்தளை - கைவிலங்கு- ‖ படிறு - வஞ்சகம். ¶ விரகு - ஆசைநோய்.

* குரவு செச்சைவெண் முளரி புத்தலர்
குவளை முற்றணி திருமார்பா
பொடிப டப்பட நெடிய விற்கொடு
புரமெ ரித்தவர் குருநாதா
பொருதி ரைக்கடல் நிருத ரைப்படை
பொருது முக்கிய பெருமாளே. (௩௮)

---

தனதத்தத் தானத்தானன தனதத்தத் தானத்தானன
தனதத்தத் தானத்தானன தந்ததான.

675. மகுடக்கொப் பாடக்காதினில் நுதலிற்பொட் டேக்கோதிய
மயிரிற்சுற் †றோலைப்பூவொடு வண்டுபாட
வகைமுத்துச் சோரச்சேர்நகை இதழிற்சொற் சாதிப்பாரியல்
மதனச்சொற் பாடுக்கோகில ரம்பைமாதர்
பகடிச்சொற் கூறிப்போர்மயல் முகவிச்சைப் பேசிச்சீரிடை
பவளப்பட் டாடைத்தோளிரு கொங்கைமேலாப்
பணமெத்தப் பேசித்தூதிடு மிதயச்சுத் தீனச்சோலிகள்
பலரெச்சிற் காசைக்காரிகள் சந்தமாமோ
தகுடத்தத் தானத்தானன திகுடத்தித் தீதித்தோதிமி
தடுடுட்டுட் டாடப்பேரிகை சங்குவீணை
தடமிட்டுப் பாவக்கார்கிரி பொடிபட்டுப் போகச்சூரர்கள்
தலையிற்றிட் டாடப்போர்புரி கின்றவேலா
திகிரிப்பொற் பாணிப்பாலனை மறைகற் ‡புத் தேளப்பூமனை
சினமுற்றுச் §சேடிற்சாடிய கந்தவேளே
தினையுற்றுக் ‖காவற்காரியை மணமுற்றுத் ¶தேவப்பூவொடு
திகழ்கச்சித் தேவக்கோன்மகிழ் தம்பிரானே. (௩௯)

---

தத்தத்தத் தானனதானன தத்தத்தத் தானனதானன
தத்தத்தத் தானனதானன தனதான.

676. மக்கட்குக் கூறரிதானது கற்றெட்டத் தான்முடியாதது
மற்றொப்புக் கியாதுமொவ்வாதது மனதாலே

---

* குரவு - ஒருமணம். † ஓலைப்பூ - தாளம்பூ ‡ புத்தேள் - வானுலகத் தொன்றாகிய பிர்மலோகம். § சேடில்சாடிய - திரட்சியான தலையிற்குட்டிய. ‖ காவற்காரி-வள்ளிநாயகி. ¶ தேவப்பூ-தெய்வானை.

மட்டிட்டுத் தேடவொணாதது தத்வத்திற் கோவைபடாதது
மத்தப்பொற் போதுபகீரதி மதிசூடும்
முக்கட்பொற் பாளருசாவிய *அர்த்தக்குப் போதகமானது
முத்திக்குக் காரணமானது பெறலாகா
† முட்டர்க்கெட் டாததுநான்மறை எட்டிற்றெட்டாதெனவேவரு
முற்பட்டப் பாலையிலாவது புரிவாயே
செக்கட்சக் ராயுதமாதுலன் மெச்சப்புற் போதுபடாவிய
திக்குப்பொற் பூதரமேமுதல் வெகுரூபம்
சிட்டித்துப் பூதபசாசுகள் கைக்கொட்டிட் டாடயகோததி
செற்றுக்ரச் சூரனையார்பக முதுசோரி
கக்கக்கைத் தாமரை வேல்விடு செச்சைக்கர்ப் பூரபுயாசல
கச்சுற்றப் பாரபயோதர முலையாள்முன்
கற்புத்தப் பாதுலகேழையு மொக்கப்பெற் றாள்விளையாடிய
கச்சிக்கச் சாலையில்மேவிய பெருமாளே. (௬௭௰)

---

தத்தத் தத்தத் தனதான தத்தத் தத்தத் தனதான.

677. முட்டுப் பட்டுக்‡கதிதோறும் முற்றச் சுற்றிப் பலநாளும்
தட்டுப் பட்டுச் சுழல்வேனைச் சற்றுப் பற்றக் கருதாயோ
§வட்டப் புட்பத் தலமீதே வைக்கத் தக்கத் திருபாதா
‖கட்டத் தற்றத் தருள்வோனே கச்சிச் சொக்கப் பெருமாளே. ()

---

தந்த தாத்தன தன்ன தனந்தன தத்தத் தத்தத் தனதான.

678. வம்ப ரூச்சில கன்ன மிடுஞ்சம யத்துக் கத்துத் திரையாளர்
வன்க லாத்திரள் தன்னை யகன்றும னத்திற் பற்றற் றருளாலே
தம்¶ப ராக்கற நின்னை யுணர்ந்துரு கிப்பொற்பத்மக் கழல்சேர்வார்
தங்குழாத்தினி லென்னையு மன்பொடு வைக்கச் சற்றுக் கருதாயோ
வெம்ப ராக்ரம மின்னயில்கொண்டொரு வெற்புப் பொட்டுப் படமாசூர்
வென்ற பார்த்திப பன்னி ருதிண்புய வெட்சிச் சித்ரத் திருமார்பா
$கம்பராய்ப்பணி மன்னு புயம்பெறு கைக்குக் கற்புத் தவறாதே
கம்பையாற்றினிலன்னை தவம்புரிகச்சிச்சொக்கப்பெருமாளே. ()

---

*அர்த்தக்கு - அர்த்தத்துக்கு. † முட்டர் - அறிவிலாதவர். ‡ கதி தோறும்-தேவ, மனித, நரக, விலங்கு என்னும் நாற்கதிகளிலும். § வட்டப் புட்பத்தலம் - வட்டமாகிய இருதய கமலபீடம். ‖ கட்டத்து அற்றத்து - துன்பப்படுஞ் சமயத்தில். ¶பராக்கு - வேறுவகையிற் சிந்தனை. $ கம்பர்- மனதைக் கட்டுப்படுத்தினவர்.

தாந்தத்தன தானன தானன தாந்தத்தன தானன தானன
தாந்தத்தன தானன தானன தனதான.

679. வாய்ந்தப்பிடை நீடுகு லாவிய நீந்திப்*பது மாதியை மீதினி
லூர்ந்துற்பல வோடையில் நீடிய †உகள்சேலே
‡வார்ந்துப்பக ழீயெதி ராகிமை கூர்ந்துப்பரி யாவரி சேரவை
சேர்ந்துக்குழை யோடுச லாடிய விழியாலே
சாய்ந்துப்§பனீ யூணவரானபொ ‖லாய்ந்துப்¶பணி ஞரிருதாளினில்
வீழ்ந்திப்படி மீதினி லேசிறி தறிவாலே
சாந்தப்பிய மாமலே நேர்முகை சேர்ந்துப்$படி வீணினிலேவுயிர்
மாய்ந்திப்படி போகினு மோர்மொழி மறவேனே
சார்ந்தப்பெரு நீர்வெளமாகவெ பாய்ந்தப்பொழு தாருமிலாமலெ
காந்தப்பெரு நாதனுமாகிய ** மதாராலே
தாந்தக்கிட தாகிட தாகிட தோந்திக்கிட தோதிமி தோதிமி
சேஞ்செக்கண சேகெண சேகெண வெனதாளம்
காந்தப்பத மாறியு லாவுய ††ராந்தற்குரு நாதனுமாகியெ
போங்தெப்பெரு மான்முரு காவொரு பெரியோனே
காந்தக்கலு மூசியுமேயென ஆய்ந்துத்தமி ழோதிய சீர்பெறு
காஞ்சிப்பதி மாநகர் மேவிய பெருமாளே. (சஙு)

---

## திருக்கோயிலூர்.

இது திருக்கோயிலூர் ஸ்டேஷனிலிருந்து தெற்கே ஒரு
மைல் தூலவில் இருக்கிறது.

தானதானன தானன தானதானன தானன
தானதானன தானன் தனதான.

680. பாலநாரிகள் மாபட மாதர்வீணிக ளாணவ
பாவையாரிள நீரன முலையாலும்
பார்வையாமிகு கூரயி லாலுமாமணி யார்குழை
பாரகாரன வார்குழல் அதனாலும்

---

*பதும ஆதியை - தாமரை யென்னும் முதன்மையான மலரை †உகள் சேலே-பாய்கின்ற கெண்டைமீனே ‡வார்ந்து - போன்று. §பனீ ஊணவர் ஆன போல் - பானங்கள் உண்டவர் லாகிரி கொண்டதுபோல். ‖ ஆய்ந்து- மயங்கிச் சிறிது ஆராய்ந்து. ¶ பணிஞர் - இசைபாடும் பொதுமகளிர். $படி -படிந்து. **மதர்-களிப்பு. ††ஆந்தன்-அந்தன், சர்வசங்காரன்.

*சாவதாரவி தாரவி தார்தாரவித பூரவித
சாதபூரவி தாமதி முகமாலும்
சார்வதாவடி யேனிடர் வீறமாலறி வேமிகு
சாரமாயதி லேயுறல் ஒழிவேனோ
ஆவவார்வன நான்மறை ஆதிபூதப ராபரி
ஆதிகாரணி தாகிய பரமேச
ஆதியாருள் மாமுரு கேசமால்மரு கேசுரா
ஞாதிதேவர்க ளியாவர்கள் பணியாத
†கோவதாமறை யோர்மறை யோது ‡மோதம்வி பூரவொலி
கோடியாகம மாவொலி மிகவீறும்
கோவைமாநகர் மேவிய வீரவேலயி லாயுத
கோதை §யானையி னோடமர் பெருமாளே (க)

## திருவதிகை.

இது பண்ருட்டி ஸ்டேஷனிலிருந்து கிழக்கே ஒருமையில் துலைவில் இருக்கிறது.

தனனதனத் தனனதனத் தனனதனத் தனனதனத்
தனனதனத் தனனதனத் தனதான.

681 பரவுவரிக் கயல்குவியக் குயில்கிளியொத் துரைபதறப்
பவளநிறத் ததரம்விளைத் தமுதூறல்
பருகிநிறத் தரளமணிக் களபமுகைக் குவடசையப்
படைமதனக் கலையடவிப் பொருமாதர்
சொருகுமலர்க் குழல்சரியத் தளர்வுறுசிற் றிடைதுவளத்
துகில்கலக் குலைப விளைவித் துருகாமுன்
சொரிமலர்மட் டலரணைபுக் கிதமதுரக் கலவிதனிற்
சுழலுமனக் கவலையொழித் தருள்வாயே
கருகுநிறத் தசுரன்முடித் தலையொருபத் தறமுடுகிக்
கணைதொடுமச் சுதன்மருகக் குமரேசா
கயிலைமலைக் கிழவனிடக் குமரிவிருப் பொடுகருதக்
கவிநிறையப் பெறும்வரிசைப் புலவோனே
திரள்கமுகிற் றலையிடறிப் பலகதலிக் குலைசிதறிச்
செறியும்வயற் கதிரலையத் திரைமோதித்
திமிதிமெனப் பறையறையப் பெருகுபுனற் கெடிலநதித்
திருவதிகைப் பதிமுருகப் பெருமாளே (க)

*சாவதாரம் - அழிவதற்காதாரம். †கோவதாமறையோர் - பசுக்களைக் கொன்று யாகமியற்றும் வேதியர். ‡மோதம்-களிப்பு. §யானை-தெய்வானை.

தனனதானன தனதன தனதன
தனனதானன தனதன தனதன
தனனதானன தனதன தனதன தனதான.

682. விடமும்வேலன மலரன விழிகளு
* மிரதமேதரு மமுதெனு மொழிகளும்
விரகினுவெழு மிருதன வகைகளும் இதயாடி
மிகவுமாண்மையு மெழினல மூடையவர்
வினையுமாவியு முடனிரு வலையிடை
வெளியிலேபட விசிறிய விஷமிக ளுடன்மேவா
இடருறுதனை நினைபவர் துணைகொளா
இனிமைபோலெழு பிறவியெ னுவரியி
னிடைகொடாதினி யிருவினை யிழிவினில் இழியாதே
இசையினுடொறு மிமையவர் முனிவர்கள்
ககனபூபதி யிடர்கெட அருளிய
இறைநினுறிரு புயமென உரைசெய அருள்வாயே
படருமார்பினி லிருபது புயமதொ
டரியமாமணி முடியொளிரொருபது
படியிலேவிழ வொருகணை தொடுபவ ரிடமாராய்
† பரவையூடெரி பகழியை விடுபவர்
‡ பரவுவார்வினை கெடவரு ளுதவியெ
பரிவுபால்கட லரவணை துயில்பவர் மருகோனே
அடரவேவரு மசுரர்கள் குருதியை
அரகராவென அலகைகள் பலியுண
அலையும்வேலையும் அலறிட எதிர்பொரு மயில்வீரா
அமராதிய ரிடர்பட அடர்தரு
கொடியதானவர் திரிபுர மெரிசெய்த
அதிகைமாநகர் மருவிய சசிமகள் பெருமாளே. (உ)

---

## திருவாமூர்.

இது திருவதிகை ஸ்தலத்திலிருந்து தென்கிழக்கே ஐந்து மைல் துலைவில் இருக்கிறது.

தான தனன தனத்தந் தனதான.

683. சீத மதிய தெறிக்குந் தழலாலே
சீறி மதனன் வளைக்குஞ் சிலையாலே

* இரதம் - இனிமை † பரவை - கடல். ‡ பராவுவார் - துதிப்பார்.

* ஓத மருவி யலைக்குங் கடலாலே
ஊழி யிரவு தொலைக்கும் படியோதான்
† மாது புகழை வளர்க்குந் திருவாமூர்
வாழு மயிலி லிருக்குங் குமரேசா
காதலடியர் கருத்தின் பெருவாழ்வே
காலன் முதுகை விரிக்கும் பெருமாளே. (க)

## திருப்பாதிரிப்புலியூர்.

இது திருப்பாதிரிப்புலியூர் ஸ்டேஷனிலிருந்து மேற்கே அரைமைல் துலையில் இருக்கிறது.

தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன தனதான.

684. நிணமொடு குருதி நரம்பு மாறிய
தசைகுடல் மிடையு மெலும்பு தோலிவை
நிரைநிரை செறியு முடம்பு நோய்படு முதுகாயம்

நிலைநிலை யுருவ மலங்க ளாவது
நவதுளை யுடைய குரம்பை யாமிதில்
நிகழ்தரு பொழுதில் முயன்று மாதவ முயல்வோரும்

உணர்விலி செபமு தலொன்று தானிலி
நிறையிலி முறையி லியன்பு தானிலி
உயர்விலி யெனினு மெனெஞ்சு தானினை வழியாமுன்

ஒருதிரு ‡ மரக ததுங்க மாமிசை
யறுமுக மொளிவி டவந்து நான்மறை
யுபநிட தமதை விளங்க நீயருள் புரிவாயே

புணரியில் விரவி யெழுந்த ஞாயிறு
விலகிய புரிசை யிலங்கை வாழ்பதி
பொலமணி மகுட சிரங்கள் தாமொரு பதுமாறிப்

* ஓதம் - வெள்ளம். † திருநாவுக்கரசு சுவாமிகளுடைய தமக்கையாராகிய திலகவதியார் அவதரித்துச் சிவபுண்ணியஞ்செய்து புகழை வளர்ப்பதற்கு ஆதாரஸ்தானமாகஇருந்த திருவாமூர். ‡மரகததுங்கமா-மயிற்குதிரை,

புவியிடை யுருள மூனிந்து கூர்கணை
யுறுசிலை வளைய வலிந்து நாடிய
புயலதி விறல ரிவிண்டு மால்திரு மருகோனே

அணிதரு கயிலை நடுங்க வோரெழு
குலகிரி யடைய இடிந்து தூளெழ
அலையெறி யுததி குழம்ப வேல்விடு முருகோனே

அமலைமு னரிய தவஞ்செய்*பாடல
வளநகர் மருவி யமர்ந்த தேசிக
அறுமுக குறம கள்ன்ப மாதவர் பெருமாளே. (௧)

---

## திருமாணிகுழி.

இது திருப்பாதிருப்புலியூர் ஸ்டேஷனிநலிந்து மேற்கே ஐந்து மைல்
துலைவில் இருக்கிறது.

தனத்த தானன தானன தானன
தனத்த தானன தானன தானன
தனத்த தானன தானன தானன தந்ததான.

685. மதிக்கு யேரெனும் வான்*மூகம் வான்மக
நதிக்கு மேல்வரு சேலோடு சேர்விழி
மணத்த வார்குழல் மாமாத ராரிரு கொங்கைமூழ்கி

மதித்த பூதர மாமாம னேலயர்
செருக்கி மேல்விழ நாடோறு மேமிக
வடித்த தேன்மொழி வாயூற லேநுகர் வண்டநாயேன்

பதித்த நூபுர சீபாத மாமலர்
படைக்குள் மேவிய சீராவொ டேகலை
பணைத்த தோள்களொ டாறு தோடுகள் தங்குகாதும்

பணிக்க லாபமும் வேலோடு சேவலும்
வடிக்கொள் சூலமும் வாள்வீச நீள்சிலை
படைத்த வாகையும் நாடாது பாழில்ம யங்கலாமோ

கதித்து மேல்வரு மாசூரர் சூழ்படை
நொறுக்கி மாவுயர் தேரோடு மேகரி
கலக்கி யூர்பதி தீமூள வேவிடும் வஞ்சவேலா

---

*மூகம்-மூகம் எனநீண்டது. பாடலவளநகர்என்றும் பெயர்.

களித்த பேய்கண மாகாளி கூளிகள்
திரட்பி ரேதமெ லாமேவி மூளைகள்
கடித்த பூதமொ டேபாடி யாடுதல் கண்டவீரா
குதித்து வானர மேலேறு தாறுகள்
குலைத்து நீள்கமு கூடாடி வாழைகொள்
குவித்து மேல்விழ வேரோறு போகமும் வஞ்சிதோயும்
குளத்தி லூறிய தேனூறல்* மாதுகள்
குடித்து லாவியெ சேலோடு†மாணிகொள்
குழிக்குள் மேவிய வானோர்க ளேதொழு தம்பிரானே.

---

## வடுகூர்.

இது திருப்பத்தூருக்கு வடமேற்கே இருபது மைல் துலைவில் இருக்கிறது.

தனதன தனன தனதன தனன
தனதன தனன தனதான.

686. அரியய னறியா தவரெரி புரமூ
ணதுபுக நகையே வியநாதர்
அவிர்சடை மிசையோர் வனிதையர் பதிசீ
‡றழலையு மழுநேர் பிடிநாதர்
வரைமக ளொருகூ றுடையவர் மதனை
கழும்விழ விழியே வியநாதர்
மனமகிழ் குமரா எனவுன திருதாள்
மலரடி தொழுமா றருள்வாயே
அருவரை யிருகூ றிடவொரு மயில்மே
லவனியை வலமாய் வருவோனே
அமரர்க ளிகல்நீ டசுரர்கள் சிரமே
லயில்தனை விசையாய் விடுவோனே
வரிசையொ டொருமா தினை§தரு வனமே
மருவியொர் குறமா தணைவேடா
மலைகளில் மகிழ்வாய் மருவிநல் வடுகூர்
வருதவ முனிவோர் பெருமாளே. (க)

---

* மாதுகள் - மிகுந்த மகரந்தங்கள். † மாணிகொள் - மாட்சிமைபெற்ற.
‡ அழலையும் - அக்கினியையும். § தருவனம் - தேவலோகம்.

இந்த ஸ்தலம் திருவதிகைக்கு மேற்கே 2 மைல் தூலவில் இருக்கிறது.

தானத்தன தானத்தன தானத்தன தானத்தன
தானத்தன தானத்தன தனதான.

687 ஆரத்தன பாரத்துகில் மூடிப்பலர் காணக்கையில்
யாழ்வைத்திசை கூரக்குழ லுடைசோர
ஆகப்பனி நீரப்புழு கோடக்குழை யாடப்பிர
யாசப்படு வார்பொட்டணி சசிநேர்வாள்
கூரக்கணை வேல்கட்கயல் போலச்சுழல் வார்சர்க்கரை
கோவைக்கனி வாய்பற்கதிர் ஒளிசேரும்
கோலக்குயி லார்பட்டுடை நூலொத்திடை யார்சித்திர
கோபச்செய லார்பித்தர்கள் உறவாமோ
பூரித்தன பாரச்சடை வேதக்குழ லாள்பத்தர்கள்
பூசைக்கியல் வாள்பத்தினி சிவகாமி
பூமிக்கடல் மூவர்க்குமு னாள்பத்திர காளிப்புணர்
போகர்க்குப தேசித்தருள் குருநாதா
சூரக்குவ டாழித்தவி டாய்முட்டசு ராருக்கிட
சோர்விற்கதிர் வேல்விட்டருள் விறல்வீரா
தோகைச்செய லாள்பொற்பிர காசக்குற மான்முத்தொடு
சோதித்துறை யூர்நத்திய பெருமாளே. (க)

---

திருநாவலூர்.

இது பண்ருட்டி ஸ்டேஷனிலிருந்து மேற்கே 12 மைல்
தூலவில் இருக்கிறது.

தானதனதத்த தானதனதத்த
தானதனதத்த தனதான.

688 கோலமறையொத்த மாலைதனிலுற்ற
கோரமதன்விட்ட கணையாலே
கோதிலதருக்கள் மேவுபொழிலுற்ற
கோகிலமிகுத்த குரலாலே
ஆலமெனவிட்டு வீசுகலைபற்றி
ஆரழலிறைக்கு நிலவாலே
ஆவிதளர்வுற்று வாடுமெனைநித்த
மாசைகொடணைக்க வரவேணும்

நாலுமறைகற்ற நான்முகனுதித்த
நாரணனுமெச்சு மருகோனே
நாவலர்மகிழ்க்க வேல்தனையெடுத்து
நாகமயில்விட்ட மயில்வீரா
சேலெனும்விழிச்சி வேடுவர்சிறுக்கி
சீரணிதனத்தில் அணைவோனே
சீதவயல்சுற்று நாவல்தனிலுற்ற
தேவர்சிறைவிட்ட பெருமாளே. (க)

---

## திருவெண்ணெய்நல்லூர்.

இது மாம்பழப்பட்டிலிருந்து தெற்கே ஆறுமைல் தூலவில் இருக்கிறது.

தனதன தத்தன தனதன தத்தன
தனதன தத்தன தனதன தத்தன
தனதன தத்தன தனதன தத்தன தனதான.

689 பலபல தத்துவ மதனையெ ரித்திருள்
பரை*யா ணப்படர் வடவன லுக்கிரை
படநட நச்சுடர் பெருவெளி யிற்கொள விடமேவிப்
†பவனமொ ழித்‡திரு வழியைய டைத்தொரு
பருதிவ ழிப்பட விடல்கக னத்தொடு
பரிவுகொ ளச்சிவ மயமென முற்றிட பாழூடே
கலகலெ னக்கழல் பரிபுர பொற்பத
வொலிமலி யத்திரு நடனமி யற்றிய
கனகச பைக்குளி லுருகிநி றைக்கட லதின்மூழ்கிக்
கவுரிமி னற்சடை யரனொடு நித்தமொ
டனகச கத்துவம் வருதலு மிப்படி
கழியந லக்கினி நிறமென விற்றுடல் அருள்வாயே
புலையர்§பொ டித்தளும் அமணரு டற்களை
நிரையில்க ழுக்களி லுறவிடு சித்திர
புலவனெ னச்சில விருதுப டைத்திடும் இளையோனே
புனமலை யிற்குற மகளய லுற்றொரு
கிழவனெ னச்சுனை தனிலவ ளைப்புய
புளகித முற்||றிபம் வரவணை யப்புணர் மணிமார்பா

---

* அரணம்-காவல். † பவனம்-காற்று. ‡ இருவழி-சந்திரகலை, சூரிய கலை. § பொடித்தளும் - விபூதியணியாது வெறுக்கும். || இபம் விநாயகர்.

மலைச்சிலை பற்றிய கடவுளி டத்துறை
கிழவிய றச்சுக குமரி*த கப்பனை
மழுகொடு வெட்டிய நிமலிகை பெற்றருள் முருகோனே
மகிழ்பெணை யிற்கரை பொழில்முகில் சுற்றிய
திருவெணெய் நற்பதி புகழ்பெற அற்புத
மயிலின்மி சைக்கொடு திருநடமிட்டுறை பெருமாளே.

---

## திருக்கூடலையாற்றூர்.

இது சிதம்பரம் ஸ்டேஷனிலிருந்து மேற்கே 16 மைல் துலைவில் இருக்கிறது.

தாத்ததனத் தாந்ததன தானதன தானதன
தாத்ததனத் தாந்ததன தானதன தானதன
தாத்ததனத் தாந்ததன தானதன தானதன தந்ததான.

690 வாட்டியெனைச் சூழ்ந்தவினை யாசையமு வாசையனல்
மூட்டியுலைக் காய்ந்தமழு வாமெனவி காசமொடு
மாட்டியெனைப்பாய்ந்துகட வோடடமொ டாடிவிடு விஞ்சையாலே
வாய்த்தமலர்ச் சாய்ந்துபுழு கானபனி நீர்களொடு
காற்றுவாத் தாங்குவன மார்பிலணி யாரமொடு
வாய்க்குமெனப் பூண்டழக தாகபவி சோடுமகிழ் வன்புகூரத்
தீட்டுவிழக் காந்திமட வார்களுட னுடிவலை
பூட்டிவிடப் போந்துபிணி யோடுவலி வாதமென
சேர்த்துவிடப் பேர்ந்துவினை மூடியடி யேனுமுன தன்பிலாமல்
தேட்டமுறத் தேர்ந்து†மமிர் தாமெனவெ யேகிநம
னோட்டிவிடக் காய்ந்துவரி வேதனை யாளமருள்
சீட்டுவரக் காண்டுகலி காலனனு காநினருள் அன்புதாராய்
வேட்டுவரைக் காய்ந்துகுற மாதையுற வாடியிருள்
நாட்டவரைச் சேர்ந்தகதிர் வேல்கொடம ராடிசிறை
மீட்டமரர்க் காண்டவனை வாழ்கநிலையாக‡வைகும் விஞ்சையோனே
வேற்றுருவிற் போந்துமது ராபுரியி லாடிவைகை
யாற்றின்மணற் றுங்குமழு வாளியென தாதைபுர
மேட்டையெரித் தாண்டசிவ லோகன்விடை யேறியிட முங்கொளாயி

---

*தகப்பனை மழுகொடு வெட்டிய நிமலிகை - பிதாவாகிய மதியாத தக்கனை (வீரபத்திரரால்) மழுகொண்டு வெட்டுவித்த நின்மலி † அமிருத்து ஆம் எனவே-சாவ இல்லையென்று ‡ வைகும்-வைக்கும்,

கோட்டுமுகைத் தாங்குமிழை யானவிடை கோடிமதி
தோற்றமெனப் போந்தவழ கானசிவ காமிவிறல்
கூற்றுவனைக் காய்ந்தவபி ராமிமன தாரஅருள் கந்தவேளே
கூட்டுநதித் தேங்கிய*வெ ளாறுதா ளாறுதிகழ்
நாட்டிலுறைச் சேந்தமயி லாவளிதெய் வானையொடு
கூற்றுவிழத் தாண்டியென தாகமதில் வாழ்குமா தம்பிரானே.

---

## விருத்தாசலம்.

இது சிதம்பரம் ஸ்டேஷனிலிருந்து மேற்கே 34 மைல் தூலவிலிருக்கிறது.

தனத்தானன தானன தானன
தனத்தானன தானன தானன
தனத்தானன தானன தானன தனதான.

691 குடத்தாமரை யாமென வேயிரு
தனத்தார்மதி வாணுத லாரிருள்
குழற்காடின மாமுகில் போல்முது கலைமோதக்
குலக்கார்மயி லாமென வேகயல்
விழித்தார்கர மேல்கொடு மாமுகை
குடத்தாழ்கிளி யாமென வேகுயில் குரலோசை
படித்தார்மயி லாமென வேநடை
நெளித்தார்பல காமுகர் வார்கலை
பறிப்பாரவ ராசையை மேல்கொடு விலைமாதர்
படிக்கார்மின லாமென வேநகை
†புரித்தார்பலர் வாயிதழ் சேர்பொருள்
பறிப்பார்பழி காரிகள் நாரிகள் உறவாமோ
அடைத்தார்கட லோர்வலி ராவண
குலத்தோடரி யோர்‡சர ணர்சின
மழித்தார்முகி லேய்நிற ராகவர் மருகோனே
அறுத்தாரய னார்தலை யேபுர
மெரித்தாரதி லேபுல னாருயி
ரளித்தாருடல் பாதியி லேயுமை அருள்பாலா

---

*வெள்ளாறு தாளாறு திகழ்நாடு-வெள்ளாறும் மணிமுத்தா நதியும் கூடும் இடமாகிய கூடலையாற்றூர். தாள ஆறு-மணிமுத்தாநதி†புரித்தார்-புரிந்தார். ‡அரியோர் சரணர்-வாலிமதிக்கும் ஒப்பற்ற அம்பையுடையார்.

விடத்தாரசு ரார்பதி வோற
அடித்தாய்கதிர் வேல்கொடு சேவகம்
*வினைத்தாய்குடி வாழும ரோர்சிறை மிடிதீர
விழித்தாமரை போலழ காகுற
மகட்கான †வ ணனை தாயுறை
விருத்தாசலம் வாழ்மயில் வாகன பெருமாளே. (க)

## திருவரத்துறை.

இது சீகாழி ஸ்டேஷனிலிருந்து தெற்கே ஏழு மைல் துலைவிலிருக்கிறது.

தனனதத்தனத் தனனதத்தனத்
தனனதத்தனத் தனதான.

692. கறுவிமைக்கணிட் டினிதழைத்தியற்
கவிசொலிச்சிரித் துறவாடிக்
களவுவித்தையிட் டுளமுருக்கிமுற்
‡கருதிவைத்தவைப் பவைசோரத்
தறுகணிற்பறித் திருகழுத்துறத்
தழுவிநெக்குநெக் குயிர்சோரச்
சயனமெத்தையிற் செயலழிக்குமித்
§தருணிகட்ககப் படலாமோ
பிறவியைத்தணித் தருளுநிட்களப்
பிரமசிற்சுகக் கடல்மூழ்கும்
பெருமுனித்திரட் பரவுசெப்பதிப்
ரபவ‖கொச்சையிற் சதுர்வேதச்
சிறுவநிற்கருட் கவிகைநித்திலச்
சிவிகையைக்கொடுத் தருளீசன்
செகதலத்தினிற் புகழ்படைத்தமெய்த்
திருவரத்துறைப் பெருமாளே. (க)

---

* வினைத்தாய் - செய்தாய். சித்திரம், சித்திரித்தான் என்பதுபோல் பெயர்ப்பகுதி வினைப்பகுதியாயிற்று. † வண - வண்ண, அழகனே. ‡ கருதிவைத்தவைப்பு - முன் சேர்த்து வைத்த பொருள். § தருணிகள் - குமரிப்பெண்கள். ‖ கொச்சை - சீகாழி, இது பாடல்பெற்ற சிவஸ்தலம்.

## யாழ்பாணயன் பட்டினம்.

இது விருத்தாசலத்துக்கு மேற்கே 2 மைல் தூலவில் இருக்கிறது.

தாத்தா தானந் தத்தன தனதன
தாத்தா தானந் தத்தன தனதன
தாத்தா தானந் தத்தன தனதன தனதான.

693. பூத்தார் சூடுங் கொத்தலர் குழலியர்
பார்த்தால் வேலுங் கட்கமு மதன்விடு
போர்க்கார் நீடுங் கட்சர மொடுநமன் விடுதூதும்
*போற்றாய் நாளுங் கைப்பொரு ளுடையவர்
மேற்றா ளார்தம் பற்றிடு ப்ரமையது
பூட்டா மாயங் கற்றமை விழியினர் அமுதூறல்
வாய்த்தார் பேதஞ் செப்புபொய் விரகியர்
நூற்றேய் நூலின் சிற்றிடை யிடர்பட
வாட்டாய் வீசுங் கர்ப்புர ம்ருகமதம் அகிலாரம்
மாப்பூ ணாரங் கச்சணி முலையினர்
†வேட்பூ ணுகங் கெட்டெனை யுனதுமெய்
வாக்கால் ஞானம் பெற்றினி வழிபட அருளாயோ
ஆத்தாள் மால்தங் கைச்சிக ணிகையுமை
கூத்தா டானந் தச்சிவை திரிபுரை
யாட்பேய் பூதஞ் சுற்றிய பயிரவி புவனேசை
ஆக்கா யாவும் பற்றியெ திரிபுர
ரோக்கா ஏதுஞ் செற்றவள் திருவிளை
யாட்டா லீசன் பக்கம துறைபவள் பெறுசேயே
ஏத்தா நாளுந் தர்பண செபமொடு
நீத்தார் ஞானம் பற்றிய குருபர
யாப்பா ராயுஞ் சொற்றமி ழருள்தரு முருகோனே
ஏற்போர் தாம்‡வந் திச்சையின் மகிழ்வொடு
வாய்ப்பாய் வீசும் பொற்ப்ரபை நெடுமதிள்
§யாழ்ப்பா ணயன் பட்டின மருவிய பெருமாளே. (க)

---

*போற்றாய் - போல், தாய் தாய்-தாவி. †வேட்பூணு - வேட்கைபூண்டு. ‡வந்து-வர. §யாழ்ப்பாணயன் பட்டினம் என்பது அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனாருடைய ஊராகிய திருஎருக்கத்தம்புலியூராக இருக்கலாம் என்பர். இந்த ஸ்தலம் சிதம்பரத்திற்குமேற்கே நடுநாட்டில் விருத்தாசலத்திற்குச் சமீபத்தில் உள்ளது.

இது சீகாழிக்கு வடக்கே 36 மைல் தூலைவில் இருக்கிறது.

தனதத்ததான தனதத்ததான
தனதத்ததான தனதான.

694. கழைமுத்துமாலை புயல்முத்துமாலை
கரிமுத்துமாலை மலைமேவும்
கடிமுத்துமாலை வளைமுத்துமாலை
கடல்முத்துமாலை அரவீனும்
அழல்முத்துமாலை யிறைமுற்றுமார்பி
னடைவொத்துலாவ அடியேன்முன்
அடர்பச்சைமாவி லருளிற்பெணோடு
மடிமைக்குலாமொ டருள்வாயே
மழையொத்தசோதி குயில்தத்தைபோலு
மழலைச்சொலாயி எமையீனும்
மதமத்தநீல களநித்தநாதர்
மகிழ்சத்தியீனு முருகோனே
செழுமுத்துமார்பி னமுதத்தெய்வானை
திருமுத்திமாதின் மணவாளா
சிறையிட்டசூரர் தலைவெட்டிஞான
திருமுட்டமேவு பெருமாளே. (க)

---

தனனத் தத்தன தானன தானன
தனனத் தத்தன தானன தானன
தனனத் தத்தன தானன தானன தனதான.

695. சரம்வெற் றிக்கய லாமெனும் வேல்விழி
சிலைவட் டப்புரு வார்குழல் கார்முகில்
தனமுத் துக்கிரி யாமெனு நூலிடை மடவார்கள்
*சனுமெத் தப்பரி வாகிய மாமய
லிடும்†உத் திக்கிகழ் மால்கொடு பாவையர்
தகுதத் தக்கிட தோதகு திதென விளையாடும்
விரகத் தூர்க்குண வேசைய ராசையர்
பணமெத் தப்பறி காரிகள் மாறிகள்
விதமெத் தக்கொடு மேவிகள் பாவிகள் அதிபோக

* சனு - சரசம். † உத்தி - யுக்தி.

மெலிவுற் றுக்குறி நாறிகள் பீறிகள்
கலகத் தைச்செயு மோடிகள் பீடிகள்
*விருதிட் டுக்குடி கேடிகள் சேடிகள் உறவாமோ
பொருவெற் றிக்கழை வார்சிலை யானுட
லெரிபட் டுச்சரு காய்விழ வேநகை
புகுவித் தப்பிறை வாழ்சடை யானிடம் ஒருமாது
புகழ்சத் திச்சிவ காவண மீதுறை
சிவபத் திப்பர மேஸ்வரி யாள்திரி
புவனத் தைப்பரி வாய்முத லீனுமை அருள்பாலா
திரையிற் பொற்கிரி யாடவும் வாசுகி
புனைவித் துத்தலை நாளமு தார்சுவை
சிவபத் தர்க்கிது வாமெனவேபகிர் அரிராமர்
திருவுற் றப்பணி யாதிவ ராகர்தம்
மகளைப் பொற்றன வாசையொ டாடிய
திருமுட் டப்பதி வாழ்முரு காசுரர் பெருமாளே. (௨)

---

## சிதம்பரம்.

இது சிதம்பரம் ஷ்டேஷனிலிருந்து மேற்கே ஒரு மைல் துலைவிலிருக்கிறது.

தனனதன தான தனனதன தான
தனனதன தானத் தனதான.

696. கனகசபை மேவு மெனதுகுரு நாத
கருணைமுரு கேசப் பெருமாள்காண்
கனகநிற வேத னபயமிட மோது
காகமல சோதிப் பெருமாள்காண்
வினவுமடி யாரை மருவிவிளை யாடு
விரகுரச மோகப் பெருமாள்காண்
விதிமுநிவர் தேவ ரருணகிரி நாதர்
விமலசர சோதிப் பெருமாள்காண்
சனகிமண வாளன் மருகனென †வேத
சதமகிழ்கு மாரப் பெருமாள்காண்
சரணசிவ காமி ‡யிரணகுல காரி
தருமுருக நாமப் பெருமாள்காண்

---

* விருது-ஆணை † வேதசதம்-வேதமெல்லாம். ‡ இரணகுலகாரி-போர் செய்யும் அவுணர் குலத்தைக்கருவறுத்து அரித்தெடுத்தவள்.

இனிதுவன மேவு மமிர்தகுற மாதொ
டியல்பாவு காதற் பெருமாள்காண்
இணையி*லிப தோகை †மதியின்மக ளோடு
மியல்புலியூர் வாழ்பொற் பெருமாளே. (௧)

தத்ததன தான தத்ததன தான
தத்ததன தானத் தனதானு.

697. கைத்தருண சோதி யத்திமுக வேத
கற்பகச கோத்ரப் பெருமாள்காண்
கற்புசிவ காமி நித்யகலி யாணி
கத்தர்குரு நாதப் பெருமாள்காண்
‡வித்துருப ராம ருக்குமரு கான
வெற்றியயில் பாணிப் பெருமாள்காண்
வெற்புளக டாக முட்குதிர வீசு
வெற்றியயில் வாகப் பெருமாள்காண்
சித்ரமுக மாறு முத்துமணி மார்பு
திக்கினினி லாதப் பெருமாள்காண்
திக்திமிதி தீதெ ஞெத்திவிளை யாடு
சித்திரகு மாரப் பெருமாள்காண்
சுத்த§விர சூரர் பட்டுவிழ வேலை
தொட்டகவி ராஜப் பெருமாள்காண்
துப்பு‖வளி யோடு மப்புலியூர் மேவு
சுத்தசிவ ஞானப் பெருமாளே. (௨)

தனதனன தனன தந்தத் தனதானு.

698. இருவினையின் மதிம யங்கித் திரியாதே
எழுநரகி லுழலு நெஞ்சுற் றலையாதே
பரமகுரு அருள்நி னைந்திட் டுணர்வாலே
பரவுதரி சனையை யென்றெற் கருள்வாயே
தெரிதமிழை யுதவு சங்கப் புலவோனே
சிவனருளு முருக செம்பொற் கழலோனே
கருணைநெறி புரியு மன்பர்க் கெளியோனே
கனகசபை மருவு கந்தப் பெருமாளே (௩)

* இபதோகை-தேவயானையம்மை. † மதி-கலை, மான். ‡ வித்துருபம்-விந்துரூபம்,மழைத்துளி பெய்யும் மேகவண்ணம். § விர-வீர. ‖ வளி வள்ளி.

தனன தனதன தானன தந்தத்
தனன தனதன தானன தந்தத்
தனன தனதன தானன தந்தத்    தனதான.

699. குகனெ குருபர னேயெனெ நெஞ்சிற்
புகல அருள்கொடு நாவினி லின்பக்
குமிழி சிவவமு தூறுக வுந்திப்    பசியாறிக்

கொடிய இருவினை மூலமும் வஞ்சக்
கலிகள் பிணியிவை வேரொடு சிந்திக்
குலைய நமசிவ யோமென கொஞ்சிக்    களிகூரப்

பகலு மிரவுமி லாவெளி யின்புக்
குருகி யிணையிலி நாடக செம்பொற்
பரம கதியிது வாமென சிந்தித்    தழகாகப்

பவள மனதிரு மேனியு டன்பொற்
சரண அடியவ ரார்மன வம்பொற்
றருண சரண்மயி லேறியு னம்பொற்    கழல்தாராய்

தகுட தகுதகு தாதக தந்தத்
திகுட திகுதிகு தீதக தொந்தத்
தடுடு டுடுடுடு டாடக டிங்குட்    டியல்தாளம்

*தபலை திமிலைகள் பூரிகை பம்பைக்
†காடி தமருகம் வீணைகள் பொங்கத்
தடி ‡ய முனவுக மாருத சண்டச்    சமரேறிக்

ககன மறைபட ஆடிய செய்புட்
பசிகள் தணிவுற சூரர்கள் மங்கக்
கடல்க ளெறிபட நாகமு மஞ்சத்    தொடும்வேலா

கயிலை மலைதனி லாடிய தந்தைக்
குருக மனமுன நாடியெ கொஞ்சிக்
கனக சபைதனில் மேவிய சந்தப்    பெருமாளே. (ச)

---

*தபலை-பதலை, பாலை, திமிலை, பூரிகை, பம்பை வாத்திய பேதங்கள். †காடி-காடிகை, ஓர்பறை. ‡ அழுன - அழுனம், பிணம்.

தந்தனத் தத்தன தந்தனத் தத்தன
தந்தனத் தத்தன தந்தனத் தத்தன
தந்தனத் தத்தன தந்தனத் தத்தன தந்ததான.

700. வண்டையொத் துக்கயல் கண்சுழற் றுப்புரு
வஞ்சிலைக் குத்தொடு ரம்பையொத் துத்தொடை
வண்டுசுற் றுக்குழல் கொண்டலொத் துக்கமு கென்பக்ரீவம்

*மந்தரத் தைக்†கட மிஞ்சிபத் துப்பணை
கொம்பையொத் துத்தன மூந்து‡குப் பத்தொரு
வந்துமெத் திப்பொரு மங்கையர்க் கைப்பொருள் அன்பினாலே

கொண்டழைத் துத்தழு வுங்கைதட் டிற்பொருள்
கொண்டு§தெட் டிச்சர சம்புகழ்க் கு‖குன
கு¶குழற் கிப்படி நொந்துகெட் டுக்குடில் மங்குறாமல்

கொண்டுசத் திக்$கட லுண்டுகுப் பத்துனி
னன்பருக் குச்செயல் தொண்டுபட் டுக்கமழ்
குங்குமத்திற்சர ணப்பிடித் துக்கரை யென்றுசேர்வேன்

அண்டமிட் டிக்குட டிண்டி மிட்டிக்குகு
டந்தகொட் டத்தகு டிங்குதொக் கத்தம
டஞ்சகட் டைக்குண கொம்புடக்கைக்கிட லென்பதாளம்

அண்டமெட் டுத்திசை யும்பல்சர்ப் பத்திரள்
கொண்டல்பட் டுக்கிரி யும்பொடித் துப்புல
னஞ்சவித் துத்திர ளண்டமுட் டத்துகள் வந்தசூரர்

கண்டமற் றுக்குட லென்புநெக் குத்தச
னங்கடித் துக்குடி லஞ்சிவப் பச்○செநிர்
கண்தெறிக் கத்தலை பந்தடித் துக்கையி லங்குவேலால்

கண்களிக் கச்சுக னந்துளுக் கப்புக
ழிந்திரற் குப்பதம் வந்தளித் துக்கன
கம்பலத் திற்குற மங்கைபக் கத்துறை தம்பிரானே (௫)

*மந்தரத்தை-மலையை. †கடமிஞ்சிபம் மதப்பட்டயானை. ‡குப்ப-கூம்ப, குவிய. §தெட்டி-ஏமாற்றி, ‖குனகும்-சிணுங்குகின்ற ¶குழற்கு-குழலை யுடையார்க்கு $கடல் உண்டு உகுப்ப துன் நின் அன்பர்- கடலை யுண்டு உமிழ்ந்து துலக்கிய அகஸ்தியர். ○செநிர்-செந்நீர், இரத்தம்.

தந்த தந்தனத் தான தந்தன
தந்த தந்தனத் தான தந்தன
தந்த தந்தனத் தான தந்தன தந்ததான.

701. கங்கு லின்குழற் கார்மு கஞ்சசி
மஞ்ச ளின்புயத் தார்ச ரம்பெறு
கண்கள் கொந்தளக் காது கொஞ்சுக செம்பொனாரம்

*கந்த ரந்தரித் தாடு கொங்கைக
ளும்ப லின்குவட் டாமெ னுங்கிரி
கந்த முஞ்சிறுத் தேம லும்பட †சம்பைபோல

அங்க மைந்திடப் ‡பாளி தங்கொடு
§குந்தி யின்குறைக் கால்ம றைந்திட
அஞ்சி லம்பொலிப் பாட கஞ்சரி கொஞ்சமேவும்

அஞ்ச கங்குயிற் பூவை யின்குரல்
அங்கை பொன்பறிக் கார பெண்களொ
டண்டி மண்டையர்க் கூழியஞ்செய லென்றுபோமோ

சங்கு பொன்தவிற் காள முங்||தூரி
யங்கள் தந்துமிக் காட திர்ந்திட
சந்த செந்தமிழ்ப் பாணர் கொஞ்சிட அண்டகோசம்

சந்தி ரன்பதத் தோர்வ ணங்கிட
இந்தி ரன்குலத் தார்¶பொ ழிந்திட
தந்தி ரம்புயத் தார்பு கழ்ந்திட வந்தசூரைச்

செங்கை யுஞ்சிரத் தோடு பங்கெழ
அந்த கன்புரத் தேற வஞ்சகர்
செஞ்ச ரந்தொடுத் தேக டப்புரி கந்தவேளே

திங்க ளொண்கதிர்க் $காமர் துண்டமுங்
கொங்கை மென்குறப் பாவை யுங்கொடு
செம்பொ னம்பலத் தேசி றந்தருள் தம்பிரானே. (௬)

---

*கந்தரம்-கழுத்து. †சம்பை - தாளம், ‡பாளிதம் - பட்டுப்புடவை.
§குந்தியின் குறைக்கால் - குதிக்கால். ||தூரியம் - தூரியம், முரசப்பறை.
¶பொழிந்திட-புஷ்பமாரி சொரிய. $காமர்துண்டமும் - அழகியமுகமும்.

தந்தனந்தன தந்தனந்தன
தந்தனந்தன தந்தனந்தன
தந்தனந்தன தந்தனந்தன தனதான.

702 கொந்தளம்*புழு கந்தவண்†பனி
ரம்பசம்ப்ரம ணிந்தமந்தர
கொங்கைவெண்கரி கொம்பிணங்கிய மடமாதர்

கொந்தணங்குழ லின்பமஞ்சள
ணிந்துசண்பக வஞ்சினங்கொடி
கொஞ்சுபைங்கிளி யன்பெனுங்குயில் மயில்போலே

வந்துபஞ்சணை யின்பமுங்கொடு
கொங்கையும்புய முந்தழூப்புற
மஞ்சுவொண்கலை யுங்குலைந்தவர் மயல்மேலாய்

வஞ்சினங்கள்தி ரண்டுகண்செவி
யுஞ்சுகங்கள்தி ரும்பிமுன்செய்த
வஞ்சினங்களு டன்கிடந்துடல் அழிவேனோ

தந்தனந்தன தந்தனந்தன
திந்திமிந்திமி திந்திமிந்திமி
சங்குவெண்கல கொம்புதுந்துமி பலபேரி

சஞ்சலஞ்சல கொஞ்சுகிண்கிணி
தங்குடுண்டுடு டுண்டுடன்பல
‡சந்திரப்பறை பொங்குவஞ்சகர் களமீதே

சிந்தவெண்கழு கொங்குபொங்கெழு
செம்புளங்கரு டன்பருந்துகள்
செங்களந்திகை யெங்குமண்டிட விடும்வேலா

திங்களிந்திரன் உம்பரந்தர
ரும்புகழ்ந்துரு கும்பரன்சபை
செப்பொனம்பல மங்கொளன்பர்கள் பெருமாளே. (எ)

---

* புழுகந்த - புழுகு கந்த. †பனிரம்ப, பன்னீரம்ப - பன்னீரப்ப.
‡ சந்திரம்பறை, சந்திரப்பறை-ஓர்வகை வாத்திய முழக்கம்.

தந்தன தந்தன தானதந்தன
தானதனந்தன தானதந்தன தந்ததான.

703 மந்தரமென்குவ டார்தனங்களி
வாரமழுந்திட வேமணம்பெறு
சந்தனகுங்கும சேறுடன்பனி
நீர்கள்கலந்திடு வார்முகஞ்சசி
மஞ்சுறையுங்குழ லார்சரங்கயல்
வாள்விழிசெங்கழு நீர்ததும்பிய கொந்தளோலை

வண்சுழலுஞ்செவி யார் நுடங்கிடை
வாடநடம்புரி வார்மருந்திடு
விஞ்சையர்கொஞ்சிடு வாரிளங்குயில்
மோகனவஞ்சியர் போலகம்பெற
வந்தவ*ரெந்தவுர் நீரறிந்தவர்
போலவிருந்ததெ னுமயங்கிட இன்சொல்கூறிச்

சுந்தர†வங்கண மாய்நெருங்கி‡நிர்
வாருமெனும்§படி யாலகங்கொடு
பண்சரசங்கொள வேணுமென்றவர்
சேமவளந்துறு தேனருந்திட
துன்றுபொனங்கையின் மீதுகண்டவ
ரோடுவிழைந்துமெ கூடியின்புறு மங்கையாரால்

துன்பமுடங்கழி நோய்சிரங்கொடு
சீபுழுவுஞ்சல மோ‖டி றங்கிய
புண்¶குடவன்கடி யோடிளஞ்$சனி
சூலைமிகுந்திட வேபறந்துடல்
துஞ்சியபன்பதி யேபுருந்துய
ராழிவிடும்படி சீபதம்பெறு விஞ்சைதாராய்

அந்தரதுந்துமி யோடுடன்கண
நாதர்புகழ்ந்திட வேதவிஞ்சைய
ரிந்திரசந்திர சூரியன்கவி
வாணர்தவம்புலி யோர்பதஞ்சலி
அம்புயனந்திரு மாலொடிந்திரை
வாணியணங்கவ ளோடருந்தவர் தங்கள்மாதர்

---

* எந்தவுர்-எந்தவூர். † வங்கணமாய்-நேசமாய். ‡ நிர்-நீர். §படி-குணம்.
‖ இறங்கிய-இறங்க. ¶ குடவன் - கோணல். $ சனி-சன்னி.

அம்பரரம்பைய ரோடுடன்திகழ்
மாவுரகன்புவி யோர்கள் மங்கையர்
அம்புவிமங்கைய ரோடருந்ததி
மாதர்புகழ்ந்திட வேகடம்புரி
அம்புயசெம்பதர் மாடகஞ்சிவ
காமசவுந்தரி யாள்பயந்தருள் கந்தவேளே

திந்திமிதிந்திமி தோதிதிந்திமி
தீததிதிந்ததி தீதிதிந்திமி
தந்தனதந்தன ஞதனந்தன
தானதனந்தன ஞெவெனும்பறை
செந்தவில்சங்குட னேமுழங்கசு
ரார்கள்சிரம்பொடி யாய்விடுஞ்செயல் கண்டவேலா

செந்தினையின்புன மேர்குறிஞ்சியில்
வாழுமிளங்கொடி யாள்பதங்களில்
வந்துவணங்கி†நி ணேமுகம்பெறு
‡தாளழகங்கையின் வேலுடன்புவி
செம்பொனினம்பல §மேலகம்பிர
காரசமந்திர மீதமர்ந்தருள் தம்பிரானே. (அ)

---

தந்ததந்த தத்தான தந்ததன
தந்ததந்த தத்தான தந்ததன
தந்ததந்த தத்தான தந்ததன தனதான.

704. வந்துவந்து ‖வித்தூறி யென்றனுடல்
வெந்துவெந்து விட்டோட நொந்துயிரும்
வஞ்சினங்க ளிற்காடு கொண்டவடி வங்களாலே

மங்கிமங்கி விட்டேனை யுன்றனது
சிந்தைசந்தொ ஷித்தாளு கொண்டருள
வந்துசிந்து ரத்தேறி யண்டரொடு தொண்டர்சூழ

---

* அம்பரம் - தெய்வலோகம். † நிணே - நின்றே ‡ தாள்அழக-அங்கையின் எனப்பிரிக்க. § மேலகம் பிரகார சமந்திரம்-மேற்புறத்துப் பிரகாரத்திலுள்ள நல்ல கோயில். ‖ வித்தூறி - கர்ப்பக்குழியில் பத்து மாதம் வரை கிடந்தூறி.

எந்தன்வஞ்ச னைக்காடு சிந்திவிழ
*சந்தாண்டி சைத்தேவ ரம்பையர்க
ளிந்துபந்த டித்தாடல் கொண்டுவா †மந்திமேவும்

எண்கடம்ப ணித்தோளு மம்பொன்முடி
கந்தரந்தி ருப்பாத பங்கயமும்
என்றன்முந்து றத்‡தோணி யுன்றனது சிந்தைதாராய்

அந்தரந்தி கைத்தோட விஞ்சையர்கள்
சிந்தை§மந்தி ரத்தோட கந்தருவ
ரம்புயன்ச லித்தோட எண்டிசையை உண்டமாயன்

அஞ்சியுன்ப தச்சேவை தந்திடென
வந்தவெஞ்சி னர்க்காடெ ரிந்துவிழ
அங்கியின்கு ணக்கோலை யுந்திவிடு செங்கைவேலா

சிந்துரம்ப ணைக்கோடு கொங்கைகுற
மங்கையின்பு றத்தோள ணைந்துருக
||சிந்துரந்த னைச்சீர்ம ணம்புணர்நல் கந்தவேளே

சிந்திமுன்பு ரக்காடு மங்கநகை
கொண்டசெந்த ழற்கோல ரண்டர்புகழ்
செம்பொனம்ப லத்தாடு மம்பலவர் தம்பிரானே. (கூ)

---

தனத்தத்தந் தனத்தத்தத் தனத்தத்தந் தனத்தத்தத்
தனத்தத்தந் தனத்தத்தத் தனதான.

705 கதித்துப் ¶ பொங் கலுக்கொத்துப்பணைத்துக் $ கொம்பெனத்தெற்றிக்
** கவித்துச்செம் பொனைத்துற்றுக் குழலார்பின்

கழுத்தைப்பண் புறக்கட்டிச்சிரித்துத் †† தொங்கலைப்பற்றிக்
கலைத்துச்செங் குணத்திற்பித் திடுமாதர்

பதித்துத்தந் தனத்தொக்கப் பிணித்துப்பண் புறக்கட்டிப்
பசப்பிப்பொன் தாப்பற்றிப் பொருள்மாளப்

---

* சந்தாண் - வளைந்தஆண்கள். † மந்தி - வண்டு. ‡ தோணி-தோன்றி. § மந்திரம்-யோசனை. || சிந்துரம்-தெய்வயானை. ¶ பொங்கு அல்லுக்கு ஒத்து-மிகுந்த இருளுக்குச் சமானமாகி. $ கொம்பு என தெற்றி - கொம்புபோலச் சடைபின்னி. **கவித்து செம்பொனை - செம்பொன்னைக் கவித்து ஜடைபில்லையைச்சூட்டி. †† தொங்கலை தொங்கும்படி தரித்க வஸ்திரத்தை.

பறித்துப்பின் துரத்துச்சொற் பகட்டுப்பெண் களுக்கிச்சைப்
பலித்துப்பின் *கசுத்திப்பட் டுழல்வேனே

கதித்துக்கொண் டெதிர்த்துப்பிற் கொதித்துச்சங் கரித்துப்பற்
கடித்துச்சென் றுழக்கித்துக் கசுரோரைக்

கழித்துப்பண் †டமர்க்குச்செப் பதத்தைத்தந் தளித்துக்‡கைக்
கணிக்§குச்சந் தரத்தைச்சுத் தொளிர்வேலா

சிதைத்திட்டம் புரத்தைச்சொற் சயத்தைச்சென் றுரித்துத்தற்
சினத்தக்கன் சிரத்தைத்||தட் சிவனார்தஞ்

செவிக்குச்செம் பொருட்கற்கப் புகட்டிச்செம் பரத்திற்செய்த்
திருச்சிற்றம் பலச்சொக்கப் பெருமாளே. (௬௦)

---

தனத்தத் தந்தன தானன தானன
தனத்தத் தந்தன தானன தானன
தனத்தத் தந்தன தானன தானன தனதான.

706\. சிரித்துச் சங்கொளி யாமின லாமென
உருக்கிக் கொங்கையி னூடுற மேல்விழு
செணத்திற் சய்பள மேபறி காரிகள் பலபேரைச்

சிமிட்டிக் கண்களி னூடுற வேமயல்
புகட்டிச் செந்துகி லால்வெளி யாயிடை
திருத்திப் பண்குழ லேய்முகி லோவிய மயில்போலே

அருக்கிப் பண்புற வேகலை யால்முகை
மறைத்துச் செந்துவர் வாயமு தூறல்க
ளளித்துப் பொன்குயி லாமென வேகுரல் மிடறூதை

அசைத்துக் கொந்தள வோலைக ளார்பணி
மினுக்கிச் சந்தன வாசனை சேறுட
னமைத்துப் பஞ்சணை மீதணை மாதர்கள் உறவாமோ

---

* கசுத்தி - கஸ்தி, வருத்தம். † அமர்க்குச் செப்பதத்தை - அமரர்க்குச் செம்பதத்தை. ‡ கைக்கு அணி - கையினிடத்து அணிந்த. § குச்சந்தரத்து ஐ சுத்த ஒளிர்வேலா - குஞ்சங்கட்டிய தகுதியையுடைய அழகிய பரிசுத்தமான பிரகாசிக்கின்ற வேலையுடையவா. || தட்சிவனார் - தண்ணியசிவனார்.

இரைத்துப் பண்டம ராவதி வானவ
ரொளித்துக் கந்தசு வாமிப ரா*பா
மெனப்பட் டெண்கிரி ஏழ்கடல் தூள்பட அசுரர்கள்

இறக்கச் சிங்கம தேர்பரி யானையொ
டுறுப்பிற் செங்கழு கோரிகள் கூளியொ
டிரத்தச் சங்கம தாடிட வேல்விடு மயில்வீரா

சிரித்திட் டம்புர மேமத னுருட
லெரித்துக் கண்டக பாலியர் பாலுறை
திகழ்ப்பொற் சுந்தரி யாள்சிவ காமிநல் கியசேயே

திருச்சித் தந்தனி லேகுற மானினை
யிருத்திக் கண்களி கூர்திக ழாடக
திருச்சிற் றம்பல வேலியு லாவிய பெருமாளே. (கக)

---

தத்தனந் தத்தனந் தானனத் தந்ததன
தத்தனந் தத்தனந் தானனத் தந்ததன
தத்தனந் தத்தனந் தானனத் தந்ததன தந்ததான.

707. தத்தையென் றொப்பிடுந் தோகைநட் டங்கொளுவர்
† பத்திரங் கட்‡கயங் காரியொப் புங்குழல்கள்
§ சச்சையங் கெச்சையுந் தாளமொத் தும்பதுமை என்பநீலச்

சக்கரம் பொற்குடம் பாலிருக் குந்தனமொ
டொற்றிநன் சித்திரம் போலவெத் தும்பறியர்
‖ சக்களஞ் சக்கடம் சாதிதுக் கங்கொலையர் சங்கமாதர்

¶ சுத்திடும் பித்திடுஞ் சூதுகற் குஞ்சதியர்
முற்பணங் $கைக்கொடுந் தாருமிட் டங்கொளுவர்
○ சொக்கிடும் புக்கடன் சேருமட் டுந்தனகும் விஞ்சையோர்பால்

---

* பரம் என-எம்மைக் காப்பது உன் பாரம் என. † பத்திரம் - அம்பு. ‡ கயம் காரி- நீருண்ட கார்மேகம். § சச்சை அம்கெச்சை - சத்திக்கும் அழகிய காற் சதங்கை. ‖ சக்களம் சக்கடம் சாதி - கபடத்தொடுகூடிய பரிகாசத்தைச் சாதிக்கின்ற. ¶ சுத்திடும் பித்து இடும் - தங்கள்வசத்திற் சுழலும் படியான பித்தேற்றுகின்ற சுத்து - சுற்று என்பதின் மரூஉ. $ கை கொடு உந்து ஆரும் - கையிற்கொண்டு செலுத்தும் யாரையும். ○ சொக்கு இடும்புகடன் சேருமட்டும் தனகும் - சொக்கும்படியான இடும்பு வார்த்தைகளைச் சொல்லிப் பொருள் பற்றிக்கொள்ளும் வரையில் கொஞ்சிப் பாராட்டும்.

தொக்கிடுங் கக்கலுஞ் சூலைபக் கம்பிளவை
விக்கலுந் துக்கமுஞ் சீதபித் தங்கள்கொடு
*துப்படங்கிப்படுஞ் சோரனுக் கும்பதவி எந்தநாளோ

குத்திரங் கற்றசண்டாளர்†சத்தங்குவடு
பொட்டெழுந் திட்டுநின் ருட‡எட் டந்திகையர்
கொற்றமுங் கட்டியம் பாட நிர்த் தம்பவுரி கொண்டவேலா

கொற்றர்பங் குற்றசிந் தாமணிச் செங்குமரி
பத்தரன் புற்றவெந் தாயெழிற் கொஞ்சுகிளி
கொட்புறந் தொக்கவெந் தாடவிட் டங்கிவிழி மங்கைபாலா

சித்திரம் பொற்குறம் பாவைபக் கம்புணர
செட்டியென் §றெத்திவந் தாடிநிர்த் தங்கள்‖புரி
சிற்பரம் பொற்புயஞ் சேரமுற் றும்புணரு மெங்கள்கோவே

சிற்பரன் தற்பரன் மாதிகழ்த் தென்புலியூர்
ருத்திரன் ¶பத்திரஞ் சூலகர்த் தன்சபையில்
தித்தியென் றொத்துநின் றடுசிற்றம்பலவர் தம்பிரானே (கஉ)

---

தனத்தத்தந் தனத்தத்தந்
தனத்தத்தந் தனத்தத்தந் தனதான.

708\. தனத்திற்குங் குமத்தைச்சந்
தனத்தைக் கொண் டணைத்துச்சங்
கிலிக்கொத்தும் பிலுக்குப்பொன்
தனிற்கொத்துந் தரித்துச்சுந்
தரத்திற்பண் பழித்துக்கண்
சுழற்றிச் சண் பகப்புட்பங் குழல்மேவித்

தரத்தைக்கொண் டசைத்துப்பொன்
தகைப்பட்டுந் தரித்துப்பின்
சிரித்துக்கொண் டழைத்துக்கொந்
தளத்தைத்தண் குலுக்கிச்$சங்
கலப்புத்தங் காத்துக்கொண்
டணைத்துச்சம் ரமித்துக்கொண் டுறவாடிப்

---

* துப்பு-உணர்வு. †சத்த அம் குவடு-ஏழுமலைகள். ‡எட்டு அம் திகையர்-அஷ்டதிக்குப் பாலகர். § எத்தி-மாறுவேடமிட்டு. ‖ புரி-புரிந்து. ¶ பத்திர அம் சூலம்-இலைகளையுடைய அழகிய சூலாயுதம். $சங்கு அலப்பு-வளையல்கள் சப்திக்கும் அலப்பு. அலப்பு-அலம்பு.

*புனித்தப்பஞ் சணைக்கட்டிண்
படுத்துச்சந் தனப்பொட்டுங்
குலைத்துப்பின் புயத்தைக்கொண்
டணைத்துப்பின் சுகித்திட்டின்
புகட்டிப்போன் சாக்கொத்துஞ்
சிதைப்பப்போன் தாப்பற்றும் பொதுமாதர்

புணர்ப்பித்தும் பிடித்துப்போன்
கொடுத்துப்பின் பிதிர்ச்சித்தன்
திணிக்கட்டுஞ் சிதைத்துக்கண்
†சிறுப்பப்புண் பிடித்தப்புண்
புடைத்துக்கண் பழுத்துக்‡கண்
டவர்க்குக்கண் புதைப்பச்சென் றுழல்வேனோ

சினத்துக்கண் சிவப்பச்சங்
கொலிப்பத்திண் கவட்டுச்செங்
குவட்டைச்சென் றிடித்துச்§சேண்
டரைத்துக்கம் பிடிக்கப்பண்
சிரத்தைப்பந் தடித்துக்கொண்
டிறைத்துத்தெண் கடற்றிட்டுங் கொளேபோகச்

செழித்துப்போன் சூரர்ச்சுற்றங்
களித்துக்கொண் டளிப்புட்பஞ்
சிறக்கப்பண் சிரத்திற்கொண்
டிறைத்துச்செம் பதத்திற்கண்
கிளப்பத்தந் தமக்கற்பின்
புகழ்ச்செப்புஞ் சயத்துத்திண் புயவேளே

‖பனித்துட்கங் கசற்குக்கண்
பரப்பித்தன் சினத்திற்றிண்
புரத்தைக்கண் டெரித்துப்பண்
கயத்தைப்பண் டுரித்துப்பன்
பகைத்தக்கன் தவத்தைச்சென்
றழித்துக்கொன் றடற்பித்தன் தருவாழ்வே

---

*புனித பஞ்சணைக்கண் திண்படுத்து எனப்பிரிக்க. †சிறுப்பப்புண்-ஸ்திரீ சம்பவத்தா லுண்டாகும் வியாதி. ‡கண்டவர்க்குக் கண்புதைப்ப-பார்த்தவர்களுக்கு அருவருப் புண்டாக, §சேண்-சேண், தரை துக்கம் பிடிக்கப்பண்-விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் துக்கம்பிடிக்கப் புண்ணிய, ‖ பனித்து உட்கு-நடுங்கி அஞ்சுகின்ற,

*படைத்துப்பொன் றுடைத்திட்பன்
தனைக்குட்டும் படுத்திப்பண்
கடிப்புட்பங் கனைச்சுற்றும்
பதத்தப்பண் புறச்சிற்றம்
பலத்திற்கண் களித்தப்பைம்
புனத்திற்செங் குறத்திப்பெண் பெருமாளே. (கரு)

தனதன தனத்தத் தந்த தந்தன
தனதன தனத்தத் தந்த தந்தன
தனதன தனத்தத் தந்த தந்தன தனதான.

709. திருடிக ளிணக்கிச் சம்ப ளம்பறி
நடுவிகள் மயக்கிச் சங்க மம்புரி
†சிதடிகள் முகைக்கச் சும்பல் கண்டிகள் சதிகாரர்

செவிடிகள் மதப்பட் டுங்கு குண்டிகள்
அசடிகள் ‡பிணக்கிட் டும்பு றம்பிகள்
செழுமிக ளழைத்திச் சங்§கொளுஞ்செயல் வெகுமோகக்

குருடிகள் நகைத்திட் டம்பு லம்புக
ளுதடிகள் கணக்கிட் டும்பி ணங்கிகள்
‖குசலிகள் ¶மருத்திட் டுங்கொ டுங்குணர் விழியாலே

கொளுவிகள் மினுக்குச் $சங்கி ரங்கிகள்
நடனமு நடித்துத் தங்கு சண்டிகள்
குணமதில் முழுப்பொய்ப் பங்க மந்திகள் உறவாமோ

இருடிய ரினத்துற் றும்ப தங்கொளு
மறையவ னிலத்தொக் குஞ்சு கம்பெறு
மிமையவ ரினக்கட் டுங்கு லைந்திட வருசூரர்

*படை துப்பு ஒன்றுடைத் திட்பன்-படைக்கும் வல்லமை ஒன்றை யுடைய வலியோனாகிய பிரமன். †சிதடிகள்-அறிவிலிகள். ‡பிணக்கிட்டும்-பிணங்கிடும். §கொளும்-கொளுவும். ‖குசலிகள்-தந்திரவாதிகள். ¶மருத்திட்டும்-மருத்திடும், மருந்திடும். $சங்கு இரங்கிகள்-வளைஒலி செய்பவர்.

இபமொடு கொதித்தச் சிங்க மும்பல
இரதமொ டெதிர்த்திக் கும்பி ளெந்திட
இவுளியி ரதத்துற் றங்க மங்கிட விடும்வேலா

*அரிகரி யுரித்திட் டங்க சன்புர
மெரிதர நகைத்துப் பங்க யன்சிர
மளவொடு மறுத்துப் பண்ட ணிந்தவர் அருள்கோனே

அமரர்த மகட்கிட் டம்பு ரிந்துநல்
குறவர்த மகட்பக் கஞ்சி றந்துற
அழகிய திருச்சிற் றம்ப லம்புகு பெருமாளே. (௧௪)

---

தனதன தனதன தானான தானன
தனதன தனதன தானான தானன
தனதன தனதன தானான தானன தந்ததான.

710. அவகுண விரகனை வேதாள ரூபனை
அசடனை மசடனை ஆசார ஈனனை
அகதியை மறவனை †ஆதாளி வாயனை அஞ்சுபூதம்

‡அடைசிய §சவடனை மோடாதி மோடனை
அழிகரு வழிவரு வீணாதி வீணனை
அழுகலை யவிசலை ஆறான வூனனை அன்பிலாத

கவடனை விகடனை நானா விகாரனை
வெகுளியை வெகுவித மூதேவி மூடிய
கலியனை அலியனை ‖ஆதேச வாழ்வனை வெம்பிவீழும்

களியனை யறிவுரை பேணாத மாநுட
கசனியை யசனியை மாபாத னாகிய
கதியிலி தனையடி நாயேனை யாளுவ தெந்தநாளோ

மவுலியி லழகிய பாதாள லோகனு
மாகத முழுகிய¶காகோத ராஜனு
மநுநெறியுடன்வளர் சோணாடர்கோனுடன் உம்பர்சேரும்

---

* அரி-வெற்றி. †ஆதாளிவாயன்-வீம்புபேசுவோன். ‡அடைசிய-ஒதுக்கிய. §சவடு-வண்டல். ‖ஆதேசம்-திரிபு. ¶காகோதராஜன்-பதஞ்சலி.

* மகபதி புகழ்புலி யூர்வாழு நாயகர்
மடமயில் மகிழ்வுற வாளுடர் கோவென
மலைமக ளுமைதரு வாழ்வே மனோகா மன்றுளாடும்

சிவசிவ ஹரஹர தேவா நமோ நம
தெரிசன பரகதி யானாய் நமோநம
திசையினு மிசையினும் வாழ்வே நமோநம செஞ்சொல்சேரும்

† திருதரு கலவிம ணாளா நமோநம
திரிபுர மெரிசெய்த கோவே நமோநம
செயசெய ஹரஹர தேவா சுராதிபர் தம்பிரானே. ()

---

தத்த தந்ததன தான தந்ததன
தத்த தந்ததன தான தந்ததன
தத்த தந்ததன தான தந்ததன தனதான.

711\. கட்டி முண்டகா பாலி யங்கிதனை
முட்டி யண்டமொடு தாவி விந்துவொலி
கத்த மந்திரவ தாள வெண்புரவி மிசையேறிக்

கற்ப கந்தெருவில் வீதி கொண்டுசுடர்
பட்டி மண்டபமு டாடி யிந்துவொடு
கட்டி விந்துபிச காமல் வெண்பொடிகொ டசையாமல்

சுட்டு வெம்புரநி ருக விஞ்சைகொடு
தத்து வங்கள்விழ சாடி யெண்குணவர்
சொர்க்கம் வந்துகையு ளாக எந்தைபதம் உறமேவித்

துக்கம் வெந்துவிழ ஞான முண்டுகுடில்
வச்சி ரங்களென மேனி தங்கமுற
சுத்த கம்புகுத வேத விந்தையொடு புகழ்வேனோ

‡ எட்டி ரண்டுமறி யாத என்செவியி
லெட்டி ரண்டுமிது வா§மி லிங்கமென
எட்டி ரண்டும்வெளி யாமொ ழிந்தகுரு முருகோனே

---

* மகபதி - இந்திரன். † திருதருகலவி மணாளா - லட்சுமிதேவியார் புத்திரிகளான அமுதவல்லி, சுந்தரவல்லி யென்ற தெய்வயானை, வள்ளி இவர்களின் கணவா. ‡ எட்டு இரண்டு - அகார உகாரங்கள். அவற்றின் பிர பாவம் குருமுகமாக உணரற்பாலது. § இலிங்கம் - சிவக்குறி.

எட்டி ரண்டுதிசை யோட செங்குருதி
யெட்டி ரண்டுமுரு வாகி வஞ்சகர்மெ
லெட்டிரண்டுதிசையோர்கள்பொன்ற வயில் விடுவோனே

செட்டி யென்று † சிவ காமி தன்பதியில்
கட்டு செங்கைவளை கூறு மெந்தையிட
சித்த முங் ‡ குளிர ஞாதி வண்பொருளை நவில்வோனே

செட்டி யென்றுவன மேவி § யின்பரச
சத்தி யின்செயலி னாளை யன்புருக
|| தெட்டி வந்துபுலி யூரின்மன்றுள்வளர் பெருமாளே. ()

---

தந்த தந்தன தந்த தந்தன தந்த தந்தன தந்த தந்தன
தந்த தந்தன தந்த தந்தன தந்ததான.

712. கொந்த ரங்குழ லிந்து வண்புரு வங்கள் கண்கய லுஞ்ச ரங்கணை
கொண்ட ரம்பைய ரந்த முஞ்சசி துண்டமாதர்

கொந்த ளங்கதி ரின்கு லங்களி னுஞ்சு ழன்றிர சம்ப லங்கனி
கொண்ட நண்பித ழின்சு கங்குயி லின்சொல்மேவும்

தந்த வந்தர ளஞ்சி றந்தெழு கந்த ரங்கமு கென்ப பைங்கழை
தண்பு யந்தளி ரின்கு டங்கையர் அம்பொனாரம்

தந்தியின்குவ டின்தனங்களி ரண்டையுங்கலைகொண்டு விண்டவர்
தங்க டம்படி யுங்க வண்டிய சிந்தையாமோ

மந்த ரங்கட லுஞ்சு ழன்றமிர் தங்க டைந்தவ னஞ்சு ¶ மங்குலி
மந்தி ரஞ்செல்வ முஞ்சு கம்பெற எந்தவாழ்வும்

வந்த ரம்பையெ னும்ப கிர்ந்தூத டங்கொ ளுந்திரு மங்கை பங்கினன்
வண்டர் லங்கையு ளன்சிரம்பொடி கண்டமாயன்

உந்தி யின்புவ னங்க ளெங்கும டங்க வுண்டகு டங்கை யன்புக
ழொண்பு ரம்பொடி கண்ட எந்தையர் பங்கின்மேவும்

உம்ப லின்கலை மங்கை சங்கரி மைந்த னென்றய னும்புகழ்ந்திட
வொண்ப ரந்திரு வம்ப லந்திகழ் தம்பிரானே. (கஎ)

---

* எட்டு இரண்டு திசை - அஷ்டதிக்கு பூமி, ஆகாயம். † சிவகாமி தன் பதியில் - தேவிக்கு ஆதிக்கஸ்தானமாகியமதுரையில். ‡ குளிர அநாதி என்று பிரிக்க § இன்பரச சத்தியின் செயலினாளை. இச்சா சத்தி மயமான வள்ளி நாயகியை. || தெட்டி - எத்தி. ¶ மங்குலி - இந்திரன்.

தந்தனன தனதான தந்தனன தனதான.

713. செங்கலச முலையார்பால் சிந்தைநிலை தடுமாறு
அங்கமிக மெலியாதே அன்புருக அருள்வாயே
செங்கைபிடி கொடியோனே செஞ்சொல்தெரி புலவோனே
மங்கையுமை தருசேயே மன்றுள்வளர் பெருமாளே. (கஅ)

---

தனந்தந்தந் தனந்தந்தந் தனந்தந்தந் தனந்தந்தந்
தனந்தந்தந் தனந்தந்தந் தனதான.

714. தியங்குஞ்சஞ் சலந்துன்பங் கடந்தொந்தஞ் செறிந்தைந்திந்
த்ரியம்பந்தந் தருந்துன்பம் படுமேழை
*திதம்பண்பொன் றிலன்பண்டன் †தலன்குண்டன் சலன்கண்டன்
தெளிந்துன்றன் பழந்தொண்டென் றுயர்வாகப்
புயங்கந்திங் களின்துண்டங் குருந்தின்கொந் தயன்தன்கம்
பொருந்துங்கங் கலந்தஞ்செஞ் சடைசூடிப்
புகழ்ந்துங்கண் டுகந்துங்கும் பிடுஞ்செம்பொன் சிலம்பென்றும்
புலம்பும்பங் கயந்தந்தென் குறைதீராய்
இயம்புஞ்சம் புகந்துன்றுஞ் சுணங்கன்செம் பருந்தங்கங்
கிணங்குஞ்‡செந் தடங்கண்டுங் களிகூர
இடும்பைங்கண் சிரங்கண்டம் பதந்தந்தங் கரஞ்சந்தொன்
றெலும்புஞ்சிந் திடும்பங்கஞ் செயும்வேலா
தயங்கும்பைஞ் சுரும்பெங்குந் தனந்தந்தந் தனந்தந்தந்
தடந்தண்பங் கயங்கொஞ்சுஞ் சிறுகூரா
தவங்கொண்டுஞ் செபங்கொண்டுஞ் சிவங்கொண்டும் ப்ரியங்கொண்டுந்
தலந்துன்றம் பலந்தங்கும் பெருமாளே. (கசு)

---

தன்னனந் தனத்த தந்த தன்னனந் தனத்த தந்த
தன்னனந் தனத்த தந்த தனதான.

715. பருவம் பணைத்தி ரண்டு கிரிகொம் பெனத்தி ரண்டு
பவளம் பதித்த செம்பொ னிறமார்பிற்

* திதம்-நிலைமையான. † தலன்-கீழானவன். ‡ செந்தடம்-ரணகளம்.

படரூங் கனத்த கொங்கை மினல்கொண் டளித்து சிந்த
பல*விஞ் சையைப் புலம்பி — அழகான
புருவஞ் சுழற்றி யிந்த்ர தநுவந் துதித்த தென்று
புளகஞ் செலுத்தி ரண்டு — கயல்மேவும்
பொறிகண் சுழற்றி †ரம்ப பரிசம் பயிற்றி மந்த்ர
பொடிகொண் டழிக்கும் வஞ்சர் — உறவாமோ
உருவந் தரித்து கந்து காமும் பிடித்து வந்து
உறவும் பிடித்‡த ணங்கை — வனமீதே
ஒளிர்கொம் பிணைச்ச வுந்த ரிய§வும் பலைக்கொ ணர்ந்து
ஒளிர்வஞ் சியைப்பு ணர்ந்த — மணிமார்பா
செருவெங் களத்தில் வந்த அவுணன் தெறித்து மங்க
சிவமஞ் செழுத்தை மூந்த — விடுவோனே
தினமுங் களித்து செய்பொ னுலகந் துதித் திறைஞ்சு
திருவம் பலத்த மர்ந்த — பெருமாளே. (௨௦)

---

716. மதவெங் கரிக்கி ரண்டு வலுகொம் பெனத்தி ரண்டு
வளருந் தனத்த ணிந்த — மணியாரம்
வளைசெங் கையிற்சி றந்த வொளிகண் டு‖நித்திலங்கு
வரருந் திகைத்தி ரங்க — வருமானுர்
விதவிங் கிதப்ரி யங்கள் நகைகொஞ் சுதற்கு ணங்கள்
மிகைகண் டுறக்க லங்கி — மருளாதே
¶விடுசங் கையற்று ணர்ந்து வலம்வந் துனைப்பு கழ்ந்து
மிகவிஞ் சுபொற்ப தங்கள் — தருவாயே
நதியுந் திருக்க ரந்தை மதியுஞ் சடைக்க ணிந்த
நடநம் பருற்றி ருந்த — கயிலாய
$நகமங் கையிற்பி டுங்கு மசுரன் சிரத்தொ டங்கம்
நவதுங் காத்ர மூந்து — திரடோளுஞ்

---

* விஞ்சையைப் புலம்பி - பிறர் மயக்கத்தக்க சம்பிரதாய வசனம் புகன்று. † ரம்ப - நிரம்ப. ‡ அணங்கு ஐ வனமீதே - தெய்வத்தன்மை பொருந்திய அழகிய கற்பகவனத்திலே § உம்பல் - யானைமுகக்கடவுள். ‖ நித்து - நீத்து, துறந்து. ¶ விடு - விட்டு. $ நகம் - கயிலையங்கிரி.

சிதையும் படிக்கொ ரம்பு தனைமுன் தொடுத்த கொண்டல்
திறல்செங் கணைச்சு தன்றன் மருகோனே

தினமுங் கருத்து ணர்ந்து சுரர்வந் துறப்ப ணிந்த
திருவம் பலத்த மர்ந்த பெருமாளே. (௨௧)

---

தனதந்தன தனதந்தன தனதந்தன தான
தனதந்தன தனதந்தன தனதந்தன தான
தனதந்தன தனதந்தன தனதந்தன தானத் தனதான.

717. முகசந்திர புருவஞ்சிலை விழியுங்கயல் நீல
முகிலங்குழ லொளிர்தொங்கலொ டிசைவண்டுகள் பாட
மொழியுங்கிளி யிதழ்பங்கய நகைசங்கொளிகாதிற் குழையாட

முழுவங்கர சமுகப்பரி மளகுங்கும வாச
முலையின்பர சகுடங்குவ டிணைகொண்டுநல் மார்பில்
முரணுஞ்சிறு பவளந்தர ளவடந்தொடை யாடக் கொடிபோலத்

துகிரின்கொடி யொடியும்படி நடனந்துடை வாழை
மறையும்படி *துயல்சுந்தர சுகபங்கைய ரோடு
துதைபஞ்சணை மிசையங்கசன் ரதியின்பமதாகச் செயல்மேவித்

தொடைசிந்திட மொழிகொஞ்சிட அளகஞ்சுழ லாட
விழிதுஞ்சிட இடை†தொய்ஞ்சிட மயல்கொண்‡டணைகினும்
சுகசந்திர முகமும்பத அழகுந்தமி யேனுக் கருள்வாயே

§அகரந்திரு ‖உயிர்பண்புற அரியென்பது மாகி
உறையுஞ்சுட ரொளியென்கணில் வளருஞ்சிவ காமி
அமுதம்பொழி பரையந்தரி உமைபங்கா ளருக் கொருசேயே

அசுரன்சிர மிரதப்பரி சிலையுங்கெட கோடு
சரமும்பல படையும்¶பொடி கடலுங்கிரி சாய
அமர்கொண்டயில் விடுசெங்கர வொளிசெங்கதிர் போலத் திகழ்வோனே.

---

* துயல்-அசைந்தாடுகின்ற. † தொய்ஞ்சிட - தளர. ‡ அணைகினும்-அணைகினும். § அகர அம்திரு - எல்லா உயிர்களோடும் மெய்களோடும் கலந்தும் வேறாகியும் நிற்கும் அகரஎழுத்துப்போல் சித்தும் அசித்தும் ஆகிய பிரபஞ்சமுற்றும் தோய்ந்தும் வேறாகியும் நிற்கின்ற செல்வி. ‖ உயிர் பண்பு உற-ஆத்மகோடிகள் ரக்ஷணையைப்பொருந்த. ¶ பொடி-பொடிந்து தூளாகி.

மகரங்கொடி நிலவின்குடை மதனன்திரு தாதை
மருகன்றணி விருதும்புய முரசங்கலை யோத
மறையன்தலை யுடையும்படி நடனங்கொளு மாழைக் கதிர்வேலா

வடிவிந்திரன் மகள்சுந்தர மணமுங்கொடு மோக
சரசங்குற மகள்பங்கொடு வளர்தென்புலி யூரில்
மகிழும்புகழ் திருவம்பல மருவுங்கும ரேசப் பெருமாளே. ()

---

தந்தன தானன தான தந்தன
தந்தன தானன தான தந்தன
தந்தன தானன தான தந்தன தந்ததான.

718.*சந்திர வோலைகு லாவ கொங்கைகள்
†மந்தர மால‡ந னீர்த தும்பநல்
சண்பக மாலைகு லாவி ளங்குழல் மஞ்சுபோலத்

தண்கயல் வாளிக ளாரி ளம்பிறை
விண்புரு வாரிதழ் கோவை யின்கனி
தன்செய லார்நகை சோதி யின்கதிர் சங்குமேவும்

கந்தரர்§தேமலு மார்ப ரம்பநல்
சந்தன சேறுட னார்க வின்பெறு
கஞ்சுக மாமிட றோதை கொஞ்சிய ரம்பையாரைக்

கண்களி கூர||வெ காசை கொண்டவர்
பஞ்சணை மீதுகு லாவி னுந்திரு
கண்களி ராறுமி ராறு திண்புய முங்கொள்வேனே

இந்திர லோகமு ளாரி தம்பெற
சந்திரர் சூரியர் தேர்ந டந்திட
எண்கிரி சூர்கு ழாமி றந்திட கண்டவேலா

இந்திரை கேள்வர்பி தாம கன்கதி
ரிந்துச டாதரன் வாச வன்தொழு
தின்புற வேமனு நூல்வி ளம்பிய கந்தவேளே

---

* சந்திரவோலை - சந்திரனைப்போல் சீதளகாந்தியைத்தரும் காதோலை. † மந்தரம் ஆல-மந்தரகிரிபோல் அசைய. ‡ நல் நீர் ததும்ப-நல்ல நீர்மை பெருக. § தேமலும் மார்பரம்ப எனப்பிரிக்க, பரம்ப-பரவ. || வெகு ஆசை.

*சிந்துர மால்குவ டார்த னஞ்சிறு
பெண்கள்சி காமணி மோக வஞ்சியர்
செந்தினை வாழ்வளி †நாய கொண்குக அன்பரோது

செந்தமிழ் ஞானத டாக மென்சிவ
கங்கைய ளாவு மகாசி தம்பர
திண்சபை மேவு ‡மனுச வுந்தர தம்பிரானே. (௨௩)

---

தனனதான தனந்தன தானன
தனனதான தனந்தன தானன
தனனதான தனந்தன தானன தந்ததான.

719. கரியமேக மெனுங்குழ லார்பிறை
சிலைகொள் வாகு வெனும்புரு வார்விழி
கயல்கள்வாளி யெனுஞ்செய லார்மதி துண்டமாதர்

கனகமேவு புயங்கழை யார்தன
மலைகளாயி ணையுங்குவ டாரக
கமலவாழை மனுந்துடை யார்மிளிர் §புங்கமாடை

வரியபாளி தமுந்துடை யாரிடை
துடிகள் நூலி யலுங்கவி னால்குல்
மணமுலாவி யரம்பையி னார்பொருள் சங்கமாதர்

மயில்கள்போல நடப்புரி வாரியல்
குணமிலாத வியன்செய லார்வலை
மசகிநாயெ னழிந்திட வோஉன தன்புதாராய்

சரியிலாத சயம்பவி யார்முகி
லளகபார பொனின்சடை யாள்சிவை
சருவலோக சவுந்தரி யாளருள் கந்தவேளே

சதபணும குடம்பொடி யாய்விட
அவுணர்சேனை மடிந்திட வேயொரு
தழல்கொள்வேலை யெறிந்திடு சேவக செம்பொன்வாகா

---

* சிந்துரம்-செங்குங்குமம். † நாயக ஒண்குக எனப்பிரிக்க. ‡மனு-மன்று, §புங்கமாடைவரிய பாளிதம்-உயர்ந்த தங்கக்கோடுகளையும், சரிகைகளையும் உடைய பட்டுப்புடவை.

அரியமேனி யிலங்கையி ராவணன்
முடிகள்வீழ சரந்தொடு மாயவன்
அகிலமீரெ ழுமுண்டவன் மாமரு — கண்டரோதும்
அழகுசோபி தவங்கொளு மானன
விபுதைமோகி குறிஞ்சியின் வாழ்வளி
அருள்கொடாடி சிதம்பர மேவிய — தம்பிரானே (உச)

---

தாந்த தானன தந்தனதந்தன
தாந்த தானன தந்தனதந்தன
தாந்த தானன தந்தனதந்தன — தந்ததான.

720. கூந்த லாழவி ரிந்துசரிந்திட
காந்து மாலைகு லைந்து*பளிங்கிட
கூர்ந்த வாள்விழி கெண்டைகலங்கிட — கொங்கையாகும்
கோங்க மாமுகை பொங்கநலம்பெறு
காந்தள் மேனிம ருங்குதுவண்டிட
கூர்ந்த ஆடைகு லைந்துபுரண்டிர — சங்கள்பாயச்
சாந்து வேர்வினி ழிந்துமணந்†தப
மோங்க வாவில்க லந்துமுகங்கொடு
தான்ப லாசுளை யின்சுவைகண்டித — மூண்டுமோகம்
தாம்பு ருமயி லின்குரல்கொஞ்சிட
வாஞ்சை மாதரு டன்‡புளகங்கொடு
சார்ந்து நாயென ழிந்துவிழுந்துடல் — மங்குவேனோ
தீந்த தோதக தந்தன திந்திமி
ஆண்ட பேரிகை துந்துமிசங்கொடு
சேர்ந்த பூரிகை பம்பைதவண்டைகள் — பொங்குசூரைச்
§சேண்சு லாமகு டம்பொடிதம்பட
வோங்க வேழ்கட லுஞ்||சுவறங்கையில்
சேர்ந்த வேலது கொண்டுநடம்பயில் — கந்தவேளே
மாந்த ளுறுவ னங்குயில்கொஞ்சிட
தேங்கு வாழைக ரும்புகள்விஞ்சிடு
வான்கு லாவுசி தம்பரம்வந்தமர் — செங்கைவேலா
மாண்ப்ர காசத னங்கிரிசுந்தர
மேய்ந்த நாயகி சம்பைமருங்குபொன்
வார்ந்த ரூபிகு றம்பெண்வணங்கிய — தம்பிரானே (உரு)

---

*பளிங்கிட-கண்ணாடிபோற்பிரகாசிக்க. †அபம்-கீழ்மை. ‡புளகம்-மகிழ்ச்சி. §சேண்-உயர்வு. || சுவற அங்கையில் எனப்பிரிக்க.

தனத்தத் தானன தானன தானன
தனத்தத் தானன தானன தானன
தனத்தத் தானன தானன தானன தந்ததான.

721. எலுப்புத் தோல்மயிர் நாடி*கு ழாமிடை
இறுக்குச் சீபுழு வோடடை மூளைகள்
இரத்தச் சாகர நீர்மல மேவிய கும்பியோடை

இளைப்புச் சோகைகள் வாதம்வி லாவலி
உளைப்புச் சூலையொ டேவலு வாகிய
இரைப்புக் கேவல மூலவி யாதியொ டண்டவாதம்

குலைப்புக் காய்கனல் நீரிழி விளையொ
டளைப்புக் காதடை கூனல்†வி சூசிகை
குருட்டுக் கால்முட மூமையு ளூடறு கண்டமாலை

குடிப்புக் கூனமி தேசத மாமென
எடுத்துப் பாழ்வினை யாலுழல் நாயெனு
னிடத்துத் தாள்பெற ஞானச தாசிவ அன்புதாராய்

கெலிக்கப் போர்பொரு சூர்கு ழாமுமி
ழிரத்தச் சேறெழ தேர்பரி யாளிகள்
கெடுத்திட் டேகடல் சூர்கிரி தூள்பட கண்டவேலா

கிளர்ப்பொற் றோளிச ராசர மேவியெ
யசைத்துப் பூசைகொள் ஆயிப ராபரி
‡கிழப்பொற் காளைமெ லேறு§மெநாயகி பங்கின்மேவும்

வலித்துத் தோள்மலை ராவண னுனவன்
எடுத்தப் போதுடல் கீழ்விழ வேபணி
மகிழ்ப்பொற் பாதசி வாயந மோவா சம்புபாலா

மலைக்கொப் பாமுகை யாள்குற மாதினை
அணைத்துச் சீர்புலி யூர்பர மாகிய
வடக்குக் கோபுர வாசலில் மேவிய தம்பிரானே. (உசு)

---

*குழாம்-குவியல் †விசூசிகை-ஓர் நோய். ‡கிழ பொற்காளை-உரிமை யாகிய அழகிய காளை. §எம் நாயகி-எம்முடைய பிராட்டி.

தானத் தானன தானன தானன
தானத் தானன தானன தானன
தானத் தானன தானன தானன தனதான.

722. ஆரத் தோடணி மார்பிணை யானைகள்
போருக் காமென மாமுகை யேகொடு
ஆயத் தூசிணை மேவிய நூலிடை மடமாதர்

ஆலக் கோதினி லீரமி லாமன
நேசத் தோடுற வானவர் போலுவர்
*ஆருக் கேபொரு ளாமென வேநினை வதனாலே

காருக் கேநிக ராகிய வோதிய
மாலைத் தோடணி காதொடு மோதிய
காலத் தூதர்கை வேலென நீள்விழி வலையாலே

காதற் சாகர மூழ்கிய காமுகர்
மேலிட் டேயெறி †கீலிகள் நீலிகள்
காமத் தோடுற வாகையி லாவருள் புரிவாயே

சூரர்க் கேயொரு கோளரி யாமென
நீலத் தோகைம யூரம தேறிய
தூளிக் கேகடல் தூரநி சாசரர் களமீதே

சோரிக் கேவெகு ரூபம தாவடு
தானத் தானன தானன தானன
சூழிட் டேபல ‡சோருக ளாடவெ பொரும்வேலா

வீரத் தால்வல ராவண னார்முடி
போகத் தானொரு வாளியை யேவிய
மேகத் தேநிக ராகிய மேனியன் மருகோனே

வேதத் தோன்முத லாகிய தேவர்கள்
பூசித் தேதொழ வாழ்புலி யூரினில்
மேலைக் கோபுர வாசலில் மேவிய பெருமாளே (உஎ)

---

தானத் தான தத்த தானத் தான தத்த
தானத் தான தத்த தனதான.

723. காதைக் காதி மெத்த மோதிக் கேள்வி யுற்ற
காமப் பூச லிட்டு மதியாதே

*ஆருக்கே-யாராலே. †கீலிகள், கிலகிகள்-தந்திரவதிகள், ‡சோரு-பேய்.

காரொத் தேய்நி றத்த வோதிக் காவ னத்தி
னீழற் கேத ருக்கி விளையாடிச்

சேதித் தேக ருத்தை நேருற் றேபெ ருத்த
சேலத் தேவ ருத்தும் விழிமானார்

தேமற் பார வெற்பில் மூழ்கித் தாப மிக்க
தீமைக் காவி தப்ப நெறிதாராய்

மாதைக் காத லித்து வேடக் கான கத்து
வாசத் தாள்சி வப்ப வருவோனே

வாரிக் கேயொ ளித்த மாயச் சூரை வெட்டி
மாளப் போர்தொ லைத்த வடிவேலா

வீதித் தேர்ந டத்து தூளத் தால ருக்கன்
வீரத் தேர்ம றைத்த புலியூர்வாழ்

மேலைக் கோபு ரத்து மேவிக் கேள்வி மிக்க
வேதத் தோர்து திக்க பெருமாளே. (உ௮)

---

தைய தானத் தானன தானன
தைய தானத் தானன தானன
தைய தானத் தானன தானன தனதான.

24. கொள்ளை யாசைக் காரிகள் பாதக
வல்ல மாயக் காரிகள் சூறைகள்
கொள்ளும் ஆயக் காரிகள் வீணிகள் விழியாலே

கொல்லும் லீலைக் காரிகள் யாரையும்
வெல்லு மோகக் காரிகள் சூதுசொல்
கொவ்வை வாய்நிட் டூரிகள் மேல்விழு மவர்போல

எள்ள *நோவைத் தேயுற வாடியர்
அல்லை நேரொப் பாமன தோடிகள்
உள்வி ரோதக் காரிகள் மாயையில் உழல்நாயேன்

உய்ய வேபொற் றோள்களும் ஆறிரு
கையும் நீபத் தார்முக மாறுமுன்
உள்ள ஞானப் போதமும் நீதர வருவாயே

---

* நோவைத்து - நோவவைத்து.

கள்ள மாயத் தாருகன் மாமுடி
துள்ள நீலத் தோகையின் மீதொரு
கையின் வேல்தொட் டேவிய சேவக முருகோனே

கல்வி லேபொற் றாள்பட வேயது
நல்ல ரூபத் தேவர கானிடை
* கௌவை தீரப் போமிரு ராகவன் மருகோனே

தெள்ளி †யேமுற் ‡றீரமு ணோதிய
சொல்வ ழாமற் றொரு §வானுறு
செல்வி மார்பிற் பூஷண மாயணை மணவாளா

தென்னு மேனற் சூழ்புன மேவிய
வள்ளி வேளைக் காரம னோகர
தில்லை மேலைக் கோபுர மேவிய பெருமாளே. (உகூ)

---

தான தானன தனனு தானன
தான தானன தனனு தானன
தான தானன தனனு தானன தனதான.

725. தாது மாமலர் முடியா லேபத
ரூத நூபுர அடியா லேகர
தாள மாகிய நொடியா லேமடி பிடியாலே

சாடை பேசிய வகையா லேமிகு
வாடை பூசிய நகையா லேபல
தாறு மாறுசொல் மிகையா லேயன நடையாலே

மோதி மீறிய முலையா லேமுலை
மீதி லேறிய ||கலையா லேவெகு
மோடி நாணய விலையா லேமயல் தருமானார்

மோக வாரிதி தனிலே நாடொறு
மூழ்கு வேனுன தடியா ராகிய
மோன ஞானிக ளுடனே சேரவும் அருள்வாயே

காத லாயருள் புரிவாய் நான்மறை
மூல மேயென வுடனே மாகரி
காண நேர்வரு திருமால் நாரணன் மருகோனே

---

* கௌவை - கலக்கம். † ஏமுற்று - ஏமம்உற்று, இன்பமுற்று. ‡ ஈரம் முன் ஓதிய சொல் - அன்பினாலே முன்செய்த வாக்குத்தத்தம். § வானுறு செல்வி - தெய்வயானை. || கலை - ஆபரணம்.

காதல் மாதவர் வலமே சூழ்சபை
நாத னார்தம திடமே வாழ்சிவ
காம நாயகி தருபா லாபுலி — சையில்வாழ்வே

வேத நூன்முறை வழுவா மேதினம்
வேள்வி யாலெழில் புனைமூ வாயிர
மேன்மை வேதியர் மிகவே பூசனை — புரிகோவே

வீறு சேர்வரை யரசாய் மேவிய
மேரு மால்வரை யெனநீள் கோபுர
மேலை வாயிலின் மயில்மீ தேறிய — பெருமாளே. (ருO)

தத்தத் தானன தானன தானன
தத்தத் தானன தானன தானன
தத்தத் தானன தானன தானன — தனதான.

726. * அக்குப் பீளைமு ளாவிளை மூளையொ
டப்புக் † காய்பனி நீர்மயிர் தோல் ‡ குடி
லப்புச் சீபுழு வோடடை யார்தசை — புறமேவி

§ அத்திப் பால்பல நாடிகு ழா||யள்வ
முப்புச் சார்வல மேவிளை யூளைகொ
ளச்சுத் தோள்குடி லாமதி லேபொறி — விரகாளர்

¶ சுக்கத் தாழ்கட லேசுக மாமென
புக்கிட் டாசைபெ ணாசைம ணாசைகள்
தொக்குத் தீவினை யூழ்வினை காலமொ — டணலே

துக்கத் தேபர வாமல்ச தாசிவ
முத்திக் கேசுக மாகப ராபர
சொர்க்கப் பூமியி லேறிட வேபதம் — அருள்வாயே

தக்கத் தோகிட தாகிட திகிட
செக்கச் சேகண தாகண தோகண
தத்தத் தானன டகுட டாடுடு — வெனதாளம்

தத்திச் சூர்கு ழாமொடு தேர்பரி
கெட்டுக் கேவல மாய்கடல் மூழ்கிட
சத்திக் கேயிரை யாமென வேவிடு — கதிர்வேலா

---

* அக்குப்பீளை - கண்பீளை. † காய் - புரைகுழல். ‡ குடிலப்புச்சீ - வளைவான நாகப்பூச்சி. § அத்தி - எலும்பு. || அள்வழுட்பு-காதுக்குறும்பி.
¶ சுக்கத்தாழ்கடல் - கள்ள உறவாகிய ஆழியகடல்.

திக்கத் தோகண தாவென வே*பொரு
†சொச்சத் தாதையர் தாமென வேதிரு
சொக்கர்ப் பாதம தேபதி யாகுதி யவைபாடச்

செப்பொற் பீலியு லாமயில் மாமிசை
பக்கத் தேகுற மாதொடு சீர்பெறு
தெற்குக் கோபுர வாசலில் மேவிய பெருமாளே. (௩௧)

---

தனத்தத் தந்தனத்தத் தானன தானன
தனத்தத் தந்தனத்தத் தானன தானன
தனத்தத் தந்தனத்தத் தானன தானன தனதான.

727. அடப்பக் கம்பிடித்துத் தோளொடு தோள்பொர
வளைத்துச் செங்கரத்திற் சீரொடு பாவொடு
அணுக்கிச் ‡செந்துணுக்கிற் §கோவிதழூறல்க ளதுகோதி

அணிப்பொற் பங்கயத்துப் பூண்முலை மேகலை
நெகிழ்த்துப் ||பஞ்சரித்துத் தாபண மேயென
¶அருட்டிக் கண்சிமிட்டிப் பேசிய மாதர்கள் உறவோடே

படிச்சித் தங்களித்துத் தான்மிக மாயைகள்
படுத்துப் பண்பயிற்றிக் காதல்கள் மேல்கொள
பசப்பிப் பின்பிணக்கைக் கூறிய வீணிகள் அவமாயப்

$பரத்தைக் **குண்டுணர்த்துத் தோதக பேதைகள்
பழிக்குட் சஞ்சரித்துப் போடிடு மூடனை
பரத்துற் றண்பதத்துப் போதக மீதென அருள்தாராய்

தடக்கைத் தண்டெடுத்துச் சூரரை வீரரை
நொறுக்கிப் பொன்றவிட்டுத் தூளெழ நீறெழ
தகர்த்துப் பந்தடித்துச் சூடிய தோரண கலைவீரா

தகட்டுப் பொன்சுவட்டுப் பூவணை மேடையில்
சமைப்பித் தங்கொருத்திக் கோதில மாமயில்
தனிப்பொற் பைம்புனத்திற் கோகில மாவளி மணவாளா

---

* பொரு - நடம்பொரு நடனஞ் செய்கின்ற. † சொச்சம் - நிர்மலம். ‡ செந்துணுக்கில் - சிவந்த பவளத்துண்டை யொத்த § கோவிதழ் - கோப இதழ், இந்திரகோபத்தை யொத்த இதழ். || பஞ்சரித்து-குதலைமொழிபேசி. ¶ அருட்டி - சாக்கிரதைபண்ணி. $ பரத்தை-பரத்தைகள் ** குண்டு-தாழ்வு.

திடத்திற் றிண்பொருப்பைத் தோள்கொடு சாடிய
அரக்கத் திண்குலத்தைச் சூறைகொள் வீரிய
திருப்பொற் பங்கயத்துக் கேசவர் மாயவர் அறியாமல்

திமித்தத் திந்திமித்தத் தோவென ஆடிய
சமர்த்தப் பொன்புலிக்குட் டேவர்க ளுய்க
திருச்சிற் றம்பலத்துட் கோபுர மேவிய பெருமாளே.

---

தையதன தானனத் தானனந் தானதன
தையதன தானனத் தானனந் தானதன
தையதன தானனத் தானனந் தானதன தனதான.

728. முல்லைமலர் போலுமுத் தாயுதிர்ந் தானநகை
வள்ளைகொடி போலுநற் காதிலங் காடுகுழை
முல்லைமலர் மாலைசுற் றாடுகொந் தாருகுழல் அலைபோதே

*மொள்குசிலை வாணுதற் பார்வையம் பானகயல்
கிள்ளைகுர லாரிதழ்ப் பூவெனும் போதுமுக
முன்னல்கமு கார்களத் தோய்சுணங் காருமுகை மலையானை

வல்லகுவ டாலிலைப் போலுசந் தானவயி
றுள்ளதுகில் நூலிடைக் காமபண் டாரவல்குல்
†வழ்ழைதுடை யார்மலர்க் காலணிந் தாடுபரி புரவோசை

மல்லிசலி யாடபட் டாடைகொண் டாடமயல்
தள்ளுநடை யோடுசற் றேமொழிந் தாசைகொடு
வல்லவர்கள் போலபொற் சூறைகொண் டார்கள்மயல் உறவாமோ

அல்லல்வினை போகசத் தாதிவிண் டோடநய
வுள்ளமுற வாகவைத் தாளுமெந் தாதைமகி
‡ழுள்ளமைய ஞானவித் தோதுகந் தாகுமர முருகோனே

அன்னநடை யாள்குறப் பாவைபக் தாடுவிர
லென்னுடைய தாய்வெண்முத் தார்கடம் பாடுகுழ
லன்னைவலி சேர்தனக் கோடிரண் டானவளி மணவாளா

---

*மொள்கு-முகக்கின்ற. †வழ்ழை-வாழை. ‡அள்அமைய-காதிற்பொருந்த.

செல்லுமுக ஏழ்கடற் பாழிவிண் டோடதிர
வல்லசுரர் சேனைபட் டேமடிந் தேகுருதி
செல்லதிசை யோடுவிட் டாடுசிங் காரமுக வடிவேலா

தெள்ளுதமிழ் பாடியிட் டாசைகொண் டாட*சசி
வல்லியொடு கூடிதிக் கோர்கள்கொண் டாடவியல்
தில்லைநகர் கோபுரத் தேமகிழ்ந் தேகுலவு பெருமாளே.

---

தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன தந்ததான.

729. வாத பித்தமொடு சூலை விப்புருதி
யேறு கற்படுவ னீளை பொக்கிருமல்
†மாலை புற்றெழுத லூசல் பற்சனியொ ‡டந்திமாலை

மாச டைக்குருடு காத டைப்புசெவி
டூமை கெட்டவலி மூல §முற்றுதரு
‖மாலை யுற்றதொணு றாறு தத்துவர்கள் உண்டகாயம்

வேத வித்துபரி கோல முற்றுவினை
யாடு வித்தகட லோட மொய்த்தபல
வேட மிட்டுபொரு ளாசை பற்றியுழல் ¶சிங்கியாலே

வீடு கட்டிமய லாசை பட்டுவிழு
$வோசை கெட்டுமடி யாமல் முத்திபெற
○வீட ளித்துமயி லாடு சுத்தவெளி சிந்தியாதோ

**ஓத அத்திமுகி லோடு சர்ப்பமுடி
நீறு பட்டலற சூர வெற்பவுண
ரோடு பட்டுவிழ வேலை விட்டபுகழ் அங்கிவேலா

ஓநமச்சிவய சாமி சுத்த அடி
யார்க ளுக்குருப காரி பச்சையுமை
ஓர்பு றத்தருள்சி காம ணிக்கடவுள் தந்தசேயே

---

* சசிவல்லி - இந்திராணியின் மகளாகிய தெய்வயானையம்மை. † மாலை- கண்டமாலை. ‡ அந்திமாலை - மாலைக்கண். § முற்றுதரு - முதிரும்படியான விருக்ஷம். ‖ மாலையுற்ற - முறைமையாகப் பொருந்திய. ¶ சிங்கியாலே-அழி செயலாலே. $ ஓசை கெட்டு - உள்ளோசையாகிய நாதம்போய். ○ வீட ளித்து-வீடளிக்க. ** ஓத அத்தி - ஓதமென்னுமோசையுடைய கடல்.

ஆதி கற்பகவி நாய கற்குபிற
கான பொற்சரவ ணு*ப ரப்பிரம
ஞாதி யுற்ற பொருள்†ஓது வித்தமைய நிர்தகோவே
ஆசை பெற்றகுற மாதை நித்தவன
மேவி சுத்தமணா மாடி சுற்புவியு
ராட கப்படிக கோபு ரத்தின்மகிழ் தம்பிரானே. (௩௪)

தான தானன தான தானன தான தானன தான தானன
தான தானன தான தானன தனதான.

730. நீல மாமுகில் போலும் வார்குழ லார்கள் மாலைகு லாவ வேல்கணை
நீள வாள்விழி பார்வை காதிரு குழையாட
நீடுமார்பணி யாடவோடிய ‡கோடுபோ§லிணை யாடநூலிடை
நேச ‖பாளித சேலை மாமயில் எனவேகிக்
காலி னூபுர வோசை கோவென ஆடி மால்கொடு நாணி யேவியர்
காய மோடணு பாகு பால்மொழி விலைமாதர்
காத லாயவ ரோடு பாழ்வினை மூழ்கி யேழ்நர காழு மூடனை
காவ ரோதய மாசி வாபதம் அருள்வாயே
கோலமாமயி லேறிவார்குழை யாடவேல்கொடு வீரவார்கழல்
கோடி கோடிடி யோசை போல்வட வரைதூளாய்க்
கோகொ கோவென ஆழிபாடுகள் தீவுதாடசு ரார்குழாமொடு
கூளமாக விணோர்கள் வாழ்வுற விடும்வேலா
¶நாலுவேதமு டாடுவேதனை யினுகேசவ ஞர்சகோதர
நாதர் பாகம்வி டாள்சி காமணி உமைபாலா
ஞான பூமிய தான பேர்புலி யூரில் வாழ்தெய்வ யானைமாதொடு
நாலு கோபுர வாசல் மேவிய பெருமாளே. (௩௫)

தனந்தத் தத்தன தானன தானன
தனந்தத் தத்தன தானன தானன
தனந்தத் தத்தன தானன தானன தனதான.

731. இணங்கித் தட்பொடு பாழ்மொழி பேசிகள்
மணந்திட் டுச்சுக மாய்வினை யாடிகள்
இளஞ்சொற் செப்பிகள் சாதனை வீணிகள் கடிதார்கும்

*பரப்பிரம-அனாதி. † ஓதுவித்தமை-ஓதுவிக்குந்தன்மை. ‡ கோடு-மலைச்சிகரம். § இணை-இரண்டு. ‖ பாளிதம்-பட்டுப்புடவை ¶வேதம்பயின்ற.

இடும்பைப் பற்றிய தாமென மேயினர்
பெறுஞ்சொற் பித்தளை தானும்வை யாதவர்
இடும்பிற் பற்றிய கூர்விழி மாதர்கள் எவரேனும்

பணஞ்சுற் றிக்கொளு பாயவு தாரிகள்
மணங்கட் டுக்குழல் வாசனை வீசிகள்
பலஞ்செப் பித்தா மீளழை யாதவர் அவரோடே

பதந்துய்த் துக்கொடு தீமைய மாநர
கடைந்திட் டுச்சவ மாகிவி டாதுன
பதம்பற் றிப்புக ழானது கூறிட அருள்வாயே

வணங்கச் சித்தமி லாதவி ராவணன்
சிரம்பத் துக்கெட வாளிக டாவியெ
மலங்கப் *பொக்கரை யீடழி மாதவன் மருகோனே

மதம்பட் டுப்பொரு சூரபன் மாதியர்
குலங்கொட் டத்திகல் கூறிய †மோடரை
வளைந்திட் டுக்கள மீதினி லேகொல விடுவேலா

பிணம்பற் றிக்கழு கோடுபல் கூளிகள்
பிடுங்கிக் கொத்திட வேயம ராடியெ
பிளந்திட் டுப்பல மாமயி லேறிய முருகோனே

பிரிந்திட் டுப்பரி வாகிய ஞானிகள்
‡சிலம்பத் தக்கழல் சேரவெ நாடிடு
பெரும்பற் றப்புலி யூர்தனில் மேவிய பெருமாளே. (௩௰௯)

---

732. §விடுங்கைக் கொத்தக டாவுடை யானிடம்
மடங்கிக் ||கைச்சிறை யானவ நேகமும்
விழுங்கப் பட்டற வேயற லோதியர் விழியாலே

விரும்பத் தக்கன போகமு மோகமும்
விளம்பத் தக்கன ஞானமு மானமும்
¶வெறுஞ்சுத் தச்சல மாய்வெளி யாயுயிர் விடுகாளில்

இடுங்கட் டைக்கிரை யாவடி யேனுடல்
கிடந்திட் டுத்தம ரானவர் கோவென
இடங்கட் டிச்சுடு காடுபு காமுன மனதாலே

*பொக்கர் - பொய்மையுடைய இராக்கதர். †மோடர்-அறிவீனர். ‡சிலம்பு அத்த கழல் சேர-சிலம்பையும் பொன்னாற் செய்யப்பட்ட வீரக் கழலையும் அணிந்த திருவடிகளைச்சேர. § விடும்கைக்கு ஒத்த கடா-ஏறி நடத்தும் கைக்கு ஏற்ற எருமைக் கடா. || கைச்சிறையான-கைவசத்தி லிருந்த. ¶வெறும் சுத்த சலமாய் - வெறும் கானல் நீர்போன்று பொய்யாகி.

இறந்திட் டுப்பெற வேகதி யாயினும்
இருந்திட் டுப்பெற வேமதி யாயினும்
இரண்டிற் றக்கதொ *ரூதியம் நீதர இசைவாயே

†கொடுங்கைப் பட்டம ராமர மேழுடன்
நடுங்கச் சுக்ரிவ னோடம ராடிய
‡குரங்கைச் செற்றுமு கோததி தூளெழ நிருதேசன்

குலங்கட் பட்டநி சாசரர் கோவென
இலங்கைக் குட்டழ லோனெழ நீடிய
§குமண்டைக் குத்திர ராவண னார்முடி அடியோடே

பிடுங்கித் தொட்டச ராதிப னாதி
ப்ரியங்||கொட் டக்கநன் மாமரு காவியல்
ப்ரபஞ்சத் துக்கொரு பாவல னானென விருதூதும்

ப்ரசண்டச் சொற்சிவ வேதசி காமணி
ப்ரபந்தத் துக்கொரு நாதச தாசிவ
பெரும்பற் றப்புலி யூர்தனில் மேவிய பெருமாளே. (௩௭)

---

தனந்தத்த தனதான தனந்தத்த தனதான
தனந்தத்த தனதான தனதான.

733. கரும்புற்ற பொழில்தோறும் விரும்புற்ற குயில்கூவ
துரந்துற்ற குளிர்வாடை அதனாலும்

துலங்குற்ற மருவாளி விரைந்துற்ற படி ¶யால
தொடர்ந்துற்று தருமாதர் வசையாலும்

அரும்புற்ற மலர்மேவு செழுங்கொற்ற அணையாலு
மடைந்திட்ட விடைமேவு மணியாலும்

அழிந்துற்ற மடமானை யறிந்$தற்ற மதுபேணி
அசைந்துற்ற மதுமாலை தரவேணும்

கருங்கொற்ற மதவேழ முனிந்துற்ற ○கலைமேவி
கரந்துற்ற மடமானி னுடனேசார்

கரும்புற்ற வயல்சூழு பெரும்பற்ற புலியூரில்
களம்பற்றி நடமாடு மான்வாழ்வே

---

* ஊதியம் - பலம். †கொடுங்கை - கொடுமை. ‡ குரங்கு - வாலி. § குமண்டை - செல்வமேலீட்டா லுண்டாகும் செருக்கு || கொட்டக்க- கொள்ளத்தக்க. ¶ ஆல. சேர. $அற்றம்-சமயம் ○ கலை-காலை.

இருந்துற்று மலர்பேணி யிடும்பத்தர் துயர்தீர
இதம்பெற்ற மயிலேறி வருகோவே
இனந்துற்று வருசூர னுருண்டிட்டு விழவேல்கொ
டெறிந்திட்டு விளையாடு பெருமாளே. (௩௮)

---

தந்தன தானன தானத்தந் தந்தன தானன தானத்தந்
தந்தன தானன தானத்தந் தனதான.

734. *கொந்தள வோலைக ளாடப்பண் சங்கொளி போல்நகை வீசித்தண்
கொங்கைகள் மார்பினி லாடக்கொண் டையென்மேகம்
†கொங்கெழ தோள்வளை யாடக்கண் செங்கயல் வாளிகள் போலப்பண்
கொஞ்சிய கோகில மாகப்பொன் பறிகாரர்
தந்திர மாமென வேகிப்பொன் தொங்கலொ டாரமு மாடச்செந்
தம்பல வாயொடு பேசிக்கொண் டுறவாடிச்
சம்பள மீதென வோதிப்பின் பஞ்சணை மேல்‡மய லாடச்சஞ்
சங்கையில் மூளியர் பால்வைக்குஞ் செயல்தீராய்
அந்தக னுருயிர் போலப்பொன் திண்புர மோடெரி பாயப்பண்
டங்கச னுருடல் வேகக்கண் §டழல்மேவி
அண்டர்க ளோடட லார்தக்கன் சந்திர சூரியர் வீழச்சென்
றம்பல மீதினி லாடத்தன் குருநாதா
சிந்துரமோடரி தேர்வர்க்கம் பொங்கமொ டேழ்கடல் சூர்பத்மன்
சிந்திட வேல்விடு வாகைத்திண் புயவேளே
செங்குற மாதுமு னோக்கண் டிங்கித மாயுற வாடிப்பண்
செந்தமிழ் வாழ்புலி யூர்நத்தும் பெருமாளே. (௩௯)

---

தனனா தத்தன தானத்தந்
தனனா தத்தன தானத்தந்
தனனா தத்தன தானத்தந் தனதான.

735. நகையா லெத்திகள் வாயிற்றம்
பலமோ டெத்திகள் ‖ நாணற்றின்
நயனா லெத்திகள் நாறற்புண் துடைமாதர்
நடையா லெத்திக ளாரக்கொங்
கையினா லெத்திகள் மோகத்தின்
நவிலா லெத்திகள் தோகைப்பைங் குழல்மோகச்

---

*கொந்தளம்-கூந்தல். †கொங்கு-வாசனை ‡மயலாடு அச்சம் சங்கை இல் மூளியர் எனப்பிரிக்க. § அழல்மேவி-தக்கன் செய்த யாகத்தினிடத்திற் சென்று ‖ நாணற்றின் நாண் அற்று இன்,' நயனால்-நயத்தால்.

சிகையா லெத்திக ளாசைச் *சங்
கடியா லெத்திகள் பாடிப்பண்
திறனு லெத்திகள் பாரத்திண் தெருவூடே
சிலர்கூ டிக்கொடு ஆடிக்கொண்
டுழல்வா ருக்குழல் நாயெற்குன்
செயலா லற்புத ஞானத்திண் கழல்தாராய்
பகையா ருட்கிட வேலைக்கொண்
டுவாரா ழிக்கிரி நாகத்தின்
படமோ டிற்றிட சூரைச்சங் கரிசூரா
பணநா கத்திடை சேர்முத்தின்
சிவகா மிக்கொரு பாகத்தின்
பரிவால் †சத்துப தேசிக்குங் குருவோனே
சுகஞா னக்கடல் மூழ்கத்தந்
தடியே னுக்கருள் பாலிக்குஞ்
சுடர்பா தக்குக னேமுத்தின். கழல்வீரா
‡சுகரே சத்தன பாரச்செங்
குறமா தைக்கள வால்நித்தஞ்
சுகமூழ் கிப்புலி யூர்நத்தும் பெருமாளே. (சய)

தனதன தனன தனதன தனன தனதன தனன தன்தான.

736. எழுகடல்மணலை அளவிடி னதிக மெனதிடர்பிறவி யவதாரம்
இனியுன தபய மெனதுயி ருடலு மினியுடல் விடுக முடியாது
கழுகொடு நரியு மெரிபுவி மறலி கமலனு மிகவும் அயர்வானார்
கடனுன தபய மடிமையு னடிமை கடுகியு னடிகள் தருவாயே
விழுதிக ழழகி மரகத வடிவி விமலிமு னருளு முருகோனே
விரிதல மெரிய குலகிரிநெரிய விசைபெறுமயிலில் வருவோனே
எழுகடல் குமுற அவுணர்களுயிரை யிரைகொளும் அயிலை யுடையோனே
இமையவர் முநிவர் பரவியபுலியு ரினில்நடமருவு பெருமாளே.

தனதன தனன தனதன தனன
தனதன தனனத் தனதான.

737. தறுகணன் மறலி முறுகிய கயிறு
தலைகொடு விசிறீக் கொடுபோகும்

* சம் கடி-சுகத்தைத்தரும் வாசனை. †சத்து - பிரணவம் ‡ சுகரேசம் - தமது நகக்குறியுள்ள. கரேடம் - நகம் - கரேடகம் என்பது கரேச மாயிற்று.

*சளமது தவிர அளவிடு சுருதி
கலைகொடு பலசாத் திரமோதி
அறுவகை சமய முறைமுறை சருவி
யலைபடு தலைமூச் சினையாகும்
†அருவரு வொழிய வடிவுள பொருளை
‡அலம்வா அடியேற் கருள்வாயே
§நறுமல ரிறைவி யரிதிரு மருக
||நகமுத வியபார்ப் பதிவாழ்வே
நதிமதி யிதழி பணியணி கடவுள்
நடமிடு புலியூர்க் குமரேசா
கருவிய நிருதர் எறிதிரை பரவு
கடலிடை பொடியாப் பொருதோனே
கழலிணை பணியு மவருடன் முனிவு
கனவிலு மறியாப் பெருமாளே. (௬௨)

தனதனு தத்ததன தனதனு தத்ததன
தனதனு தத்ததன தானதந்ததன தந்ததான

738. இரசபா கொத்தமொழி யமுர்தமா ணிக்கநகை
இணையிலா சத்திவிழி யார்பசும் ¶பொனிறர்
எழிலிரே ரொத்தவிரு ளளகபா ரச்செயல்க
ளெழுதொணு தப்பிறைபி னாரும்புருவர்
எழுதுதோ டிட்டசெவி பவளநீ லக்கொடிக
ளிகலியா டப்படிக மோர $அடும்பொனுரு °திங்கள்மேவும்
இலவுதா விக்கவிதழ் குமிழைநே ரொத்தவெழி
லிலகுநா சிக்கமுகு**மாலசங்கினெளி
இணைசொல்க்ரீ வத்தரள வினவொள்தா லப்பணையி
னியல்கலா புத்தகமொ டேர்சிறந்தவடி
இணையிலா னைக்குவடெ ††னொளிநிலா துத்திபட
ரிகலியா ரத்தொடையு மாருமின்பரச தங்கமார்பின்

* சளம்-வஞ்சனை. †அருவரு - அருவருப்பு ‡அலம்வா - அமைவுண்டாக. §நறுமலரிறைவி - லட்சுமி. || நகம்-மலை. ¶ பொனிறர்-பொன்னின் நிறத்தினை யுடையார். $ அடும் - அடுக்கும். ° திங்கள் - திங்கள் போன்ற முகம். **மாலசங்கு-மாலினுடைய சங்கு ††ஒளிநிலா-ஒளி நிலாவுகின்ற.

வரிகள்தா பித்தமுகை யிசைய'வா விற்றளிரின்
வயிறுநா பிக்கமல மாமெனுஞ்சுழிய
மடுவுரோ மக்கொடியென் அளிகள்சூழ் வுற்றநிரை
மருவுறு லொத்தவிடை யாரகன் பையல்குல்
மணமெலா முற்றநறை கமலபோ தத்துடையென்
வளமையார் புக்கதலி சேருசெய்பொனுடை ரம்பைமாதர்

மயலதா விற்றடியே னவர்கள்பா லுற்றவெகு
மதனபா ணத்தினுடன் மேவிமஞ்சமிசை
வதனம்வேர் வுற்றவிர முலைகள்பூ ரிக்க*மிடர்
மயில்புறா தத்தைகுயில் போலிலங்கமளி
வசனவாய் பொத்தியிடை லுவளமோ கத்துளமிழ்
வசமெலாம் விட்டுமற வேறுசிந்தனையை தந்தெனுள்வாய்

முரசுபே ரித்திமிலை துடிகள்பூ ரித்தவில்கள்
முருடுகா ளப்பறைகள் தாரைகொம்புவளை
முகடுபேர் வற்றவொலி யிடிகள்போ லொத்தமறை
முதுவர்பா டிச்சமுற வேயிறந்தசூரர்
முடிகளோ டெற்றியரி யிரதமா னைப்பிணமொ
டிவுளிவே லைக்குருதி நீர்மிதந்துதிசை எங்குமோட

முடுகிவேல் விட்டுவட குவடு†வாய் விட்டமரர்
முனிவரா டிப்புகழ வேதவிஞ்சையர்கள்
முழவு வீணைக்கின்னரி யமிர்தகீ தத்தொனிகள்
முறையதா கப்பறைய வோதிரம்பையர்கள்
முலைகள்பா ரிக்கவுட னடனமா டிற்றுவர
முடிபதா கைப்பொலிய வேநடங்குலவு கந்தவேளே

அரசுமா ‡கற்பகமொ டகில்பலா §விர்ப்பைமகி
முழுகுவே யத்திமுக கோடரம்பையுடன்
அளவிமே கத்திலொளிர் வனமொடா டக்குயில்க
ளளிகள்தோ கைக்கிளிகள் கோவெனப்பெரிய
அமிர்தவா விக்கழனி வயலில்வா ளைக்கயல்க
||ளடையுமே ரக்கனக நாடெனும்புலியூர் சந்தவேளா

* மிடறு என்பது சந்தநோக்கி மிடர் என்றாயிற்று. † வாய்விட்ட-வாய்விட. ‡ கற்பகம்-தென்னைமரம். § இர்ப்பை-இலுப்பை மரம். || அடையும் ஏர் - அடைகின்ற அழகினாலே.

அழகுமோ கக்குமரி விபுதையே னற்புனவி
யளிகுலா வுற்றகுழல் சேர்கடப்புதொடை
அரசிவே தச்சொரூபி *கமலபா தக்கரவி
அரியவே டச்சிறுமி யாளணைந்தபுகழ்
அருணரூ பப்பதமொ டிவுளிதோ கைச்செயல்கொ
டணைதெய்வா னைத்தனமு மேமகிழ்ந்துபுணர் தம்பிரானே.

---

தனன தானன தனன தானன
தனன தானன தனதான.

739. இருளு மோர்கதி ரணுகொ ணாதபொ
னிடமதேறி யென் இருநோயும்
எரிய வேமல மொழிய வேசுட
ரில்கு மூலக ஒளிமேவி
அருவி பாயவி னமுத மூறவுன்
அருளெ லாமென தளவாக
அருளி யேசிவ மகிழ வேபெற
அருளி யேயிணை அடிதாராய்
பரம தேசிகர் குருவி லாதவர்
பரவை வான்மதி தவழ்வேணிப்
பவள மேனியர் எனது தாதையர்
பரம ராசியர் அருள்பாலா
மருவி நாயெனை யடிமை யாமென
மகிழ்மெய் ஞானமும் அருள்வோனே
மறைகு லாவிய புலியுர் வாழ்குற
மகள்மெ லாசைகொள் பெருமாளே.

---

தனதாத்த தைய தனதாத்த தைய
தனதாத்த தைய தனதான.

740. இருள்காட்டு செவ்வி ததிகாட்டி வில்லி
னுதல்காட்டி வெல்லும் இருபாண
இயல்காட்டு கொல்கு வளைகாட்டி முல்லை
நகைகாட்டு வல்லி இடைமாதர்
மருள்காட்டி நல்கு ரவுகாட்டு மில்ல
இடுகாட்டி னெல்லை நடவாத

---

* கமலபாதக்கரவி - கமலம்போல் பாதத்தையும், கரத்தையுமுடையவள்.

வழிகாட்டி நல்ல றிவுகாட்டி மெல்ல
* வினைவாட்டி அல்லல் செயலாமோ
தெருள்காட்டு தொல்லை மறைகாட்டு மல்லல்
மொழிகாட்டு தில்லை இளையோனே
தினைகாட்டு கொல்லை வழிகாட்ட வல்ல
குறவாட்டி புல்லு மணிமார்பா
அருள்காட்டு வல்லி நெறிகாட்டு செவ்வ
அடல்காட்டு வல்ல சுரர்கோபா
அடிபோற்றி அல்லி முடிசூட்ட வல்ல
அடியார்க்கு நல்ல பெருமாளே. (௪௫)

---

தானன தத்தந் தானன தத்தந் தானன தத்தந் தனதான.

741. காவியு டுத்துந் தாழ்சடை வைத்துங் காடுகள் புக்குந் தடுமாறிக்
காய்கனி துய்த்துங் காயமொறுத்துங் காசினி முற்றுந் திரியாதே
சீவனொ டுக்கம் பூதவொடுக்கம் தேறவு திக்கும் பரஞான
தீபவி ளக்கங் காணவெ னக்குன் சீதள பத்மந் தருவாயே
பாவநி றத்தின் தாருக வர்க்கம் பாழ்பட வுக்ரந் தருவீரா
பாணிகள் கொட்டும் பேய்கள்பி தற்றம் பாடலை மெச்சுங் கதிர்வேலா
† தூவிகள் நிற்குஞ் சாலிவ ளைக்குஞ் சோலைசி றக்கும் புலியூரா
சூர்மிகக்கொண் டாடந டிக்குந் தோகைந டத்தும் பெருமாளே.

---

தானத் தானத் தாந்தன தானன
தானத் தானத் தாந்தன தானன
தானத் தானத் தாந்தன தானன தனதான.

742. கோதிக் கோதிக் கூந்தலி லேமலர்
‡ பாவித் தாகச் சாந்தணி வார்முலை
§ கேடுத் தானைத் தேன்துவர் வாய்மொழி குயில்போலக்
கூவிக் கூவிக் || காண்டிசை போலவெ
நாணிக் கூனிப் பாய்ந்திடு வார்சிலர்
கூடித் தேறிச் சூழ்ந்திடு வார்பொருள் வருமோவென்
றோதித் தோளிற் பூந்துகி லால்முலை
மூடிச் சூதிற் ¶ தூங்கமி லார்தெரு
வோடித் தேடிச் சோம்பிடு வார்சில விலைமாதர்

---

* வினை வாட்டி அல்லல் செயல் ஆமோ-வினையை வாட்டியபின்னரும் அது துன்பஞ் செய்யலாகுமா? † தூவிகள்-அன்னங்கள். ‡ பாவித்து-பரவ முடித்து. § கோடுத்தானை-கோடாகிய சேனையொடு. || காண்டு-ஆடவர்களைக் கண்டு, கண்டு காண்டென நீண்டது. ¶ தூங்கம்-தூக்கம்.

*ஒருச் சேரச் †சேர்ந்திடு வார்கலி
சூளைக் காரச் ‡சாங்கமி லார்சில
வோரைச் சாகத் தீம்பிடு வார்செயல் உறலாமோ

வேதத் தோனைக் காந்தள்கை யால்தலை
மேல்குட் டாடிப் பாந்தள்ச தாமுடி
வீரிட் டாடக் காய்ந்தசு ரார்கள்மெல் விடும்வேலா

வேளைச் சீறித் §தூங்கலொ டே||வய
மாவைத் தோலைச் சேர்ந்தணி வாரிட
மீதுற் றுள்பொற் சாம்பவி மாதுமை தருசேயே

¶நாதத் தோசைக் காண்டுணை யே$சுடர்
மூலத் தோனைத் தூண்டிட வே০யுயிர்
நாடிக் காலிற் சேர்ந்திட வேயருள் சுரமானே

ஞானப் பால்முத் தேன்மொழி வாய்வளி
மாதைக் கானிற் சேர்ந்தணை வாய்சிவ
ஞானப் பூமித் தேன்புலி யூர்மகிழ் பெருமாளே. (சஎ)

---

தனதந்தத் தனனு தனதன
தனதந்தத் தனனு தனதன
தனதந்தத் தனனு தனதன தனதான.

743. **சகசப்பக் குடைசூழ் சிவிகைமெல்
மதவின்பத் துடனே பலபணி
††தனிதம்பட் டுடையோ டிகல்முர சொலிவீணை

‡‡தவளந்தப் புடனே §§கிடுகிடு
நடைதம்பட் டமிடோல் பலவொலி
||||சதளம்பொற் றடிகா ரருமிவை புடைசூழ

*ஒருச்சேர ஒருசேர, ஒருமிக்க. † சேர்ந்திடுவார்கலி-கலியைச் சேர்ந்திடுவார்கள். கலி-தரித்திரம். ‡சாங்கம் ஒழுங்கு. § தூங்கல்- யானை. || வயமா-புலி. ¶ நாதத்து ஓசைக்கு-திருச்சிலம்போசை கேட்பிப்பதற்கு. $சுடர் மூலத்தோனை-மூலாதாரக் கனலை. ০உயிர்நாடிக் காலில்சேர்ந்திட-பிராணவாயு சுழிமுனைநாடி மார்க்கத்திற் சார்வதற்கு. ** சகசம்பக்குடை-ஜகத்தோர் மெச்சும் பொருட்டு எதிரில் விருதாவாகப் பிடிக்கும் குடை. ††தனிதம் மேகசர்ச்சனை. ‡‡தவளம்-தவளச்சங்கு §§ கிடுகிடு-ஓர் பறை. |||| சதளம்-ஜனக்கூட்டம்.

வெகுகும்பத் துடனே பலபடை
காகஞ்சுற் றிடவே வாவிசை
வெகுசம்பத் துடனே யழகுட னிதமேவும்

*விருமஞ்சித் திரமா மிதுநொடி
மறையும்பொய்ப் †பவுஷோ டுழல்வது
விடவும்பர்க் கரிதா மிணையடி தருவாயே

திகுதந்தித் திகுதோ திகுதிகு
தகுதந்தித் தகுதோ தகுதகு
திகுர்தஞ்செச் செகசே செககண எனபேரி

திமிர்தங்கற் குவடோ டெழுகட
லொலிகொண்டற் றருவோ டலறிட
திரள்சண்டத் தவுணோர் பொடிபட விடும்வேலா

‡அகரம்பச் சுருவோ டொளியுறை
படிகம்பொற் செயலா ளரனரி
அயவண்டர்க் கரியாளுமையருள் முருகோனே

அமிர்தம்பொற் குவடோ டிணைமுலை
மதிதுண்டப் புகழ்மான் மகளொடும்
அருள் செம்பொற் புலியூர் மருவிய பெருமாளே. (சஅ)

---

தனனதந்தந் தனன்தந்தந் தனனதந்தந்
தானந்தந் தனதான.

14. சகுடமுந்துங் கடலடைந்துங் குளமகிழ்ந்துந் தோய்சங்கம்
கமுகடைந்தண் டமுதகண்டந் தாளகந்தந் தேர்கஞ்சம்
சரமெனுங்கண் குமிழதுண்டம் புருவெனுஞ்செஞ்
சாபம்பொன் திகழ்மாதர்

சலசகெந்தம் புழுகுடன்சண் பகமணங்கொண் டேய்ந்தண்டந்
தனகனம்பொன் கிரிவணங்கும் பொறிபடுஞ்செம் பேர்வந்தண்
சலனசம்பொன் றிடைபணங்கின் கடிதடங்கொண்
டாரம்பொன் தொடர்பார்வை

---

* விருமம்-பிரமை. †பவுஷு-வாழ்வு, சம்பிரமம். ‡அகரம்பச்சுரு-எழுத்
்க்களுள் அகரம் போன்று உலகம் நிறைந்த பச்சையுரு,

புகலல்கண்டஞ் சரிகரம்பொன் சரணம்பந்தந் தோதிந்தம்
புரமுடன்கிண் கிணிசிலம்பும் பொலியலம்புந் தாள்ரங்கம்
புணர்வணைந்தண் டுவரொடுந்தொண் டிடர்கிடந்துண்
டேர்கொஞ்சுங் கடைநாயேன்

புகழுடைந்துண் கழல்பணிந்தொண் பொடியணிந்தங் காநந்தம்
புனல்படிந்துண் டவசமிஞ்சுந் தவசர்சந்தம் போலுந்திண்
புவனிகண்டின் றடிவணங்குஞ் செயல்கொளஞ்செஞ்
சீர்செம்பொன் கழல்தாராய்

திகுடதிந்திந் தகுடதந்தந் திகுடதிந்திந் தோதிந்தம்
டகுடடண்டண் டிகுடடிண்டிண் டகுடடண்டண் டோடிண்டிண்
டிமுட டிண்டிண் டுமுடடுண்டுண் டிமுடடிண்டென்
றேசங்கம் பலபேரி

செககணஞ்சஞ் சலிகைபஞ்சம் பறைமுழங்கும் போரண்டஞ்
சிலைபிடிந்துங் கடல்வடிந்தும் பொடிபறந்துண்டோர்சங்கஞ்
சிரமுடைந்தண் டவுணரங்கம் பிணமலைந்தன்
றுடுஞ்செங் கதிர்வேலா

அகிலவண்டஞ் சுழலவெங்கும் பவுரிகொண்டங் காடுங்*கொன்
புகழ்விளங்குங் கவுரிபங்கன் குருவெனுஞ்சிங் காரங்கொண்
டறுமுகம்பொன் சதிதுலங்கும் திருபதங்கந்
தாவென்றென் றமரோர்பால்

அலர்பொழிந்தங் கரமுகிழ்ந்தொண் சரணமுங்கொண் டோதந்தம்
புனைகுறம்பெண் சிறுமியங்கம் புணர்செயங்கொண் டேயம்பொன்
அமைவிளங்கும் † புலிசரம்பொன் திருநடங்கொண்
டார் ‡ கந்தம் பெருமாளே. (௪௪௬)

தாந்தன தானதன தாந்தன தானதன
தாந்தன தானதன தனதான.

745. சாந்துட னேபுழுகு தோய்ந்தழ கார்குழலை
மோந்துப யோதரம தணையாகச்

* கொன்-வலிமை. † புலிசரம்-புலீச்சரம், அதாவது புலியூர், ‡ கந்த அம் பெருமாளே எனப்பிரித்துப் பொருள்கொள்க.

சாய்ந்துப்ர தாபமுடன் வாழ்ந்தனு ராகசுக
காந்தமொ டுசிஎன மடவார்பால்
கூர்ந்தக்ரு பாமனது போந்துன தாள்குறுகி
ஓர்ந்துண ராவுணர்வி லடிநாயேன்
கூம்பவிழ் கோகனக பூம்பத கோதிலிணை
பூண்டுற வாடுதின மெளதோதான்
பாந்தளின் மீதினிதி னேங்குக ணேதுயில்கொள்
நீண்டிடு மாலொடயன் அறியாது
* பாப்புரு வானமுநி வாம்புலி யானபதன்
ஏய்ந்தெதிர் காணநட மிடுபாதர்
பூந்துணர் பாதிமதி வேய்ந்தச டாமகுட
மாங்கன காபுரியில் அமர்வாழ்வே
பூங்கமு கார்வுசெறி யூங்கன காபுரிசை
சூழ்ப்புலி யூரினுறை பெருமாளே. (௫௦)

---

தனதனன தனதான தனதனன தனதான
தனதனன தனதான தனதான.

746. சுடரனைய திருமேனி யுடையழகு முதுஞான
சொருப†கிரி யிடமேவு ‡முகமாறும்
சுரர்தெரிய லளிபாட மழலைகதி நறைபாய
துகிரிதழின் மொழிவேத மணம்வீச
அடர்பவள வொளிபாய அரியபரி புரமாட
அயில்கரமொ டெழில்தோகை மயிலேறி
அடியனிரு வினைநீறு படவமர §ரிதுபூரை
அதிசயமெ னருள்பாட வரவேணும்
‖விடைபரவ அயன்மாலொ டமரர்முனி கணமோட
¶மிடறடைய விடம்வாரி யருள்நாதன்
மினலனைய விடைமாது இடமருவு குருநாதன்
மிகமகிழ அநுபூதி அருள்வோனே

---

* பதஞ்சலி வியாக்கிரமர். † கிரியிடம் - கிரீடம் ‡முகம் ஆறும்-முகம் ஆறும் தோன்ற § இது பூரை அதிசயம் என அருள்பாட - இவன் ஏதுமற்றவன்; இவனுக்குக் கடவுள் அருள் செய்வது என்ன ஆச்சரியம் என்று திருவருளைக்கொண்டாட. பூரை-ஒன்றுமில்லாமை. ‖ விடைபாவி - விடைபெற்றுப் பாவி. ¶ மிடறு - கண்டம்.

இடர்கலிகள் பிணியோட எனையுமருள் குறமாதி
னிணையிளநிர் முகைமார்பின் அணைமார்பா

இனியமுது புலிபாத னுடனரவு சதகோடி
இருடியர்கள் புகழ்ஞான பெருமாளே. (௫௧)

---

தத்ததன தானதன தானதன தானதன
தத்ததன தானதன தானதன தானதன
தத்ததன தானதன தானதன தானதன தனதான.

747. தத்தைமயில் போலுமியல் பேசிபல மோகநகை
யிட்டுமுட னணிமுகை மீதுதுகில் மூடியவர்
சற்றவிடம் வீடுமினி வாருமென வோடிமடி பிடிபோல

*தைச்சரச மோடுறவெ யாடியக மேகொடுபொ
யெத்தியணை மீதி†லிது காலமெனிர் போவதென
தட்டுபுழு கோடுபனி நீர்பலச வாதையவர் உடல்பூசி

வைத்துமுக மோடிரச வாயிதழி னூறல்பெரு
கக்குழல ளாவசுழல் வாள்விழிக ளேபதற
வட்டமுகைமார்புதையவேர்வைதரதோளிறுகியுடைசோர

மச்சவிழி பூசலிட ‡வாய்புலியு லாசமுட
னொப்பியிரு வோருமயல் மூழ்கியபின் ஆபரணம்
வைத்தடகு தேடுபொருள் சூறைகொளு வார்கலவி செயலாமோ

சத்திசர சோதிதிரு மாதுவெகு ரூபிசுக
நித்தியகல் யாணியெனை யீனமலை மாதுசிவை
தற்பரனொ டாடுமபி ராமசிவ காமியுமை அருள்பாலா

சக்ரகிரி மூரிமக மேருகடல் தூளிபட
ரத்நமயி லேறிவினை யாடியசு ராரைவிழ
சத்தியினையேவியமரோர்கள்சிறைமீளநடம் இடுவோனே

§துத்திநன பாரவெகு மோகசுக வாரிமிகு
சித்ரமுக ரூபியென தாயிவளி நாயகியை
சுத்தவனை யூடுவட மாமுகைவி டாதகர மணிமார்பா

‖சுத்தவம காதவசி காமணியெ னேதுவமர்
சித்தமதி லேகுடிய தாவுறையும் ஆறுமுக
சுப்ரமணி யாபுலியுர் மேவியுறைதேவர்புகழ் பெருமாளே

---

*தை-தைக்கும்படியான. † இதுகாலம் என் நீர் போவது என. ‡வாய்புலி-வாய்ந்து புல்லி. §துத்தி - தேமல். ‖ சுத்த அம் மகாதவ எனப் பிரிக்க.

தத்த தத்தன தான தானன தத்த தத்தன தான தானன
தத்த தத்தன தான தானன தனதான.

748. * துத்தி பொற்றன மேரு வாமென வொத்†திபத்திரள்வாகுவாயவிர்
‡துப்பு முத்தொடு மார்பி னூடிட மயில்போலே
§சுக்கை மைக்குழ லாட நூலிடை பட்டுவிட்டவிர் காமனூரல்குல்
சுற்று வித்துறு வாழை சேர்தொடை விலைமாதர்
தத்தை புட்குர லோசை நூபுர மொத்த நட்டமொ டாடி மார்முகை
சற்ற சைத்துகு லாவும் வேசியர் அவரோடே
தர்க்க மிட்டுற வாடியீளை ||நொய் கக்கல்விக்கல்கொ ளூளைநாயென
சிச்சி சிச்சி¶யெ னல்வர் கூறிட உழல்வேனோ
தித்தி மித்திமி தீத தோதக தத்த னத்தன தான திதிமி
திக்கு முக்கிட மூரி பேரிகை தவில்போடச்
சித்ர வித்தைய ராட வானவர் $பொற்பு விட்டிடுசேசெசேயென
செக்கு விட்டசு ரோர்கள் தூள்பட விடும்வேலா
செத்தி டச்சம னூர்**க டாபட அற்று தைத்தசு வாமி யாரிட
சித்தி ரச்சிவ காமி யாரருள் முருகோனே
தெற்க ரக்கர்கள் தீவு நீறிட ††விட்ட ‡‡அச்சுத ரீனு மானொடு
சித்தி ரப்புலி யூரில் மேவிய பெருமாளே. (ருஙு)

---

தானதன தத்த தந்தன தானதன தத்த தந்தன
தானதன தத்த தந்தன தந்ததான.

749. நாலுசது ரத்த பஞ்சறை மூலகம லத்தி§§லங்கியை
நாடியின டத்தி மந்திர பந்தியாலே
நாரணபு ரத்தி லிந்துவி னூடுறவி ணக்கி நன்கடர்
நாரிசைந டத்தி மண்டல சந்தியாறில்
கோலமுமு திப்ப கண்டுள நாலிணைம றித்தி தம்பெறு
கோவெனமு ழக்கு சங்கொலி விந்துநாதம்
கூடியமு கப்பி லிந்திர வானவமு தத்தை யுண்டொரு
கோடிநட னப்ப தஞ்சபை என்றுசேர்வேன்

---

*துத்தி - தேமல். †இபத்திரள்வாகு - யானையினது திரண்ட புயத்தின் அழகு. ‡துப்பு-பவளம். § சுக்கைமைக்குழல். நீண்டமைக்குழல். || நொய்-நோய். ¶ என் நால்வர் கூறிட எனப்பிரிக்க. $பொற்புவிட்டிடு - பொற்பு இட்டு இட்டு ** கடா - எருமை. †† விட்ட - செய்த. ‡‡அச்சுத ரீனு மான்-விஷ்ணு புத்திரிகளான வள்ளிதெய்வானை. §§அங்கி-சடாராக்கினி.

*ஆலமல ருற்ற சம்பவி†வேரிலிகு லக்கொ ழுந்திலி
ஆரணர்த லைக்க லங்கொளி செம்பொன்வாசி
ஆணவ மயக்க முங்‡கலி காமியம கற்றி யென்றனை
ஆளுமைப ரத்தி சுந்தரி தந்தசேயே
வேலதையெ டுத்து மிந்திரர் மால்§விதிபி ழைக்க வஞ்சகர்
வீடெரிகொளுத்தி யெண்கடல் உண்டவேலா
வேதசது ரத்தர் தென்புலி யூருறையொ ருத்தி பங்கினர்
வீறுநட னர்க்கி சைந்தருள் தம்பிரானே. (ருச)

---

தானத்தன தானத்தன தானத்தன தானத்தன
தானத்தன தானத்தன தனதான.

750. நீலக்குழ லார்முத்தணி வாய்சர்க்கரை யார்தைப்பிறை
நீளச்‖சசி யார்பொட்டணி நுதல்மாதர்
நீலக்கய லார்பத்திர வேலொப்பிடு வார்நற்¶கணி
நேமித்தெழு தாசித்திர வடிவோர்தோள்
ஆலக்கழை $யார்துத்திகொ ளாரக்குவ டார்கட்டளை
யாகத்தமி யேனித்தமும் உழல்வேனோ
ஆசைப்பத மேல்புத்திமெய் ஞானத்துட னேபத்திர
மாகக்கொள வேமுத்தியை அருள்வாயே
மாலைக்குழ லாளற்புத வேதச்சொரு பாளக்கினி
மார்பிற்பிர காசக்கிரி தனபார
வாசக்குயி லாள்நற்சிவ காமச்செய லாள்பத்தினி
மாணிக்கமி னுள்நிட்கள உமைபாகர்
சூலக்கையி னாக்கினி யேனிப்பா னுருக்கொரு
சோதிப்பொருள் கேள்விக்கிடு முருகோனே
சோதிப்பிர காசச்செய லாள் **முத்தமிழ் மானைப்புணர்
சோதிப்புலி யூர்நத்திய பெருமாளே. (ருரு)

---

* ஆலம் மலருற்ற - கைவிரல்களினின்றும் கங்கை முதலிய நதிகளை விரித்த - ஆலம் - நீர் † வேரிலி குலக்கொழுந்திலி - ஆதியந்தமில்லாதவள். ‡ கலி - கல்வி, தோண்டி, வேறுத்து. § விதி-பிரமன். ‖ சசியார் - சந்திர வதனியார். ¶ கணி - குறித்துஎழுதவோன். $ துத்தி - தேமல். **முத்தமிழ்மான்-இயல், இசை, நாடகமெனும் தமிழ்நாட்டிற்பிறந்த வள்ளி.

தனனா தத்தன தனனா தத்தன
தனனா தத்தன தனதானா.

751. பனிபோ லத்துளி*சலவா யுட்கரு
பதின்மா தத்திடை தலைகீழாய்ப்
படிமே லிட்டுடல் தவழ்வார் தத்தடி
பயில்வா ருத்தியில் சிலநாள்போய்த்
தனமா தர்க்குழி விழிவார் தத்துவர்
சதிகா ரச்சமன் வருநாளில்
தரியா †ரிற்சடம் விடுவா ரிப்படி
தளர்மா யத்துயர் ஒளியாதோ
வினைமா யக்கிரி பொடியா கக்கடல்
‡விகடா ருக்கிட விடும்வேலா
விதியோ னைச்சது முடிநால் பொட்டெழ
மிகவே குட்டிய குருநாதா
நினைவோர் சித்தமொ டகலா மற்புகு
நிழலாள் பத்தினி மணவாளா
நிதியா மிப்புவி புலியூ ருக்கொரு
நிறைவே பக்தர்கள் பெருமாளே. (௫௬)

---

தனதன தனதன தான தாத்தன
தனதன தனதன தான தாத்தன
தனதன தனதன தான தாத்தன தனதான.

752. மகரமொ டுறுகுழை யோலை காட்டியும்
மழைதவழ் வனைகுழல் மாலை காட்டியும்
வரவர வரவித மூற லூட்டியும் வலைவீசும்
மகரவி ழிமகளிர் பாடல் வார்த்தையில்
வழிவழி யொழுகுமு பாய வாழ்க்கையில்
வளமையி லிளமையில்§மாடை வேட்கையில் மறுகாதே

---

* சலவாயுட்கரு - சலத்துவார வழியாய் உள்ளே கருத்தரித்து. † இல்சடம் - தனக்கு வீடாகிய சரீரம். ‡ விகடாருக்கிட - மாறுபட்ட சூரர் மடிந்திட § மாடை - பொன் முதலிய சம்பத்து.

இகலிய பிரமக பால பாத்திர
மெழில்பட இடுதிரு நீறு சேர்த்ததும்
இதழியை யழகிய வேணி யார்த்ததும் விருதாக

எழில்பட மழுவுடன் மானு மேற்றதும்
இசைபட இசைதரு ஆதி தோற்றமும்
இவையிவை யெனவுப தேச மேற்றவ தொருநாளே

ஜகதல மதிலருள் ஞான வாட்கொடு
தலைபறி யமணர்ச மூக மாற்றிய
தவமுனி சகமுளர் பாடு பாட்டென முறைபாடி

தரிகிட தரிகிட தாகு டாத்திரி
கிடதரி கிடதரி தாவெ ஞச்சில
சபதமொ டெழுவன தாள வாச்சிய முடனேநீள்

அகுகுகு குகுவென ஆளி வாய்ப்பல
அலகைக ளடைவுட னுடு மாட்டமும்
அரனவ னுடனெழு காளி கூட்டமும் அகலாதே

*அறிதுயில் சயனவி யாள மூர்த்தனும்
அணிதிகழ் மிகுபுலி யூர்வி யாக்ரனும்
அரிதென முறைமுறை யாடல் காட்டிய பெருமாளே.

---

தத்த தத்த தாத்த தத்த தத்த தாத்த
தத்த தத்த தாத்த தனதான.

753. †மச்ச மெச்சு சூத்ரம் ரத்த பித்த மூத்ரம்
வைச்சி றைச்ச பாத்ரம் அநுபோகம்

மட்க விட்ட சேக்கை உட்பு ழுத்த வாழ்க்கை
மட்கு லப்ப தார்த்தம் இடிபாறை

எய்ச்சி ளைச்ச பேய்க்கு மெய்ச்சி ளைச்ச நாய்க்கு
மெய்ச்சி ளைச்ச ஈய்க்கு மிரையாகும்

இக்க டத்தை நீக்கி ‡அக்க டத்து ளாக்கி
இப்ப டிக்கு மோக்ஷம் அருள்வாயே

---

* அறிதுயில் சயனவியாள மூர்த்தன் - பதஞ்சலி - பகவான். † மச்சம்- மஞ்சம், அலங்கரித்த கட்டில். ‡ அக்கடம் - சுத்ததேகம், சூக்குமதேகம்.

பொய்ச்*சி னத்தை மாற்றி மெய்ச்சின த்தை யேற்றி
பொற்ப தத்து ளாக்கு புலியூரா
†பொக்க ணத்து ‡நீற்றை யிட்டொ ருத்த னூர்க்கு
புத்தி மெத்த காட்டு §புனவேடன்
பச்சி லைக்கும் வாய்க்கு ளெச்சிலுக்கும் வீக்கு
பைச்சி லைக்கு மாட்கொள் அரன்வாழ்வே
பத்தி சித்தி காட்டி அத்தர் சித்த மீட்ட
பத்த ருக்கு வாய்த்த பெருமாளே. (௫௮)

---

தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன தந்ததான.

754. மதிய மண்குண மஞ்சு நால்முக நகர மூன்கலை கங்கை நால்குண
மகரமூன்சிக ரங்கி மூணிடை தங்குகோண
மதன முன்தரி சண்டமாருத மிருகு ணம்பெறி லஞ்செ லோர்தெரு
வகர மிஞ்சிய கன்படா கமொ ரொன்றுசேரும்
கதிர டங்கிய அண்ட கோளகை யகர நின்றிடும் ரண்டு கால்மிசை
ககன மின்சுழி ரண்டு கால்பரி கந்துபாயும்
கருணை யிந்திர யங்கள் சோதிய அருண சந்திர மண்ட லீகரர்
கதிகொள் யந்திர விந்து நாதமொ டென்றுசேர்வேன்
அதிர பம்பைகள் டங்கு டாடிக மூதிர அண்டமொ டைந்து பேரிகை
டகுட டண்டட தொந்த தோதக என்றுதாளம்
அதிக விஞ்சையர் தும்புரு நாரதரொ டிதவி தம்பெறு சிந்துபாடட
அமரர் துந்துமி சங்கு தாரைகள் பொங்கவூடு
உதிர மண்டல மெங்கு மாயொளி யெழகு மண்டியெ ழுந்து சூரனை
யுயர்ந ரம்பொடெ லும்பு மாமுடி சிந்திவீழ
உறுசி னங்கொடெ திர்ந்து சேவக மழைபு குந்துய ரண்டம் வாழ்வுற
வுரக னும்புலி கண்ட வூர்மகிழ் தம்பிரானே. (௫௧)

---

* சினம்-சின்னம், அடையாளம். †பொக்கணம்-ஒருவகை விபூதிப்பை.
‡ நீற்றையிட்ட ஒருத்தனூர் - சிவகோசரியார் § புனவேடன்-கண்ணப்பர்.

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தத்தத் தத்தன தத்தத் தத்தன
தத்தத் தத்தன தத்தத் தத்தன தனதான.

755. மருவு கடல்முகி லனைய குழல்மதி
வதன நுதல்சிலை பிறைய தெனும்விழி
மச்சப் பொற்கணை மூக்குப் பொற்குமி
ழொப்பக் கத்தரி யொத்திட் டச்செவி
குமுத மலரித ழமுத மொழிநிரை
தரள மெனுநகை மிடறு கமுகென
வைத்துப் பொற்புய பச்சைத் தட்டையொ
டொப்பிட் டுக்கம லக்கைப் பொற்*றுகிர்
வகைய விரலொடு கிளிகள் முகநக
மெனவு மிகலிய குவடு மிணையென
வட்டத் துத்திமு கிழ்ப்பச் †சக்கரம்
வைத்துப் பொற்குட மொத்திட் டுத்திகழ் முலைமேவும்

வடமு நிரைநிரை தரள பவளமொ
டசைய ‡பழுமர இலைவ யிறுமயி
§ரற்பத் திக்கிணை பொற்புத் தொப்புளும்
‖அப்புக் குட்சுழி யொத்துப் பொற்கொடி
மதன னுருதுடி யிடையு மினலென
அரிய கடிதட மமிர்த ¶கழைரச
மட்டுப் பொற்கம லத்திற் சக்கிரி
துத்திப் பைக்கொரு மித்துப் பட்டுடை
மருவு துடையிணை கதலி பாடுகொள்
கணையு முழவென $கமட மெழுதிய
வட்டப் புத்தக மொத்துப் பொற்சர
ணத்திற் பிற்புற மெத்துத் தத்தைகள் மயில்போலே

தெருவில் முலைவிலை யுரைசெய் தவரவர்
மயில்கொ ○டணைவர மருள்செய் தொழில்கொடு
தெட்டிப் பற்பல **சொக்கிட் டுப்பொருள்
பற்றிக் கட்டில ணைக்கொப் பிப்புணர்

* துகிர்-பவளம். † சக்கரம்-சக்கரவாகப்புள். ‡ பழுமரம்-ஆலமரம். § அற்பம்-சிற்றெறும்பு. ‖ அப்பு-தண்ணீர். ¶ கழை-கரும்பு. $ கமடம்-ஆமை. ○ அணைவர-அணையவர. ** சொக்கிட்டு-அறிவு மயங்கும்படி மயக்கிட்டு.

திலத மழிபட விழிகள் சுழலிட
மலர்க ளணைகுழ லிடைகொள் துகில்பட
* தித்தித் துப்பிதழ் வைத்துக் கைக்கொடு
கட்டிக் குத்துமு கைக்குட் கைப்பட
திரையி லமுதென † கழையில் ரசமென
பலவில் சுளையென வுருக வுயர் மயல்
சிக்குப் பட்டுடல் கெட்டுச் சித்தமும்
வெட்கித் துக்கமு முற்றுக் கொக்கென நரைமேவிச்

செவியொ டொளிர்விழி மறைய மலசல
மொழுக பலவுரை குளற தடிகொடு
தெத்திப் பித்தமு முற்றித் தற்செய
லற்றுச் சிச்சியெ னத்துக் கப்பட
சிலர்கள் முதுவுட ‡ னினவு பொழுதினி
§ லுவரி நிறமுடை நமனு முயிர்கொள
செப்பற் றுப்பிண மொப்பித் துப்பெய
ரிட்டுப் பொற்பறை கொட்டச் செப்பிடு
சென்ன மிதுவென அழுது முகமிசை
அறைய அணைபவ ரொடென சுடலையில்
|| சிற்றிக் குக்கிரை யிட்டிட் டிப்படி
நித்தத் துக்கமெ டுத்திட் டுச்சட முழல்வேனோ

குருவி னுருவென அருள்செய் துறையினில்
குதிரை கொளவரு நிறைத வசிதலை
கொற்றப் பொற்பதம் வைத்திட் டற்புத
மெற்றிப் பொற்பொரு ளிட்டுக் கைக்கொளு
முதல்வ ரிளகலை மதிய மடைசடை
அருண வுழைமழு மருவு திருபுயர்
கொட்டத் துப்புரர் கெட்டுப் பொட்டெழ
விட்டத் திக்கணை நக்கர்க் கற்புத
குமர னெனவிரு தொலியு மரசொடு
வளையு மெழுகட லதிர முழவொடு
கொட்டத் துட்டரை வெட்டித் தட்கட
லொப்பத் திக்கும டுத்துத் தத்திட அமர்மேவிக்

---

* தித்தி - ருசி. † கழை - கரும்பு. ‡ இனவு-சூழ்கிற. § உவரி - கறுங்கடல். || சிற்றிக்குக்கிரையிட்டு-ஆரவாரிக்கிற நெருப்புக்குச் சாம்பராயிட்டு.

குருகு கொடிசிலை குடைகள் மிடைபட
மலைகள் பொடிபட *வுடுக ளுதிரிட
கொத்துச் சக்கிரி பற்றப் பொற்பரி
எட்டத் திக்குமெ டுத்திட் டுக்குரல்
குமர குருபர குமர குருபர
குமர குருபர என†வொ தமரர்கள்
கொட்டப் புட்பமி றைத்துப் பொற்சர
ணத்திற் கைச்சிரம் வைத்துக் ‡குப்பிட
குலவு நரிசிறை கழுகு கொடிபல
கருட னடமிட குருதி பருகிட
கொற்றம் பத்திர மிட்டுப் பொற்கக
னத்தைச் சித்தமி ரட்சித் துக்கொளு மயில்வீரா

சிரமொ டிரணிய னுடல்கி ழியவொரு
பொழுதி §னுகிர்கொடு ‖அரிய னடமிடு
சிற்பர்த் திட்பதம் வைத்துச்¶சக்கர
வர்த்திக் குச்சிறை யிட்டுச் சுக்கிரன்
அரிய விழிகெட இருப தமுமுல
கடைய நெடியவர் திருவு மழகியர்
தெற்குத் திக்கில ரக்கர்க் குச்சின
முற்றுப் பொற்$தசர் தற்குப் புத்திர
செயமு மனவலி சிலைகை கொடுகா
மிருப துடைகிரி சிரமொர் பதும்விழ
திக்கெட் டைக்கக னத்தர்க் குக்கொடு
பச்சைப் பொற்புய லுக்குச் சித்திர மருகோனே

திலத மதிமுக அழகி மரகத
வடிவி பரிபுர நடனி மலர்பத
சித்தர்க் குக்குறி வைத்திட் டத்தன
முத்தப் பொற்கிரி யொத்தச் சித்திர
சிவைகொள் திருசர சுவதி வெகுவித
சொருபி முதுவிய கிழவி யியல்கொடு
செட்டிக் குச்சுக முற்றத் தத்துவ
சித்திற் சிற்பதம் வைத்தக் கற்புறு

---

* உடுகள் - விண்மீன். † ஒது - ஓது. ‡ குப்பிட - கும்பிட § உகிர் - நகம். ‖ அரியன் - நரசிங்கன். ¶ சக்கரவர்த்தி - மாவலி. $ தசர்தன் - தசரதன்.

திரையி லமுதென மொழிசெய் கவுரியி
னரிய மகனென புகழ்பு லிநகரில்
செப்புப் பொற்றன முற்றப் பொற்குற
தத்தைக் குப்புள கித்திட் டொப்பிய பெருமாளே. (௯௰)

---

தத்த தானன தத்தன தானன
தத்த தானன தத்தன தானன
தத்த தானன தத்தன தானன தனதான.

756. முத்த மோகன தத்தையி ஞர்குர
லொத்த வாயித சர்க்கரை யார்நகை
முத்து வாரணி பொற்குவ டார்முலை விலைமாதர்

*மொக்கை போக†செ குத்திடு வார்பொருள்
பற்றி வேறும ழைத்திடு வார்சிலர்
‡முச்ச லீலகை சொக்கிடு வாரிடர் கலிசூழச்

§சித்தி லாடவ ழைத்திடு வார்கவ
டுற்ற மாதர்வ லைப்புகு நாயெனை
சித்தி ஞானம்வெ ளிப்பட வே||சுடர் மடமீதே

சித்தெ லா¶மொரு மித்துன தாறினம்
வைத்து நாயென ருட்பெற வேபொருள்
செப்பி யாறுமு கப்பரி வோடுணர் வருள்வாயே

தத்த ஞனத னத்தன தாவென
டுக்கை பேரிமு ழக்கிட வேகடல்
சத்த தீவுத யித்தியர் மாளிட விடும்வேலா

சத்தி லோகப ரப்பர மேசுர
நிர்த்த மாடுக ழற்கரு ணாகர
தற்ப ராபர நித்தனர் பாலுறை உமைபாலா

---

* மொக்கை - வெட்கம். † செகுத்தல் - அழித்தல். ‡முச்சலீலகை சொக்கு-வாய்நீர், சிறுநீர், நாதநீர் ஆகிய மூன்றுநீரின் சம்பந்தமான சொக்கு மருந்து. சலீலம் - சலிலம், நீர். § சித்து - மாயவித்தை. || சுடர்மடம் - நந்தி ஒளிகாணும் லலாடஸ்தானம். ¶ ஒருமித்த உனதாறு எனப்பிரிக்க, உனதுஆறு-உன்னுடைய சடாசக்ஷரத்தை. இனம்வைத்து - இனமாகவைத்து.

துத்தி மார்முலை முத்தணி மோகன
பொற்ப்ர காசமு ளக்குற மான்மகள்
துப்பு வாயிதழ் வைத்தணை சோதிபொன் மணிமார்பா
*சுட்டி நீலவி ரத்தின மாமயி
லுற்று மேவிய ருட்புலி யூர்வளர்
சுத்த னேசசி பெற்றபெ ணாகிய பெருமாளே. (௧௧)

## திருவானைக்கா.

இது திரிச்சிராப்பள்ளி ஸ்டேஷனிலிருந்து வடக்கே 3 மைல் துலைவில் இருக்கிறது.

தனதனதன தானத் தானன
தனதனதன தானத் தானன
தனதனதன தானத் தானன தனதான.

757. கருமுகில்திர ளாகக் கூடிய
இருளெனமரு ளேறித் தேறிய
கடிகமழ்†அள காயக் காரிகள் புவிமீதே
கனவியவிலை யோலைக் காதிகள்
முழுமதிவத னேரப் பாவைகள்
களவியமுழு மோசக் காரிகள் மயலாலே
பரநெறியுண ராவக் காமுகர்
உயிர்பலிகொளு மோகக் காரிகள்
‡பகழியைவிழி யாகத் தேடிகள் முகமாயப்
பகடிகள்பொரு ளாசைப் பாடிக
ளுருவியதன பாரக் கோடுகள்
படவுளமழி வேனுக் கோரருள் புரிவாயே
மரகதவித நேர்முத் தார்நகை
குறமகளதி பாரப் பூண்முலை
மருவியமண வாளக் கோலமும் உடையோனே
வளைதருபெரு ஞாலத் தாழ்கடல்
முறையிடநடு வாகப் போயிரு
வரைதுளைபட வேல்விட் டேவிய அதிதீரா

* சுட்டி - தலையணி. † அளகாயம் - கூந்தல். ‡ பகழி - அம்பு.

அரவணை தனி லேறிச் சீருடன்
விழிதுயில்திரு மால்சக் ராயுதன்
அடியிணைமுடி தேடிக் காணவும் அரிதாய
அலைபுனல்சடை யார்மெச் சாண்மையும்
உடையதொர்மயில் வாசிச் சேவக
அழகியதிரு வானைக் காவுறை பெருமாளே. (௧)

---

தானத் தானன தத்தன தத்தன
தானத் தானன தத்தன தத்தன
தானத் தானன தத்தன தத்தன தனதான.

758. வேலைப் போல்விழி யிட்டும ருட்டிகள்
காமக் ரோதம்வி ளைத்திடு துட்டிகள்
வீதிக் கேதிரி பப்பர மட்டைகள் முலையானை
மேலிட் டேபொர விட்ட*பொ றிச்சிகள்
மார்பைத் தோளைய சைத்துந டப்பிகள்
வேளுக் காண்மைசெ லுத்துச மர்த்திகள் களிகூரும்
சோலைக் கோகில மொத்தமொ ழிச்சிகள்
காசற் றோரையி தத்திலொ ழிச்சிகள்
தோளைப் பூசிமி னுக்கியு ருக்கிகள் எவரேனும்
†தோயப் பாயலை ழைக்கும வத்திகள்
மோகப் போகமு யக்கிம யக்கிகள்
சூறைக் காரிகள் துக்கவ லைப்படல் ஒழிவேனோ
காலைக் கேமுழு கிக்குண திக்கினில்
ஆதித் யாயவெ னப்பகர் தர்ப்பண
காயத் ரீசெப மர்ச்சனை யைச்செயு முனிவோர்கள்
கானத் தாசிர மத்தினி லுத்தம
வேள்விச் சாலைய ளித்தல்பொ ருட்டெதிர்
‡காதத்தாடகை யைக்கொல்க்ருபைக்கடல் மருகோனே
ஆலைச் சாறுகொ தித்துவ யற்றலை
பாயச் சாலித ழைத்திர தித்தமு
தாகத் தேவர்கள் மெச்சிய செய்ப்பதி உறைவேலா
ஆழித் தேர்மறு கிற்பயில் மெய்த்§திரு
நீறிட் டான்மதில் சுற்றிய பொற்றிரு
ஆனைக் காவினி லப்பர்ப்ரி யப்படு பெருமாளே. (௨)

---

* பொறிச்சிகள்-அடையாளமுள்ளவர்கள். † தோய-கூட. ‡ காதம்-காதகம். § திருநீறிட்டான் மதில்-ஆலயத்தைச் சுற்றிய திருமதிலின் பெயர்.

தானத் தான தான தனதன தானத் தான தான தனதன
தானத் தான தான தனதன தனதான.

759. காவிப் பூவை யேவை யிகல்வன நீலத் தான கால நிகர்வன
காதிப் போக மோக மருள்வன இருதோடார்
காதிற் காதி மோதி யுழல்கண மாயத் தார்கள் தேக*பரிசன
காமக் ரோத லோப மதமிவை சிதையாத
பாவிக் காயு வாயு வலம்வர †லாலிப் பார்கள் போத கருமவு
பாயத் தான ஞான நெறிதனை இனிமேலன்
பா‡லெக் காக யோக ஜபதப §நேசித் தார வார பரிபுர
பாதத் தாளு மாறு திருவுள நினையாதோ
கூவிக் கோழி வாழி யெனமயி லாலித் தால கால மெனஉயர்
கூளிச் சேனை வான மிசைதனில் விளையாடக்
கோரத் தீர சூர னுடலிரு கூறுற் றோட ஏனை யசுரர்கள்
கூடிக் ||கால மாக அமர்செய்த வடிவேலா
¶ஆவிச் சேல்கள் பூக மடலிள பாளைத் தாறு கூறு படஉய
ராலைச் சோலை மேலை வயலியில் உறைவோனே
ஆதைத் தோகை மார்க ளிசையுட னாடிப் பாடி நாடி வருதிரு
ஆனைக் காவில் மேவி யருளிய பெருமாளே. (௩)

---

தந்தன தானன தத்ததத்தன
தந்தன தானன தத்ததத்தன
தந்தன தானன தத்ததத்தன தனதான.

760. அஞ்சன வேல்விழி யிட்டழைக்கவு
மிங்கித மாகந கைத்தருக்கவு
$மம்புயல் நேர்குழ லைக்குலைக்கவும் நகரேகை
அங்கையின் மூலம்வெ ளிப்படுத்தவு
மந்தர மாமுலை சற்றசைக்கவு
०மம்பரம் வீணில விழ்த்துடுக்கவும் இளைஞோர்கள்

---

* பரிசனம்-கூட்டுறவு. † லாலித்தல்-அன்புவைத்தல். ‡லெக்காக-இலக்கு ஆக்க. § நேசித்து-நேசிப்பித்து || காலமாக-இறக்க. ¶ ஆவி-வாவி. $ அம்புயல்-அழகான மேகம். ० அம்பரம்-உடுத்திய ஆடை.

நெஞ்சினி லாசைநெ ருப்பெழுப்பவும்
வம்புரை கூறிவ ளைத்திணக்கவும்
மன்றிடை யாடிம ருட்கொடுக்கவும் எவரேனும்
நிந்தைசெ யாதுபொ ருட்கொடுக்கவு
மிங்குவ லார்கள்கை யிற்பிணிப்பற
நின்பத சேவைய நுக்ரகிப்பதும் ஒருநாளே
குஞ்சர மாமுக விக்நப்ரபு
அங்குச பாசக ரப்ரசித்தனொர்
கொம்பன்*ம கோதரன் முக்கண்விக்ரம கணராஜன்
கும்பிடு வார்வினை பற்றறுப்பவன்
எங்கள்வி நாயக னக்கர்பெற்றருள்
குன்றைய ரூபக கற்பகப்பிளை இளையோனே
அஞ்சலி லாதச டக்ஷரப்†பிர
பந்தச டானன துஷ்டநிக்ரக
சுந்தர ஞானவை யிற்றமிழ்த்ரய பரிபாலா
துங்க‡க ஜாரணி யத்திலுத்தம
சம்புத டாகம டுத்த தக்ஷிண
சுந்தர மாறன்ம திட்புறத்துறை பெருமாளே. (௪)

---

தந்தன தானத் தானன தந்தன தானத் தானன
தந்தன தானத் தானன தனதான.

761. §அம்புலி நீரைச் சூடிய செஞ்சடை மீதிற் றூவிய
ஐந்தலை நாகப் பூஷணர் அருள்பாலா
அன்புட னுவிற் பாவது சந்தத மோதிப் பாதமு
மங்கையி னுனிற் பூசையும் அணியாமல்
வம்பணி பாரப் பூண்முலை வஞ்சியர் மாயச் சாயலில்
வண்டுழ ||லோதித் தாழலில் இருகாதில்
மண்டிய நீலப் பார்வையில் வெண்டுகி லாடச் சேர்வையில்
மங்கிய வேழைப் ¶பாவியென் அழிவேனோ

---

* மகோதரன் - பெரிய வயிற்றையுடையவர். † பிரபந்தம் - பந்திக்கப்படும் ஷட்கோணயந்திரம். ‡ கஜாரணியம் - திருஆனைக்கா. § அம்புலி - சந்திரன். || ஓதி - கூந்தல். ¶ பாபி யென் அழிவேனோ - பாவியென்று அழிவேனோ.

கொம்பனை நீலக் கோமனை அம்புய மாலைப் பூஷணி
குண்டலி யாலப் போசனி அபிராமி
கொஞ்சிய வானச் சானவி சங்கரி வேதப் பார்வதி
குன்றது வார்பொற் காரிகை அருள்பாலா
செம்பவ ளாயக் கூறிதழ் மின்குற மானைப் பூண்முகை
திண்புய மாரப் பூரணம் அருள்வோனே
செந்தமிழ் பாணப் பாவலர் சங்கித யாழைப் பாடிய
தென்திரு வானைக் காஉறை பெருமாளே. (௫)

---

தனத்த தான தானான தனத்த தான தானான
தனத்த தான தானான தனதான.

762. அனித்த மான வூனாளு மிருப்ப தாக வேநாசி
அடைத்து வாயு வோடாத வகைசாதித்
தவத்தி லேகு வால்மூலி புசித்து வாடு மாயாச
அசட்டு யோகி யாகாமல் மலமாயை
செனித்த காரியோபாதி ஒழித்து ஞான ஆசார
சிரத்தை யாகி யான்வேறென் உடல்வேறு
செகத்தி யாவும் வேறாக நிகழ்ச்சி யாம ஞேதீத
சிவச்சொ ரூப மாயோகி என ஆள்வாய்
தொனித்த நாத வேயூது சகத்ர நாம கோபால
சுதற்கு நேச மாமூத மருகோனே
சுவர்க்க லோக மீகாம சமஸ்த லோக பூபால
தொடுத்த நீப வேல்வீர வயலூரா
மனித்த ராதி சோணாடு தழைக்க மேவு காவேரி
மகப்ர வாக *பானீயம் அலைமோதும்
மணத்த சோலை சூழ் †காவை அனைத்து லோக மாள்வாரு
மதித்த சாமி யேதேவர் பெருமாளே. (௬)

---

* பானீயம் - நீர். † காவை என்பது திருவானைக்கா.

தானதன தானத் தானதன தானத்
தானதன தானத் தனதான.

763. ஆரமணி வாரைப் பீறியற மேலிட்
டாடவர்கள் வாடத் துறவோரை
ஆசைமட லூர்வித் தாளுமதி பாரப்
பாளித*ப டீரத் தனமானார்
காரளக நீழற் சாதளவு மோடிக்
காதுமபி ராமக் கயல்போலக்
காலனுடல் போடத் தேடிவரு நாளிற்
காலைமற வாமற் புகழ்வேனோ
பாரடைய வாழ்வித் தார†அகி பாசச்
‡சாமளக லாபப் பரியேறிப்
பாய்மதக போலத் தானுடிக லாமுற்
§பாடிவரு மேழைச் சிறியோனே
சூர்புர சூறைக் காரசுரர் காவற்
காரவிள ஏனற் புனமேவும்
தோகைதிரு வேளைக் காரதமிழ் வேதச்
சோதிவளர் காவைப் பெருமாளே. (எ)

---

தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன தன்தான.

764. ஆலம் வைத்தவி ழிச்சிகள் சித்தச
ஞகம க்கலை கற்றச மர்த்திக
ளார்ம னத்தையு மெத்திவ ளைப்பவர் தெருவூடே
ஆர வட்டமு கைக்குவி லைப்பண
மாயி ரக்கல மொட்டிய ளப்பினு
மாசை யைப்பொரு ளொக்கந டிப்பவ ருடன்மாலாய்
மேலி ளைப்புமு சிப்பும வத்தையு
மாயெடுத்தகு லைப்பொடு பித்தமு
மேல்கொ ளத்தலை யிட்டவி திப்படி அதனாலே

---

* படீரம்-உயரம். † அகி-பாம்பு. ‡ சாமளகலாபப்பரி-மயில்வாகனம்.
§பாடிவால் - வளைந்தோடி வருதல்; பாடியோட்டம்-ஓர் விளையாட்டு.

மேதி னிக்கு*ள பத்தனெ னப்பல
பாடுபட்டுபு ழுக்கொள்ம லக்குகை
வீடு கட்டியி ருக்குமெ னக்குநின் அருள்தாராய்

பீலி மிக்கம யிற்றுர கத்தினி
லேறி முட்டவ ளைத்துவ குத்துடல்
பீற லுற்றவு யுத்தக ளத்திடை முடியாத

போ ரக்கரெ திர்த்தவ ரத்தனை
பேரை யுக்ரக ளப்பலி யிட்டுயர்
பேய்கை கொட்டிந டிப்பம ணிக்கழு குடனாட

†ஏலம் வைத்தபு யத்தி லணைத்தருள்
வேலெ டுத்தச மர்த்தைபு ரைப்பவர்
‡ஏவ ருக்கும னத்தில்நி னைப்பவை அருள்வோனே

ஏழி சைத்தமி ழிற்பய னுற்ற§வெ
ணாவ லுற்றடி யிற்பயி லுத்தம
ஈசன் முக்கணி ருத்ரன ளித்தருள் பெருமாளே. (அ)

---

தனத்தா தனத்தா தனத்தா தனத்தா
தனத்தா தனத்தான தந்ததான.

765. உரைக்கா ரிகைப்பா லெனக்கே முதற்பே
ருனக்கோ மடற்கோவை ஒன்றுபாட
உழப்பா திபக்கோ டெழுத்தா ணியைத்தே
டுனைப்பா ரிலொப்பார்கள் கண்டிலேன்யான்
குரைக்கா னவித்யா கவிப்பூ பருக்கே
குடிக்காண் முடிப்போடு கொண்டுவாபொன்
குலப்பூ ணிரத்நா திபொற்றா செடுப்பா
யெனக்கூ றிடர்ப்பாடில் மங்குவேனோ
அரைக்கா டைசுற்றூர் தமிழ்க்கூ டலிற்போய்
அனற்கே புனற்கேவ மைந்தஏடிட்
டறத்தா யெனப்பேர் படைத்தாய் புனற்சே
லறப்பாய் வயற்கீழ மர்ந்தவேளே

---

* அபத்தன்-அசத்தியன். † ஏலம்-வாசனைத்திரவியம்- ‡ ஏவருக்கும்-எவருக்கும். § வெண்ணாவல்-திருவானைக்கா கோவிலிலுள்ள விருக்ஷம்.

திரைக்கா விரிக்கே கரைக்கா னகத்தே
சிவத்யா னமுற்றோர் *சி லந்திநூல்செய்
திருக்கா வனத்தே இருப்பா ரருட்கூர்
திருச்சா லகச்சோதி தப்பிரானே. (க)

---

தான தனன தனதந்த தந்தன
தான தனன தனதந்த தந்தன
தான தனன தனதந்த தந்தன தனதான.

766. ஓல மறைக ளறைகின்ற ஒன்றது
மேலை வெளியி லொளிரும்ப ரஞ்சுடர்
ஓது சரியை க்ரியையும்பு ணர்ந்தவர் எவராலும்
ஓத வரிய துரியங்க டந்தது
போத அருவ சுருபம்ப்ர பஞ்சமும்
ஊனு முயிரு முழுதுங்க லந்தது சிவஞானம்
சால உடைய தவர்கண்டு கொண்டது
மூல நிறைவு குறைவின்றி நின்றது
சாதி குலமு மிலதன்றி யன்பர்சொ னவியோமஞ்
சாரு மனுப வரமைந்த மைந்தமெய்
வீடு பரம சுகசிந்து †இந்த்ரிய
தாப சபல மறவந்து நின்கழல் பெறுவேனோ
வால குமர குககந்த குன்றெறி
வேல மயில வெனவந்து கும்பிடு
வான விபுதர் பதியிந்த்ரன் வெந்துயர் களைவோனே
வாச களப வரதுங்க மங்கல
வீர கடக புயசிங்க சுந்தர
வாகை புனையும் ரணரங்க புங்கவ வயலூரா
ஞால முதல்வி யிமயம்ப யந்தமின்
நீலி கவுரி பரமங்கை குண்டலி
நாளு மினிய கனியெங்க ளம்பிகை த்ரிபுராயி
நாத வடிவி ‡யகிலம்ப ரந்தவ
ளாலி னுதர முளைபங்க ரும்பு§வெ
ணுவ லரசு மனைவஞ்சி தந்தருள் பெருமாளே. (கo)

---

* சிலந்தி நூல்செய் திருக்காவனம் - திரு வானைக்கா- †இந்த்ரிய தாப சபலம்-நாதவிந்து வாயிலாயெடுக்கின்ற பிறவித்துன்பம். ‡அகிலம் பரந்தவள்-அகிலாண்ட நாயகி. § வெணுவல்-வெள்ளைநிறநாவல்.

தனதன தானந்த தான தந்தன
தனதன தானந்த தான தந்தன
தனதன தானந்த தான தந்தன தனதான.

767. *குருதிபு லாலென்பு தோல ரம்புகள்
கிருமிகள் மாலம்பி சீத மண்டிய
குடர்நிணம் ரோமங்கள் மூளை யென்பன பொதிகாயக்

†குடிலிடை யோரைந்து வேட ரைம்புல
அடவியி லோடுந்து ராசை வஞ்சகர்
கொடியவர் மாபஞ்ச பாத கஞ்செய அதனாலே

சுருதிபு ராணங்க ளாக மம்பகர்
சரியையி னுலண்டர் பூசை வந்தனை
துதியொடு நாடுந்தி யான மொன்றையு முயலாதே

‡சுமடம தாய்வம்பு §மால்கொ ளுந்திய
திமிரரொ டேபந்த மாய்வ ருந்திய
துரிசற ஆநந்த வீடு கண்டிட அருள்வாயே

ஒருதனி வேல்கொண்டு நீள்க்ர வுஞ்சமும்
நிருதரு மாவும்||க லோல சிந்துவும்
உடைபட மோதுங்கு மார பங்கய கரவீரா

உயர்தவர் மாவும்ப ரான அண்டர்கள்
அடிதொழு தேமன்ப ராவு தொண்டர்கள்
உளமதில் நாளுங்கு லாவி யின்புற உறைவோனே

கருதிய ஆறங்க வேள்வி யந்தணர்
அரிகரி கோவிந்த ¶கேச வென்றிரு
கழல்தொழு சீரங்க ராச ரன்புறு மருகோனே

கமலனு மாகண்ட லாதி யண்டரு
மெமதுபி ரானென்று தாள்வ ணங்கிய
$கரிவனம் வாழ்சம்பு நாதர் தந்தருள் பெருமாளே. ()

---

* குருதி-இரத்தம். † குடில்-சரீரம்- ‡சுமடம் அறிவின்மை. § மால் கொளுந்திய-மால்கொள்ளும் தீய || கலோலம்-கல்லோலம், ஒலி. ¶கேச வென்றிரு-கேசவஎன்று × இரு. $ கரிவனம்-திருவானைக்கா.

தானத்தானத் தனதானு தானத்தானத் தனதானு.

768. நாடித் தேடித் தொழுவார்பால்*நானத் தாகத் திரிவேனே
மாடக்கூடற் பதிஞான வாழ்வைச் சேரத் தருவாயே
பாடற் காதற் புரிவோனே பாலைத் தேனைத் தருள்வோனே
ஆடற் ருேகைக் கினியோனே ஆனைக்காவிற் பெருமாளே. ()

---

தனந்த தத்தன தானுன தானன
தனந்த தத்தன தானுன தானன
தனந்த தத்தன தானுன தானன தந்ததான.

769. நிறைந்த துப்பிதழ் தேனூறல் நேரென
மறந்த ரித்தக ளுலால நேரென
நெடுஞ்சு ருட்குழல்†சீமூத நேரென நெஞ்சின்மேலே
நெருங்கு பொற்றன மாமேரு நேரென
மருங்கு நிட்கள ஆகாச நேரென
நிதம்ப மூக்கணர் பூணூர நேரென நைந்துசிவன்
குறைந்தி தப்பட வாய்பாடி யாதர
வழிந்த ழைத்தணை மேல்வீழு மாலொடு
குமண்டை யிட்டுடை சோராவி டாயில மைந்துநாபி
குடைந்தி ளைப்புறு மாமாய வாழ்வருள்
மடந்தை யர்க்கொரு கோமாள மாகிய
குரங்கை யொத்துழல் வேனைம னேலய மென்றுசேர்வேன்
மறந்த சுக்ரிப மாரீசன் வாசவி
விருந்து லுத்தகி யோராத தேதுசொல்
மனங்க ளித்திட லாமோது ரோகியுன் முன்புவாலி
வதஞ்செய் விக்ரம சீராம னுனில
மறிந்த திச்சர மோகோ கெடாதினி
வரும்ப டிக்குரை யாய்பார் பலாகவம் என்றுபேசி
அறந்த ழைத்தநு மானோடு மாகடல்
வரம்ப டைத்ததின் மேலேறி ராவண
னரண்கு லைத்தெதிர் போராடு நாரணன் மைந்தனுன
அநங்கன் மைத்துன வேளே கலாபியின்
விளங்கு செய்ப்பதி வேலா யுதாவிய
னலங்‡க யப்பதி வாழ்வான தேவர்கள் தம்பிரானே. ()

---

* நான் நத்து ஆக - நான்நத்துதலாக. நானெத்தாக, எனவும் பாடம்.
†சீமூதம் - நீருண்டதா லிருண்ட மேகம் ‡ கயப்பதி - திருவானைக்கா.

## திருவேட்களம்.

இது சிதம்பரம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே ஒருமைல் தூலவில் இருக்கிறது.

தனதத்தன தாத்தன தானன
தனதத்தன தாத்தன தானன
தனதத்தன தாத்தன தானன தனதான.

770. சதுரத்தரை நோக்கிய பூவொடு கதிரொத்திட ஆக்கிய கோளகை
தழையச்சிவ பாக்கிய நாடக அநுபூதி
சரணக்கழல் காட்டியெ ணுணவ மலமற்றிட வாட்டிய ஆறிரு
சயிலக்குல மீட்டிய தோளொடு முகமாறும்
கதிர்சுற்றுற நோக்கிய பாதமு மயிலிற்புற நோக்கிய ழுமென
கருணைக்கடல் காட்டிய கோலமும் அடியேனைக்
கனகத்தினு கோக்கினி தாயடி யவர்முத்தமி ழாற்புக வேபா
கதிபெற்றிட நோக்கிய பார்வையு மறவேனே
சிதறத்தரை நாற்றிசை பூதரம் நெரியப்பறை மூர்க்கர்கள் மாமுடி
சிதறக்கட லார்ப்புற வேவயில் விடுவோனே
சிவபத்தினி கூற்றினை மோதிய பதசத்தினி மூத்தவி நாயகி
செகமிப்படி தோற்றிய பார்வதி அருள்பாலா
விதுரற்கும ராக்கொடி யானையும் விகடத்துற வாக்கிய மாதவன்
விசையற்குயர் தேர்ப்பரி யூர்பவன் மருகோனே
வெளியெட்டிசை சூர்ப்பொரு தாடிய கொடிகைக்கொடு கீர்த்தியு லாவிய
விறல்மெய்த்திரு வேட்கள மேவிய பெருமாளே. (௧)

---

தாத்தன தானன தாத்தன தானன
தாத்தன தானன தனதான.

771. மாத்திரை யாகிலு நாத்தவ றாளுடன்
வாழ்க்கையை நீடென மதியாமல்
மாக்களை யாரையு மேற்றிடு சீவிகள்
மாப்பரி வேபெறு மனுபோக
பாத்திர மீதென மூட்டிடு மாசைகள்
பாற்படு ஆடக மதுதேடப்

பார்க்கள மீதினில் மூர்க்கரை யேகவி
பாற்கட லானென உழல்வேனோ
சாத்திர மாறையு நீத்தம னேவைய
சாத்தியர் மேவிய பதவேளே
தாத்தரி தாகிட சேக்கெனு மாநட
தாட்பர னார்தரு குமரேசா
*வேத்திர சாலம தேற்றிடு வேடுவர்
†மீக்கமு தாமயில் மணவாளா
‡வேத்தம தாமறை யார்த்திடு சீர்திரு
வேட்கள மேவிய பெருமாளே. (உ)

---

## திருநெல் வாயில்.

இது சிதம்பரம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே ஒன்றரை மைல் துலைவில் இருக்கிறது.

தனன தானன தானதாத் தனந்த
தனன தானன தானதாத் தனந்த
தனன தானன தானதாத் தனந்த தனதான.

772. அறிவி லாதவ ரீனர்பேச் சிரண்டு
பகரு நாவினர் லோபர்தீக் குணங்க
ளதிக பாதகர் மாதர்மேற் கலன்கள் புனைசூதர்
அசடர் பூமிசை வீணராய்ப் பிறந்து
திரியு மானுடர் பேதைமார்க் கிரங்கி
அழியு மாலினர் நீதிநூற் பயன்கள் தெரியாத
நெறியி லாதவர் சூதினாற் கவர்ந்து
பொருள்செய் பூரியர் யோகமாய்ப் ரபஞ்ச
நிலையில் வீழ்தரு மூடர்பாற் சிறந்த தமிழ்கூறி
நினைவு பாழ்பட வாடிநோக் கிழந்து
வறுமை யாகிய தீயின்மேற் கிடந்து
நெளியு நீள்புழு வாயினேற் கிரங்கி அருள்வாயே
§நறிய வார்குழல் வானநாட் டரம்பை
மகளிர் காதலர் தோள்கள்வேட் டிணங்கி
நகைகொ டேழிசை பாடிமேற் பொலிந்து களிகூர

---

* வேத்திரசாலம் - அம்புக்கூட்டம். † மீக்கமுது - மிக்க அமுது.
‡ வேத்தமதாமறை - தமிழ்வேதம். § நறிய-நல்ல மணம் பொருந்திய.

நடுவி லாதகு ரோதமாய்த் தடிந்த
தகுவர் மாதர்ம ணாளர்தோட் பிரிந்து
நசைபொ ருதழு தாகமாய்த் தழுங்கி இடர்கூர

மறியு மாழ்கட லூடுபோய்க் காந்து
கவடு கோடியின் மேலுமாய்ப் பரந்து
வளரு மாவிரு கூறதாய்த் தடிந்த வடிவேலா

மருவு காளமு கில்கள்கூட் டெழுந்து
மதியு லாவிய மாடமேற் படிந்த
வயல்கள் மேவுநெல் வாயல்வீற் றிருந்த பெருமாளே. ()

---

## திருமயேந்திரம்.

இது கொள்ளிடம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே ஆறு மைல் துலைவில் இருக்கிறது.

தந்தன தந்தன தாந்த தானன
தந்தன தந்தன தாந்த தானன
தந்தன தந்தன தாந்த தானன தனதான.

773. வண்டணி யுங்கமழ் கூந்த லார்விழி
அம்பிய லுஞ்சிலை போந்த வாணுதல்
வண்டா ளந்திக ழாய்ந்த வார்நகை குயில்போல

வண்பயி லுங்குவ டாண்ட மார்முலை
யின்பொறி யங்குமி ழாம்பல் தோள்கர
வஞ்சியெ னுங்கொடி சேர்ந்த நூலிடை மடவார்பொன்

கண்டவு டன்களி கூர்ந்து பேசிகள்
குண்டுணி யுங்குரல் சாங்க மோதிகள்
கண்சுழ லும்படி தாண்டி யாடிகள் சதிகாரர்

கஞ்சுளி யுந்தடி யீந்து போவென
நஞ்சையி டுங்கவ டார்ந்த பாவிகள்
கம்பையி லுஞ்சட மாய்ந்து நாயனும் உழல்வேனோ

அண்டரு டன்தவ சேந்து மாதவர்
புண்டரி கன்திரு பாங்கர் கோவென
அஞ்சலெ னும்படி போந்து வீரமொ டசுரார்கள்

அங்கமொ டுங்கிட மாண்பெ ருழிக
ளெண்கிரி யும்பொடி சாம்பர் *நூறிட
அந்தக னுங்கயி ருங்கை வீசிட விடும்வேலா

செண்டணி யுஞ்சடை †பாந்தள் நீர்மதி
யென்பணி யன்கன சாம்பல் பூசிய
செஞ்சட லன்சுத சேந்த வேலவ முருகோனே

திங்கள்மு கந்தன சாந்து மார்பின
ளொன்றனு ளம்புகு கான்பெண் மாதொடு
சிந்தைம கிழ்ந்தும யேந்த்ர மேவிய பெருமாளே. (ச)

---

## சீகாழி.

இது சீகாழி ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே அரை மைல்
துலைவில் இருக்கிறது.

தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன தந்ததான.

'4. அலைகடல் சிலைமதன் அந்தி யூதையும்
அரிவையர் வசையுட னங்கி போல்வர
அசைவன இடைமணி யன்றில் கோகிலம் அஞ்சிநானும்

அழலிடு மெழுகென வெம்பி வேர்வெழ
அகிலொடு ம்ருகமத நஞ்சு போலுற
அணிபணி மணிபல வெந்து நீறெழ அங்கம்வேறாய்

முலைகனல் சொரிவர முன்பு போல்நினை
வழிவச மறவற நின்று சோர்வுற
முழுதுகொள் விரகனல் மொண்டுவீசிட மங்கிடாதே

முருகவிழ் திரள்புய மூந்து வேலணி
முளரியொ டழகிய தொங்கல் தாரினை
முனிவற நினதருள் தந்தென் ‡மாலைமு னிந்திடாதோ

சிலைநுதல் கயல்விழி செஞ்சொல் வானவி
திரிபுரை பயிரவி திங்கள் சூடிய
திகழ்சடை நெடியவள் செம்பொன் மேனியள் சிங்கமேறித்

---

* நூறிட - அழிந்துபோக. † பாந்தள் - பாம்பு. ‡ மாலை - மயக்கத்தை.

திரள்படை யலகைகள் பொங்கு *கோடுகள்
திமிலையொ டறைபறை நின்று மோதிட
சிவனுட னடம்வரு மங்கை மாதுமை தந்தவேளே

†மலைதனி லொருமுனி தந்த மாதுதன்
மலரடி வருடியெ நின்று நாடொறு
மயில்பயில் குயில்கிளி வம்பி லேகடி தொண்டினேனே

மழைமுகில் தவழ்தரு மண்டு கோபுர
மதிள்வயல் புடையுற விஞ்சுகாழியில்
வருமொரு கவுணியர் மைந்த தேவர்கள் தம்பிரானே. ()

தனனதான தானன தனனதான தானன
தனனதான தானன தனதான.

775. ‡இரதமான தேனூற லதரமான மாமாத
ரெதிரிலாத பூணார முலைமீதே

இனிதுபோடு மேகாச உடையினாலு மாலால
விழியினாலு மாலாகி அநுராக

விரகமாகி யேபாய விடைவிடாமல் நாடோறு
ம்ருகமதாதி சேரோதி நிழல்மூழ்கி

விளையுமோக மாமாயை கழலுமாறு நாயேனும்
விழலனாய்வி டாதேநின் அருள்தாராய்

அரகராவெ னாமூடர் திருவெணீறி டாமூடர்
அடிகள்பூசி யாமூடர் கரையேற

அறிவுநூல்க லாமூடர் நெறியிலேநி லாமூடர்
அறம்விசாரி யாமூடர் நரகேழில்

புரளவீழ்வ ரீராறு கரவிநோத சேய்சோதி
புரணபூர ணாகார முருகோனே

புயலுலாவு சேணாடு பரவிநாளு மீடேறு
§ புகலிமேவி வாழ்தேவர் பெருமாளே. (உ)

* கோடு - சங்கு. † வள்ளி. ‡ இரதம் - இனிமை. § புகலி-சீகாழி.

தானத்தன தானனதந்த தானத்தன தானனதந்த
தானத்தன தானனதந்த தனதான.

776. ஊனத்தசை தோல்கள்சுமந்த காயப்பொதி மாயமிகுந்த
ஊசற்சுடு நாறுகுரம்பை மறைநாலும்
ஓதப்படு நாலுமுகன்ற னாலுற்றிடு கோலமெழுந்து
ஓடித்தடு மாறியுழன்று தளர்வாகிக்
கூனத்தடி யோடுநடந்த ஈனப்படு கோழைமிகுந்த
கூளச்சட மீதையுகந்து புவிமீதே
கூசப்பிர மாணப்ரபஞ்ச மாயக்கொடு நோய்கள்களன்று
கோலக்கழ லேபெறவின்று அருள்வாயே
*சேனக்குரு கூடலின்று ஞானத்தமிழ் நூல்கள்பகர்ந்து
சேணிச்சம ணோர்கழு வின்கண் மிசையேறத்
தீரத்திரு நீறுபுரிந்து மீனக்கொடி யோனுடல்துன்று
தீமைப்பிணி தீரவுவந்த வரநாதா
கானச்சிறு மானைநினைந்து ஏனற்புன மீதுநடந்து
காதற்கிளி யோடுமொழிந்து சிலைவேடர்
காணக்†கணி யாகவளர்ந்து ஞானக்குற மானைமணந்து
காழிப்பதி மேவியுகந்த பெருமாளே. (௩)

---

தையா தத்தன தானன தானன
தையா தத்தன தானன தானன
தையா தத்தன தானன தானன தனதான.

777. ஒய்யா ரச்சிலை யாமென வாசனை
மெய்யா ரப்பணி பூஷண மாலைக
ளுய்யா நற்கலை யேகொடு மாமத விதமாகி
ஒவ்வா ரிப்படி யோரென வேயிரு
கையா ரக்கணை மோதிர மேய்பல
உள்ளார் செப்பிட ஏமுற நாளினும் உடல்பேணிச்

* சேனக்குரு-பிறவியிற் சிறந்த குரு. † கணி - வேங்கைமரம்.

செய்வா ரிப்படி யேபல வாணிப
*மியா ரிற்பண மேயொரு காசிடை
செய்யார் சற்பனை காரர்பி சாசருள் அடிபேணச்

செவ்வா ரிற்படு நானொரு பாதகன்
மெய்யா எப்படி யோர்களை சேர்வது
செய்யா யற்புத மேபெற வோர்பொருள் அருள்வாயே

†மையா ரக்கிரி யேபொடி யாய்விட
பொய்சூ ரப்பதி யேகெட வானவர்
‡வையாய் பொற்சர ணேவென வேதொழ விடும்வேலா

வையா ளிப்பரி வாகன மாகொரு
துவ்வா ழிக்கட லேழ்மலை தூளிசெய்
மைபோ லக்கதி ரேய்நிற மாகிய மயில்வாழ்வே

தெய்வா னைக்கர சேகுற மான்மகிழ்
§செய்யா முத்தமி ழாகர னேபுகழ்
தெய்வீ கப்பா மாகுரு வேயென விருதாதக்

‖திய்யா ரக்கழு வேறிட நீறிடு
கையா வற்புத னேபிர மாபுர
செய்கா ழிப்பதி வாழ்முரு காகூர் பெருமாளே. (௬)

தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன தனதான.

778 சொங்கு லாவிய குழலினு நிழலினு
நஞ்ச ளாவிய விழியினு ¶மிரணிய
குன்று போல்வளர் முலையினு நிலையினு மடமாதர்

கொம்பு சேர்வன இடையினு நடையினு
மன்பு கூர்வன மொழியினு மெழில்குடி
கொண்ட சேயித ழமுதினு நகையினு மனதாய

* இய்யார்-ஈயார். † மை-மேகம். ‡ வையாய்-செய்வாய். § செய்யா-அழகா. ‖ திய்யார்-தீ ஆர். ¶ இரணியகுன்று-பொன்மலை.

*சங்கை யாளியை அணுவிடை பிளவள
வின்சொல் வாசக மொழிவன இலையில
சம்ப்ர தாயனை அவலனை யொளிதிகழ் இசைகூறும்

தண்டை நூபுர மணுகிய விருகழல்
கண்டு நாளவ மிகையற விழியருள்
தந்த பேரருள் கனவிலு நனவிலு மறவேனே

வங்க வாரிதி முறையிட நிசிசரர்
துங்க மாமுடி பொடிபட வடவனல்
மங்கி நீறெழ அலகைகள் நடமிட மயிலேறி

வஞ்ச வேல்கொடு முனிபவ அழகிய
†சண்பை மாநக ருறையுமொ ராறுமுக
வந்த வானவர் மனதினி விடர்கெட நினைவோனே

பங்க வீரியர் பறிதலை விரகினர்
மிஞ்சு பாதக ரறநெறி பயனிலர்
பந்தமேவிய பகடிகள் கபடிகள் நிலைகேடர்

பண்பி லாதவர் கொலைசெயு மனதின
ரிங்கெ ணுயிர ருயரிய கழுமிசை
பஞ்ச பாதகர் முனைகெட அருளிய பெருமாளே. (௫)

---

தந்த தந்தன தனதன தனதன
தந்த தந்தன தனதன தனதன
தந்த தந்தன தனதன தனதன தனதான

779. சந்த னம்பரி மளபுழு கொடுபுனை
கொங்கை வஞ்சியர் ‡சரியொடு §கொடுவளை
தங்கு செங்கையர் அனமென வருநடை மடமாதர்

சந்த தம்பொலி வழகுள வடிவினர்
வஞ்ச கம்பொதி மனதின ரணுகினர்
தங்கள் நெஞ்சக மகிழ்வுற நிதிதர அவர்மீதே

சிந்தை வஞ்சக நயமொடு பொருள்கவர்
தந்த்ர மந்த்ரிகள் தாணியி லணைபவர்
செம்பொ னிங்கினி யிலையெனில் மிகுதியு முனிவாகித்

---

* சங்கை-வழமை. † சண்பை-சீகாழி. ‡சரி-வளை. §கொடு-பொன்.

திங்க ளொன்றினில் *நெனல்பொரு ளுதவில
னென்று சண்டைகள் புரிதரு மயலியர்
†சிங்கி யுங்கொடு மிடிமையு மகலநின் அருள்கூர்வாய்
‡மந்த ரங்குடை யெனநிரை யுறுதுயர்
சிந்த அன்றடர் மழைதனி லுதவிய
மஞ்சு னும்படி வடிவுறு மரிபுகழ் மருகோனே
மங்கை யம்பிகை மகிழ்சர வணபவ
துங்க §வெங்கய முகன்மகிழ் துணைவநல்
வஞ்சி தன்குற மகள்பத மலர்பணி மணவாளா
தந்த னந்தன தனதன தனவென
வண்டு விண்‖டிசை முரல்தரு மணமலர்
தங்கு சண்பக முகிலள வுயர்தரு ¶பொழில்மீதே
சங்கு நன்குமிழ் தரளமு மெழில்பெறு
துங்க வொண்பணி மணிகளும் $வெயில்விடு
சண்பை யம்பதி மருவிய அமரர்கள் பெருமாளே. (கூ)

---

தனதன தந்தன தந்தன தந்தன
தனதன தந்தன தந்தன தந்தன
தனதன தந்தன தந்தன தந்தன தனதான.

780. சருவியி கழ்ந்தும ருண்டுவெ குண்டுறு
சமயமு மொன்றிலை யென்றவ ரும்பறி
தலையரு நின்றுக லங்கவி ரும்பிய தமிழ்கூறும்
**சலிகையு நன்றியும் வென்றியு மங்கள
பெருமைக ளுங்கன முங்குண மும்பயில்
சரவண மும்பொறை யும்புக ழுந்திகழ் தனிவேலும்
விருதுது லங்கசி கண்டியி லண்டரு
முருகிவ ணங்கவ ரும்பத மும்பல
விதரண முந்திற முந்தர முந்தினை புனமானின்
ம்ருகமத குங்கும கொங்கையில் ††தொந்தடி
வருடிம ணந்துபு ணர்ந்தது வும்பல
விஜயமு மன்பின்மொ ழிந்துமொ ழிந்தியல் மறவேனே

---

* நெனல்-நென்னல், நேற்று. †சிங்கி-வீண் டம்பக்கூட்டுறவு. ‡மந்தரம்-கோவர்த்தனகிரி. §வெங்கயமுகன்-விநாயகன். ‖ இசைமுரல்-கீதத்தொனி. ¶ பொழில்-சோலை. $ வெயில்விடு-பிரகாசிக்கிற. **சலிகை-செல்வாக்கு ††தொந்தடி-புட்பத்தின்மீதினும் நோகின்ற மெல்லியபதம்.

கருதியி லங்கைய ழிந்துவி டும்படி
அவுணா டங்கம டிந்துவி ழும்படி
கதிரவ னிந்துவி ளங்கிவ ரும்படி விடுமாயன்
*கடகரி யஞ்சிந டுங்கிவ ருந்திடு
மடுவினில் வந்துத வும்புய †லிந்திரை
கணவன ரங்கமு குந்தன்வ ருஞ்‡சக டறமோதி
§மருதுகு லுங்கிந லங்கமு னிந்திடு
வரத‖ன லங்கல்பு னைந்தரு ளுங்குறள்
வடிவனெ டுங்கடல் மங்கவொ ரம்புகை தொடு¶மீளி
மருகபு ரந்தர னுந்தவ மொன்றிய
$பிரமபு ரந்தனி லுங்குக னென்பவர்
மனதினி லும்பரிவொன்றிய மர்ந்தருள் பெருமாளே. (எ)

---

தந்தத்தன தானன தந்தத் தனதான.

781. சிந்துற்றெழு மாமதி அங்கித் திரளாலே
தென்றற்0றரு வாசமி குந்துற் றெழலாலே
அந்திப்பொழு தாகிய கங்குற் றிரளாலே
அன்புற்றெழு பேதைம யங்கித் தனியானாள்
நந்துற்றிடு வாரியை மங்கத் திகழாயே
நஞ்சொத்தொளிர் வேலினை யுந்திப் பொருவேளே
சந்தக்கவி நூலினர் தஞ்சொற் கினியோனே
சண்பைப்பதி மேவிய கந்தப் பெருமாளே. (அ)

---

தத்தன தத்தனத் தத்தன தத்தனத்
தத்தன தத்தனத் தனதான

782. செக்கர்வா னப்பிறைக் கிக்குமா ரற்கவத்
தெற்கினூ தைக்கனற் றணியாத
சித்ரவீ ணைக்கலர்ப் பெற்றதா யர்க்கவச்
சித்தம்வா டிக்கனக் கவிபாடிக்

---

* கடகரி - மதயானை. † இந்திரை - இலக்குமி. ‡ சகடு - சக்கரமாய் வந்த அசுரன். § மருது - மருதமரமான அசுரன். ‖ அலங்கல் - மாலை. ¶ மீளி - பராக்கிரமன். $ பிரமபுரம் - சீகாழி. 0 தருவாசம் - சந்தனமணம்.

கைக்கபோ லக்கிரிப் பொற்கொள்ரா சிக்கொடைக்
கற்பதா ருச்செகத் ரயபானு
கற்றபேர் வைப்பெனச் செப்பியே லுத்தர்வற்
கைக்குணன் வெட்கிநிற் பதுபாராய்
சக்ரபா ணிக்குமப் பத்மயோ னிக்குநித்
தப்ரதா பர்க்குமெட் டரிதாய
தத்வவே தத்தினுற் பத்திபோ தித்தவத்
தத்வரூ பக்கிரிப் புரைசாடிக்
கொக்கிலே புக்கொளித் திட்டசூர் பொட்டெழக்
குத்துமரா வுத்தபொற் குமரோனே
கொற்றவா வுற்பலச் செச்சைமா லைப்புயக்
*கொச்சைவாழ் முத்தமிழ்ப் பெருமாளே. (௯)

தனதன தாந்ததான தனதன தாந்ததான
தனதன தாந்ததான தனதான.

783. தினமணி †சார்ங்கபாணி யெனமதிள் நீண்டுசால
தினகர னேய்ந்தமாளி கையிலாரஞ்
செழுமணி சேர்ந்தபீடி கையிலிசை வாய்ந்தபாடல்
‡வயிரியர் சேர்ந்துபாட இருபாலும்
இனவளை பூண்கையார்க வரியிட வேய்ந்துமாலை
புழுககில் சாந்துபூசி அரசாகி
இனிதிரு மாந்துவாழு மிருவினை நீண்டகாய
மொருபிடி சாம்பலாகி விடலாமோ
வனசர ரேங்கவான முகடுற வோங்கியானை
மயலொடு பாங்கிமார்கள் அருகாக
மயிலொடு மான்கள்சூழ வளவரி வேங்கையாகி
மலைமிசை தோன்றுமாய வடிவோனே
கனசமண் §மூங்கர்கோடி கழுமிசை தூங்கநீறு
கருணைகொள் பாண்டிநாடு பெறவேதக்
கவிதரு காந்தபால ||கழுமல பூந்தராய
கவுணியர் வேந்ததேவர் பெருமாளே. (௧0)

* கொச்சை - சீகாழி. † சார்ங்கபாணி யெனமதிள்-மதிளின் சிகரத்தில் மேகம் தங்குவதால் சாமளவண்ணமுற்று விஷ்ணுவைப்போல் தோற்றுகிற அவ்வளவு உயரம் பொருந்தியதென்பது கருத்து ‡ வயிரியர்-சங்கீத வித்வான்கள். § மூங்கர்-வாய்பேசாதவர். || கழுமலம் பூந்தர்-சீகாழி.

தனதத்தத் தானத்தானன தனதத்தத் தானத்தானன
தனதத்தத் தானத்தானன தனதான.

784. மதனச்சொற் *காரக்காரிகள் பவளக்கொப் பாடச்சீரிகள்
மருளப்பட் டாடைக்காரிகள் அழகாக
மவுனச்சுட் டாடிச்சோலிகள் †இசலிப்பித் தாசைக்காரிகள்
வகைமுத்துச் சாரச்சூடிகள் விலைமாதர்
குதலைச்சொற் சாரப்பேசிகள் ‡நரகச்சிற் சாடிப்பீடிகள்
§குசலைக்கொட் சூலைக்காலிகள் மயல்மேலாய்க்
கொளுவிக்கட் டாசைப்பாசனை பவதுக்கக் காரச்சூதனை
குமுதப்பொற் பாதச்சேவையில் அருள்வாயே
கதறக்கற் சூரைக்கார்கட லெரியத்திக் கூரிற்பாழ்பட
ககனக்கட் டாரிக்காயிரை இடும்வேலா
கதிர்சுற்றிட் டாசைப்பால்கிரி யுறைபச்சைப் பாசக்கோகில
கவுரிப்பொற் சேர்வைச்சேகர முருகோனே
||திதலைப்பொற் பாணிக்கார்குயி லழகிற்பொற்ரேகைப் பாவையைத்
தினமுற்றுச் சாரத்தோள்மிசை அணைவோனே
திலதப்பொட் டாசைச்சேர்முக மயிலுற்றிட் டேறிக்காழியில்
சிவன்மெச்சக் காதுக்கோதிய பெருமாளே. (௧௧)

## வைத்தீசுவரன் கோயில்.

இது வைத்தீசுவரன் கோயில் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே அரை மைல் தூலவில் இருக்கிறது.

தனத்தன தானத் தனதான.

785. ஊரத்துறை போதத் தனியான
உனைச்சிறி தோதத் தெரியாது
மரத்துறை போலுற் றடியேனும்
மலத்திருள் மூடிக் கெடலாமோ
பரத்துறை சீலத் தவர்வாழ்வே
பணித்தடி வாழ்வுற் றருள்வோனே
வரத்துறை நீதர்க் கொருசேயே
வயித்திய நாதப் பெருமாளே. (௧)

*காரம் - காரியம். †இசலி-ஆணையிடுதல். ‡நரக அச்சில் சாடிப்பீடிகள் - நரகமாகிய அச்சில் சாய்வித்துத் துன்பப் படுத்துவோர். § குசலை கொள் சூலைக்காலிகள் - (தமது செய்கைக்குத்) தடையாக வந்த கர்ப்பத்தை அழிப்பவர். || இது குறிப்பாய் வள்ளியையும் தெய்வானையையுங்குறிக்கும்.

தத்தன தானதான தத்தன தானதான
தத்தன தானதான தனதான.

786. எத்தனை கோடிகோடி விட்டுட லோடியாடி
எத்தனை கோடிபோன தளவேதோ
இப்படி மோகபோக மிப்படி யாகியாகி
இப்படி யாவதேது இனிமேல்யோ
சித்திடில் சீசிசீசி குத்திர மாயமாயை
சிக்கினி லாயிமாயும் அடியேனைச்
சித்தினி லாடலோடு முத்தமிழ் வாணரோது
சித்திர ஞானபாதம் அருள்வாயே
நித்தமு மோதுவார்கள் சித்தமெ வீடதாக
நிர்த்தம தாடுமாறு முகவோனே
நிட்கள ரூபர்பாதி பச்சுரு வான†மூணு
நெட்டிலை சூலபாணி அருள்பாலா
பைத்தலை நீடுமாயி ரத்தனை மீதுபீறு
பத்திர பாதநீல மயில்வீரா
பச்சிள பூகபாளை செய்க்கயல் தாவு*வேளூர்
பற்றிய மூவர்தேவர் பெருமாளே. (௨)

---

தானதத்தனந் தானதத்ததன
தானதத்தனந் தானதத்ததன
தானதத்தனந் தானதத்ததன தனதான.

787. பாடகச்சிலம் போடுசெச்சைமணி
கோவெனக்கலந் தாடுபொற்சரணர்
பாவைசித்திரம் போல்வர்பட்டுடையின் இடைநூலார்
பாரபொற்றனம் கோபுரச்சிகா
மாமெனப்படர்ந் தேமலிப்பரித
பாகுறற்கரும் போடுசர்க்கரையின் மொழிமாதர்

*வேளூர் - வேளூர், வைத்தீசுவரன் கோயில். †மூணு-மூன்று.

*ஏடகக்குலம் சேருமைக்குழலொ
டா†டளிக்குலம் பாடநற்றெருவி
லேகி‡புட்குலம் போலபற்பலசொல் இசைபாடி
ஏறியிச்சகம் பேசியெத்தியிதம்
வாருமுற்பணம் தாருமிட்டமென
ஏணிவைத்துவந் தேறவிட்டிடுவர் செயலாமோ
சேடனுக்கசண் டாளரக்கர்குல
மாள அட்டகுன் றேழலைக்கடல்கள்
சேரவற்றநின் றுடயிற்கரமி ரறுதோள்மேல்
சேணிலத்தர்பொன் பூவைவிட்டிருடி
யோர்கள் கட்டியம் பாடவெட்டரசர்
சேசெபொத்தசெந் தாமரைக்கிழவி புகழ்வேலா
நாடகப்புனங் காவலுற்றசுக
மோகனத்திமென் தோளிசித்ரவளி
நாயகிக்கிதம் பாடிநித்தமணி புனைவோனே
ஞானவெற்புகந் தாடுமத்தர்§தையல்
நாயகிக்குநன் பாகரக்கணியும்
நாதர்மெச்சவந் தாடுமுத்தமருள் பெருமாளே. (ந)

---

தானதான தத்ததந்த தானதான தத்ததந்த
தானதான தத்ததந்த தனதான.

788. மாலினாலெ டுத்தகந்தல் சோறினால்வ ளர்த்ததொந்தி
மாரறியாடெ டுத்தசிந்தை அநியாய
மாயையாலெ டுத்துமங்கி னேனையாவெ னக்கிரங்கி
||வாரையாயி னிப்பிறந்து இறவாமல்
வேலினால்வி னைக்கணங்கள் தூளதாவெ ரித்துமுன் றன்
வீடுதாப ரித்தஅன்பர் கணமூடே
மேவியானு னைப்பொல்சிந்தை யாகவேக ளித்துகந்த
வேளையாமெ னப்¶பரிந்து அருள்வாயே
காலினாரெ னப்பரந்த சூர்மாள வெற்றிகொண்ட
காலபானு சத்தியங்கை முருகோனே

---

* ஏடகம்-விரிமலர். † அளிக்குலம் - வண்டுக்கூட்டம். ‡ புட்குலம் - குயில்கூட்டம். § தையல்நாயகி என்பது வைத்தீசுரன்கோயிலிலெழுந் தருளியிருக்கும் உமாதேவியாரின் பெயர். || வாரையாய் - தொண்டு தொட்ட காலமாய். ¶ பரிந்து-பரிய, அன்புகூர்ந்திருக்க.

காமபாண மட்டனந்த கோடிமாத ரைப்புணர்ந்த
காளையேறு கர்த்தனெந்தை அருள்பாலா
சேலைநேர்வி ழிக்குறம்பெ ணிசைதோளு றப்புணர்ந்து
சீரையோது பத்தரன்பில் உறைவோனே
தேவர்மாதர் சித்தர்தொண்டர் ஏக*வேளு ருக்குகந்த
சேவல்கேது சுற்றுகந்த பெருமாளே. (௪)

---

தானதானன தாத்ததந்தன
தானதானன தாத்ததந்தன
தானதானன தாத்ததந்தன தனதான.

789. மூலாதாரமொ டேற்றியங்கியை
ஆறுதாரமொ டோட்டியந்திர
மூலாவாயுவை யேற்றிநின்சுழி முனையூடே
மூதாதார†ம ருப்பிலந்தர
நாதாகீதம தார்த்திடும்பர
மூடேபாவொளி யாத்துமந்தனை விலகாமல்
மாலாடுனொடு சேர்த்திதம்பெற
நாலுவாகம சாத்திரஞ்சொல்லும்
வாழ்ஞானபுரி யேற்றிமந்திர தவிரூடே
மாதாநாதனும் வீற்றிருந்திடும்
வீடேமூன்றெளி காட்டிசந்திர
வாகார்தேனமு தூட்டியென்றனை உடனாள்வாய்
சூலாள்மாதுமை சேர்த்தசம்பவி
மாதா‡ராபகல் §காத்தமைத்தனை
சூடேரடர்வினை வாட்டிமைந்தரின் எமையாளும்
தூயாள்மூவரை நாட்டுமெந்தையர்
வேளூர்வாழ்வினை தீர்த்தசங்கரர்
தோய்சாரூபரொ டேற்றிருந்தவள் அருள்பாலா
வேலாவேழ்கடல் வீட்டிவஞ்சக
மூடார்சூரரை வாட்டியந்தகன்
வீடுடேவிய காத்திரம்பரி மயில்வாழ்வே
வேதாநால்தலை ||சிக்கொளும்படி
கோலாகாலம தாட்டுமந்திர
வேலா¶மால்மக ளார்க்கிரங்கிய பெருமாளே. (௫)

---

* வேளூருக்கு உகந்த எனப்பிரிக்க. †மருப்பில்-மருப்பில். ‡ ராபகல் - இரவு பகலும். § காத்தமைந்தனை - காத்து அமைந்த அன்னை. || சிக்கொளும்படி-சாயப்படும்படி. ¶ மால் மகளார்-வள்ளி, தெய்வானை.

தானதானதன தானதன தானதன
தானதானதன தானதன தானதன
தானதானதன தானதன தானதன தனதான.

790. மேகவார்குழ லாடதன பாரமிசை
யாரமாடகுழை யாடவிழி யாடபொறி
மேனிவாசனைகள் வீசவல்குல் மோதிபரி மளமேற

மீதிலாடையிடை யாடமயில் போலநடை
யோலமோலமென பாதமணி நூபுரமு
மேல்விழ்வீசபணி *கீரகுயில் போலகுரல் முழவோசை

ஆகவேயவைகள் கூடிடுவர் வீதிவரு
வோரைவாருமென வேசரச மோடுருகி
ஆசைபோலமனை யேகொடணை வார்கள்குவ டதிபார

ஆணிமாமுலையின் மூழ்கிசுக வாரிகொடு
வேர்வைபாயவணை யூடமளி யாடியிட
ரானசூலைபல நோய்கள்கட லாடியுடல் உழல்வேனோ

நாகலோகர்மதி லோகர்மக லோகர்விதி
நாடுளோர்களம ரோர்கள்கண நாதர்விடை
நாதர்வேதியர்கள் ஆதிசர சோதிதிகழ் முனிவோர்கள்

நாதரேநரர்ம ஞானர்பு ராணவகை
வேதகீதவொலி பூரையிது பூரையென
நாசமாயசுரர் மேவிகிரி தூளிபட விடும்வேலா

தோகைமாதுகுற மாதமுத மாதுவினல்
தோழிமாதுவளி நாயகமி ஞானசுக
சோகமோடுருகி மார்முலைவிடாமலணை புணர்வோனே

தோளிராறுமுக மாறுமயில் வேலழகு
மீதெவானவடி வாதொழு†தெ ஞா‡வயனர்
சூழு§காவிரியும் வேளூர்முரு காவமரர் பெருமாளே (கூ)

---

*கீரம்-பால் †எஞா-எண்ணி. ‡வயனர்-சடாயு பம்பாதி யென்னும் பறவை வடிவினர். வாயனம்-பறவை. §காவிரியும்-சோலை விரிகின்ற.

## வழுவூர்.

இது நன்னாற்றிலிருந்து வடக்கே 2 மைல் தூலைவில் இருக்கிறது.

தனதானன தானனதானன தனதானன தானனதானன
தனதானன தானனதானன தனதான.

791. தருவூரிசை யாரமுதார்நிகர் குயிலார்மொழி தோதகமாதர்கள்
தணியாமய லாழியிலாழவும் அமிழாதே
தழலேபொழி கோரவிலோசன மெறிபாசம காமுனேசூலமுள்
சமனார்முகில் மேனிகடாவினில் அணுகாதே
கருவூறிய நாளுமுநூறெழு மலதேகமு மாவலுமாசைக
படமாகிய பாதக நீதற மிடிதீரக்
கனிவீறிய போதமெய்ஞானமு மியலார்சிவ னேசமுமேவா
கழல்சேரணி நூபுரதாளிணை நிழல்தாராய்
*புருகூதன்மி னுளொருபாலுற சிலைவேடுவர் மாதொருபாலுற
புதுமாமயில் மீதணையாவரும் அழகோனே
புழுகார்பனிர் பூசியவாசனை யுரகாலணி கோலமென்மாலைய
புரிநூலுமு லாவு†துவாதச புயவீரா
மருவூர்குளிர் வாவிகள்சோலைகள் செழிசாலிகு லாவியகார்வயல்
மகதாபத சீலமுமேபுனே வளமூதூர்
மகதேவர்பு ராரிசதாசிவர் சுதராகிய தேவசிகாமணி
வழுவூரில்நி லாவிரல் வாழ்வருள் பெருமாளே. (க)

---

தனனாதத்தன தாத்ததந்தன
தனனாதத்தன தாத்ததந்தன
தனனாதத்தன தாத்ததந்தன தனதான.

792. தலைநாளிற்பத மேத்தியன்புற
உபதேசப்பொரு ளூட்டிமந்திர
தவஞானக்கட லாட்டியென்றனை அருளாலுன்
சதுராகத்தொடு கூட்டியண்டர்க
ளரியாமுத்தமி ழூட்டிமுண்டக
தளிர்வேதத்துறை காட்டிமண்டல வலமேவும்
கலைசோதிக்கதிர் காட்டிநன்சுட
ரொளிநாதப்பர மேற்றிமுன்சுழி
கமழ்வாசற்படி நாட்டமுங்கொள விதிதாவி
கமலாலைப்பதி சேர்த்துமுன்பதி
வெளியாகப்புக வேற்றியன்பொடு
கதிர்தோகைப்பரி மேற்கொளுஞ்செயல் மறவேனே

---

*புருகூதன்-இந்திரன். † துவாதசம் - பன்னிரண்டு.

சிலைவீழக்கடல் கூட்டமுங்கெட
அவுணரைத்தலை வாட்டி*யம்பர
சிரமாலைப்புக வேற்றவுந்தொடு கதிர்வேலா
சிவகாமிக்கொரு தூர்த்தரெந்தையர்
வரிநாகத்துடை யார்க்குகந்தொரு
சிவஞானப்பொரு ளூட்டுமுண்டக அழகோனே
மலைமேவித்தினை காக்குமொண்கிளி
அமுதாகத்தன வாட்டியிந்துள
மலர்மாலைக்குழ லாட்டணங்கிதன் மணவாளா
வரிகோழிக்கொடி மீக்கொளும்படி
நடமாடிச்சுரர் போற்றுதண்பொழில்
வழுவூர் நற்பதி வீற்றிருந்தருள் பெருமாளே. (௨)

## இஞ்சிகுடி.

இது திருநீடூரிலிருந்து கிழக்கே அரை மைல் துலைவில் இருக்கிறது.

தந்தன தத்தான தானதனதன
தந்தன தத்தான தானதனதன
தந்தன தத்தான தானதனதன தனதான.

793. குங்கும கற்பூர நாவியிமசல
சந்தன கத்தூரி லேபபரிமள
கொங்கைத னைக்கோலி நீடுமுகபட நகரேகை
கொண்டைத னைக்கோதி வாரிவகைவகை
துங்கமு டித்தால காலமெனவடல்
கொண்டவிடப்பார்வைகாதினெதிர்பொரும் அமுதேயாம்
அங்குல நிட்டூர மாயவிழிகொடு
வஞ்சம னத்தாசை கூறியெவரையு
மன்புடை மெய்க்கோல ராகவிரகினில் உறவாடி
அன்றள வுக்கான காசுபொருள்கவர்
மங்கையர் பொய்க்காதல் மோகவலைவிழ
லன்றியு னைப்பாடி வீடுபுகுவதும் ஒருநாளே
சங்க†த சக்ரீவ னோடுசொலவள
‡மிண்டுசெ யப்போன §வாயுசுதனொடு
சம்பவ சுக்ரீவ னாதியெழுபது வெளமாகச்
சண்டக பிச்சேனை யால்முனைகடல்
குன்றில டைத்தேறி மோசநிசிசரர்
தங்கிளை கெட்டோட ஏவுசரபதி மருகோனே

* அம்பரசிரமாலைப்புக ஏற்றவும் - ஆகாயத்துச்சியிலுள்ள சுவர்க்கத்தில் இந்திரனைக் குடியேற்றவும் மால் - இந்திரன். † தசக்ரீவன் - இராவணன். ‡மிண்டு - போர். § வாயுசுதன் - அநுமன்.

எங்குநி னைப்போர்கள் நேசசரவண
சிந்தூர கற்பூர ஆறுமுககுக
எந்தனு டைச்சாமி நாதவயலியில் உறைவேலா

இன்புறு பொற்கூட மாடநவமணி
மண்டப விஸ்தார வீதிபுடைவளர்
இஞ்சிகு டிப்பார்வ தீசருளிய பெருமாளே. (௧)

---

## திருக்கடவூர்.

இது மாயூரம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 16 மைல் தூலவில் இருக்கிறது.

தாத்தன தத்தன தானன தானன
தாத்தன தத்தன தானன தானன
தாத்தன தத்தன தானன தானன தனதான.

794. *எட்டின்வி திப்படி யேகொடு மாபுர
வீட்டில டைத்திசை வேகசை மூணதி
லேற்றிய டித்திட வேகட லோடம தெனவேகி

ஏற்குமெ னப்பொரு ளாசைபெ ணாசைகொள்
நாய்க்குநி கர்த்திரி யாபரி யாதவ
மேற்றியி ருப்பிட மேயறி யாமலும் உடல்பேணிப்

பூட்டுச ரப்பணி யேமத னுமென
ஆட்டிய சைத்திய லேகிரி நாளையில்
பூத்தம லக்குகை யேபொதி சோறென கழுகாகம்

போற்றிந மக்கிரை யாமென வேகொள
நாட்டிலொ டுக்கென வேவிழு போதினில்
பூட்டுப ணிப்பத மாமயி லாவருள் புரிவாயே

†வீட்டில டைத்‡தெரி யேயிடு பாதக
னுட்டைவி டுத்திட வேபல சூதினில்
வீழ்த்தவி திப்படி யே§குரு காவலர் வனமேபோய்

வேற்றுமை யுற்றுரு வோடியல் நாளது
பார்த்துமு டித்திட வேயொரு பாரத
மேற்புனை வித்தம காவிர மாயவன் மருகோனே

---

* எட்டின் விதிப்படி - எழுதிய எழுத்துப்படி. † வீட்டில் - அரக்கு மாளிகையில். ‡எரி - நெருப்பு. §குருகாவலர் - பாண்டவர்.

கோட்டைய ழித்தசு ரார்பதி கோவென
மூட்டியெ ரித்தப ராபர சேகர
கோத்தம ணிக்கதி ரேநிக ராகிய வடிவேலா
கூற்றும ரித்திட வேயுதை பார்வதி
யார்க்குமி னித்தபெ ணாகிய *மான்மகள்
கோட்டுமு லைக்கதி பாகட வூருறை பெருமாளே. (௧)

தானதன தானதத்த தானதன தானதத்த
தானதன தானதத்த தனதான.

795. சூலமென வோடுசர்ப்ப வாயுவைவி டாதடக்கி
தூயவொளி காணமுத்தி விதமாகச்
சூழுமிருள் பாவகத்தை வீழவழ லூடெரித்து
சோதிமணி பீடமிட்ட மடமேவி
மேலைவெளி யாயிரத்து நாலிருப ராபரத்தின்
மேவியகு ணாசலத்தி னுடன்மூழ்கி
வேலுமயில் வாகனப்ர காசமதி லேதரித்து
வீடுமது வேசிறக்க அருள்தாராய்
ஓலசுர ராழியெட்டு வாளகிரி மாயவெற்பு
மூடுருவ வேல்தொடுத்த மயில்வீரா
ஓதுகுற மான்வனத்தில் மேவியவள் சால்பிடித்து
மோமெனுப தேசவித்தெ டணைவோனே
காலனொடு மேதிமட்க வூழிபுவி மேல்கிடத்து
காலனிட மேவுசத்தி அருள்பாலா
காலமுதல் வாழ்புவிக்க தாரகர் கோபுரத்துள்
கானமயில் மேல் தரித்த பெருமாளே. (௨)

## திருவிடைக்கழி.

இது காவிரிப்பூம் பட்டினத்திற்குத் தெற்கே 2 மைல்
துலைவில் இருக்கிறது.

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான.

796. அனலப் பரிபுக் கதுணத் தயம்வைத்
தடர்பொய்க் குருதி குடில்பேண

* மான்மகள் - வள்ளிநாயகி,

அவலக் கவலைச் சவலைக் கலைகற்
றதனிற் பொருள்சற் றறியாதே
குனகித் தனகிக் கனலொத் துருகிக்
குலவிக் கலவிக் கொடியார்தம்
கொடுமைக் கடுமைக் குவளைக் கடையிற்
குலைபட் டலையக் கடவேனோ
இனைவித் தினநற் புனமுற் றகுறத்
திருவைப் புணர்பொற் புயவீரா
தெளியத் தெளியப் பவளச் சடிலச்
சிவனுக் கொருசொற் பகர்வோனே
கனகச் சிகரக் குலவெற் புருவக்
கறுவிப் பொருகைக் கதிர்வேலா
கழியைக் கிழியக் கயல்தத் துமிடைக்
கழியிற் குமரப் பெருமாளே. (௧)

---

தனத்ததனத் தனத்ததனத் தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத் தனதான.

797. இரக்குமவர்க் கிரக்கமிகுத் தளிப்பனசொப் பனத்திலுமற்
றெனக்கியலுக் கிசைக்கெதிரப் புலவோரென்
றெடுத்துமுடித் தடக்கைமுடித் திரட்டையுடுத் திலச்சினையிட்
டடைப்பையிடப் ரபுத்துவமுற் றியல்மாதர்
*குரக்குமுகத் தினைக்குழலைப் பனிப்பிறையொப் பெனப்புயலொப்
பெனக்குறுகிக் கலைக்குள்மறைத் திடுமானின்
†குழப்படியிற் சளப்படுமிப் பவக்கடலைக் கடக்கவினிக்
குறித்திருபொற் கழற்புணையைத் தருவாயே
அரக்கரடற் கடக்க அமர்க் களத்தடையப் புடைத்துலருக்
கலக்கணறக் குலக்கிரிபொட் டெழவாரி
அனைத்தும்‡வறப் புறச் சுரர்கற் பகப்புரியிற் புகக்கமலத்
தனைச்சிறையிட் டிடைக்கழியிற் பயில்வோனே
கரக்கரடக் களிற்றுமருப் புலக்கையினிற் கொழித்தமணிக்
கழைத்தரளத் தினைத்§தினையிற் குறுவாளைக்
கணிக்குறவக் குறிச்சியினிற் சிலைக்குறவர்க் கிலச்சைவரக்
கயத்தொடுகைப் பிடித்தமணப் பெருமாளே. (௨)

---

* குரக்குமுகம் - குரங்குமுகம். † குழப்படி - கலக்கம். ‡ வறப்புற - வற்றிப்போக. § தினையிற் குறுவாள் - தினைபோலக்குற்றிவிளையாடுபவள்.

தனனதத்தனத் தனனதத்தனத்
தனனதத்தனத் தன்தான.

798. பகருமுத்தமிழ்ப் பொருளுமெய்த்தவப்
பயனுமிப்படிப் பலவாழ்வும்
பழையமுத்தியிற் பதமுநட்புறப்
பரவு* கற்பகத் தருவாழ்வும்
†புகரில்புத்தியுற் றரசுபெற்றுறப்
பொலியும் அற்புதப் பெருவாழ்வும்
புலனகற்றிடப் பலவிதத்தினைப்
புகழ்பலத்தினைத் தரவேணும்
தகரிலற்றகைத் தலம்விடப்பிணைச்
சரவணத்தினிற் பயில்வோனே
தனிவனத்தினிற் புனமறத்தியைத்
தழுவுபொற்புயத் திருமார்பா
சிகரவெற்பினைப் பகிரும்வித்தகத்
திறலயிற்சுடர்க் குமரேசா
செழுமலர்ப்பொழிற் குரவமுற்றபொற்
றிருவிடைக்கழிப் பெருமாளே. (ரு)

---

தனதனன தத்தனத் தனதனன தத்தனத்
தனதனன தத்தனத் தனதான.

799. ‡படிபுனல்நெ ருப்படற் பவனம்வெளி பொய்க்கருப்
பவமுறைய வத்தைமுக் குணநீடு
பயில்பிணிகள் மச்சைசுக் கிலமுதிர மத்திமெய்ப்
பசிபடுநி ணச்சடக் குடில்பேணும்
உடலதுபொ றுத்தறக் கடைபெறுபி றப்பினுக்
குணர்வுடைய சித்தமற் றடிநாயேன்
உழலுமது கற்பலக் கழலிணையெ னக்களித்
துனது§தம ரொக்கவைத் தருள்வாயே

---

* கற்பகத்தருவாழ்வு - இந்திரபோகம். † புகரில் - குற்றமில்லாத.
‡ பிரிதிவு அப்பு வாயு தேயு ஆகாயமாகிய பஞ்சபூதம். § தமர் - தொண்டர்.

கொடியவெொரு குக்குடக் கொடியவடி விற்புனக்
கொடிபடர்பு யக்கிரிக் கதிர்வேலா
குமாசமரச்*சினக் குமரவணி யத்தன்மெய்க்
குமாமகிழ் முத்தமிழ்ப் புலவோனே
தடவிகட மத்தகத் தடவரைய ரத்தர்நத்
தடலனிச வித்தகத் துறையோனே
தருமருவு மெத்தலத் தருமருவ முத்தியைத்
தருதிருவி டைக்கழிப் பெருமாளே. (ச)

---

தனதனனத் தனதான தனதனனத் தனதான
தனதனனத் தனதான தனதான.

800. பழியுறுசட் டகமான †குடிலையெடுத் திழிவான
பகரும்வினைச் செயல்மாதர் தருமாயப்
படுகுழிபுக் கினிதேறும் வழிதடவித் தெரியாது
பழமைபிதற் றிடுலோக முழுமூடர்
உழலும்விருப் புடனோது பல‡சவலைக் கலைதேடி
யொருபயனைத் தெரியாது விழியாமுன்
உனகமலப் பதநாடி உருகியுளத் தமுதூற
உனதுதிருப் புகழோத அருள்வாயே
§தெழியுவரிச் சலராசி மொகுமொகெனப் பெருமேரு
திடுதிடெனப் பலபூதர் விதமாகத்
திமிதிமெனப் பொருசூர னெறுநெறெனப் பலதேவர்
செயசெயெனக் கொதிவேலை விடுவோனே
அழகுதரித் திடுநீப சரவணவுற் பவவேல
அடல்தருகெற் சிதநீல மயில்வீரா
அருணைதிருத் தணிநாக மலைபழநிப் பதிகோடை
அதிபவிடைக் கழிமேவு பெருமாளே. (ரு)

---

* சினக்கும் அரவு அணி அத்தன் எனப்பிரிக்க. † குடில் - ஐம்பூதக் குடிசை. ‡சவலைக்கலை - பலவாறு பிதற்றும் நூல். § தெழி - ஒலிக்கின்ற.

தனத்த தானன தனதன தனதன
தனத்த தானன தனதன தனதன
தனத்த தானன தனதன தனதன தனதான.

801. பெருக்க மாகிய நிதியினர் *வரின்மிக
நகைத்து வாமென அமளிய ருகுவிரல்
பிடித்து போயவர் துடையொடு துடைபட உறவாடிப்

பிதற்றி யேயள விடுபண மதுதம
திடத்தி லேவரு மளவுந லுரைகொடு
பிலுக்கி யேவெகு சரசமொ டணைகுவர் கனமாலாய்

முருக்கி னேரித ழமுதுப ருகுமென
உரைத்து லீலைக ளதிவித மொடுமலை
முலைக்கு ளேதுயில் கொளமயல் புரிகுவர் பொருடீரின்

முறுக்கி யேயுதை கொடுவசை யுரைதரு
மனத்து ரோகிக ளிடுதொழில் வினையற
முடுக்கி யேயுன திருகழல் மலர்தொழ அருள்தாராய்

நெருக்கி யேவரு மவுணர்கள் குலமற
உருக்கி யேமயில் முதுகினில் விசைகொடு
நிலத்தி லேசமர் பொருதவ ருயிர்பலி கொளும்வேலா

†நெகத்தி லேயயன் முடிபறி யிறைகிரி
புரத்தி லேநகை புரிபர னடியவர்
நினைப்பி லேயருள் தருசிவ னுதவிய புதல்வோனே

செருக்கு வேடுவர் தருமொரு சிறுமியை
மருக்கு லாவிய மலரணை மிசைபுணர்
திருக்கை வேல்வடி வழகிய குருபர முருகோனே

சிறக்கு மாதவ முனிவரர் மகபதி
இருக்கு வேதனு மிமையவர் பரவிய
‡திருக்கு ராவடி நிழல்தனி லுலவிய பெருமாளே. (கூ)

தனத்த தானன தனதன தனதான.

802. மருக்கு லாவிய மலரணை கொதியாதே
வளர்த்த தாய்தமர் வசையது மொழியாதே

கருக்கு லாவிய அயலவர் பழியாதே
கடப்ப மாலையை யினிவர விடவேணும்

* வரின்-வந்தால் † நெகம்-நகம். ‡ திருக்குரா-ஸ்தல விருக்ஷம்.

*தருக்கு லாவிய கொடியிடை மணவாளா
சமர்த்த னேமணி மாகத மயில்வீரா
திருக்கு ராவடி நிழல்தனில் உறைவோனே
திருக்கை வேல்வடி வழகிய பெருமாளே. (எ)

தனனதத்தன தனதன தனனதத்தன தனதன
தனனதத்தன தனதன தனதான.

803. முலைகுலுக்கிகள் கபடிகள் வடிபுழுக்கைக ளசடிகள்
முறைமசக்கிகள் திருடிகள் மதவேளூல்
மொழிபசப்பிகள் விகடிகள் அழுமனத்திகள் தகுநகை
முகமினுக்கிகள் கசடிகள் இடையேசூழ்
கலைநெகிழ்த்திக ளிளைஞர்கள் பொருள்பறித்தம ளியின்மிசை
கனியிதழ்ச்சுருள் பிளவிலை யொருபாதி
கலவியிற்றரும் வசவிகள் விழிமயக்கினில் வசமழி
கவலையற்றிட நினைதருள் புரிவாயே
அலைநெருப்பெழ வடவரை பொடிபடச்சம ணர்கள்குலம்
அணி‡கழுப்பெற நடவிய மயில்வீரா
அரனரிப்பிர மர்கள்முதல் வழிபடப்பிரி யமும்வர
அவரவர்க்கொரு பொருள்புகல் பெரியோனே
சிலை†மொழுக்கென முறிபட மிதிலையிற்சன கமனருள்
திருவினைப்புண ரரிதிரு மருகோனே
திரள்வருக்கைகள் கமுகுகள் சொரிமதுக்கத லிகள்வளர்
திருவிடைக்கழி மருவிய பெருமாளே. (அ)

## திருநள்ளாறு

இது தருமபுரத்திற்கு மேற்கே 2 மைல் துலைவில் இருக்கிறது.

தத்ததந்தன தானன தானன
தத்ததந்தன தானன தானன
தத்ததந்தன தானன தானன தனதான.

804. பச்சையொண்கிரி போலிரு மாதன
முற்றிதம்§பொறி சேர்குழல் வாளயில்
பற்றுபுண்டரி காமென எய்கயல் விழிஞான

* பொதுவாய் வள்ளி தெய்வானையைக் குறித்தது. ‡ கழுப்பெற-கழுமரத்திலேற. † மொழுக்கென-திடீரென. § பொறி-தேமல்.

பத்திவெண்டா ளாமெனும் வாணகை
 வித்ருமஞ்சிலை போல்நுத லாரிதழ்
 பத்மசெண்பக மாமனு பூதியின் அழகாளென்
றிச்சை யந்தரி பார்வதி மோகினி
 தத்தை பொன்கவி ஞலிலை போல்வயி
 றிற்பசுங்கிளி யானமி னூலிடை அபிராமி
எக்குலங்குடி லோடுல கியாவையு
 மிற்பதிந்திரு நாழிகை யாலற
 மெப்பொதும்பகிர் வாள்கும ராவென உருகேனே
கச்சையுந்திரு வாளுமி ராறுடை
 பொற்பு யங்களும் வேலுமி ராறுள
 *கட்சிவங்கம லாமுக மாறுள முருகோனே
கற்பகந்திரு நாடுயர் வாழ்வுற
 சித்தர் விஞ்சையர் நாகர்†ச பாசென
 கட்டவெங்கொடு சூர்கிளை வேற விடும்வேலா
‡நச்சுவெண்பட மீதணை வார்முகில்
 பச்சைவண்புய ஞர்கரு டாசனர்
 நற்கரந்தனு கோல்வளை நேமியர் மருகோனே
நற்புனந்தனில் வாழ்வளி நாயகி
 இச்சை கொண்டொரு §வாரண மாதொடு
 நத்திவந்துந ளாறுறை தேவர்கள் பெருமாளே. (௧)

---

## திருச்செங்காட்டங்குடி.

இது நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே 17 மைல் துலைவில் இருக்கிறது.

தந்தான தானதன தானதன தானதன
தந்தான தானதன தானதன தானதன
தந்தான தானதன தானதன தானதன தனதான.

805. ‖வங்கார மார்பிலணி தாரொடுபர் கோடசைய
 கொந்தார மாலைகுழ லாரமொடு தோள்புரள
 வண்காதி லோலைகதிர் போலவொளி வீசவிதழ் மலர்போல

---

கட்சிவம் - கண்ணுள்ளசிவமே! † சபாசென - புகழ்ந்துகொண்டாட, இது திசைச்சொல் ‡ நச்சுவெண்படமீது - நஞ்சுள்ள ஆதிசேஷன் பணுமுடிமீது. § வாரணமாது - தெய்வயானை. ‖ வங்காரம் - பொன்.

மஞ்சாடு சாபநுதல் வாளணைய வேல்விழிகள்
கொஞ்சார மோககிளி யாகநகை பேசியுற
வந்தாரை வாருமிரு நீருறவெ னுசைமய விடுமோதர்

* சங்காளர் சூதுகொலை காரர்குடி கேடர்சுழல்
சிங்கார தோளர்பண ஆசையுளர் சாதியிலர்
சண்டாளர் சீசியவர் மாயவலை யோடடியேன் உழலாமல்

சங்கோதை நாதமொடு கூடிவெகு மாயையிருள்
வெந்தோட மூளவழல் வீசவுப தேசமது
தன்காதி லோதியிரு பாதமலர் சேரவருள் புரிவாயே

சிங்கார ரூபமயில் வாகனந மோநமென
கந்தாகு மாரசிவ தேசிகந மோநமென
சிந்தூர பார்வதிசு தாகாந மோநமென † விருதோதை

‡ சிந்தான சோதிகதிர் வேலவந மோநமென
§ கங்காள வேணிகுரு வானவந மோநமென
திண்சூர ராழிமலை தூள்பட || வை வேலைவிடு முருகோனே

இங்கீத வேதபிர மாவைவிழ மோதியொரு
பெண்காத லோடுவன மேவிவளி நாயகியை
இன்பான தேனிரச மார்முலைவி டாதகர மணிமார்பா

¶ எண்டோளர் காதல்கொடு $ காதல்கறி யேபருகு
செங்காடு மேவிபிர காசமயில் மேலழகொ
டெண்காதல் மாலைமுடி ஆறுமுக வாவமரர் பெருமாளே.

---

## நாகபட்டினம்.

இது நாகபட்டினம் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே ஒரு மைல் தூலைவில் இருக்கிறது.

தானதத்த தத்ததந்த தானதத்த தத்ததந்த
தானதத்த தத்ததந்த தனதான.

806. ஓலமிட்டி ரைத்தெழுந்த வேலைவட்ட மிட்டவிந்த
ஊர்முகிற்ற ருக்களொன்றும் அவாரொன்
றாமரைப்ர சித்தரென்று மூடரைச்ச மர்த்தரென்றும்
** ஊனரைப்ர புக்களென்றும் அறியாமல்

---

* சங்கம்-சங்கமம். † விருதோதை - வெற்றித் தொனி. ‡ சிந்தான - மூவகைச் சூலமான § கங்காளவேணி - சிவபெருமான் - || வைவேல்- கூர்மைபொருந்தியவேல். ¶ எண்டோளர் - சிவபெருமான். $ காதல்கறி- காதலன் கறி, அதாவது பிள்ளைக்கறி. **ஊனர் - தரித்திரர்.

கோலமுத்த மிழ்ப்பபந்த மாலருக்கு ரைத்தனந்த
கோடியிச்சை செப்பிவம்பில் உழல்நாயேன்
கோபமற்று *மற்றுமந்த மோகமற்று னைப்பணிந்து
கூடுதற்கு முத்தியென்று தருவாயே
வாலைதுர்க்கை சத்தியம்பி லோககத்தர் பித்தர்பங்கில்
மாதுபெற்ற டுத்துகந்த சிறியோனே
† வாரிபொட்டெ ழுக்ரவுஞ்சம் வீழவெட்‡டி யிற்றுரந்த
வாகைமற்பு யப்ரசண்ட மயில்வீரா
ஞாலவட்ட முற்றவுண்டு நாகமெத்தை யிற்றுயின்ற
§ நாரணற்க ருட்சுரந்த மருகோனே
நாலுதிக்கும் வெற்றிகொண்ட சூரபத்ம னைக்களைந்த
நாகபட்டி னத்தமர்ந்த பெருமாளே. (௧)

---

தானதந்ததன தந்ததன தந்ததன
தானதந்ததன தந்ததன தந்ததன
தானதந்ததன தந்ததன தந்ததன தந்ததான.

807. மார்புரம்பினளி னங்கிரியெ னுந்தனமொ
டாரமும்படித ரம்பொறியு டன்பணிகள்
மாலையொண்பவள மும்பரிம ளங்கலவை தொங்கலாட
வாள்சரங்கணிய னுங்குழைத ளம்பளக
பாரதொங்கலணி பெண்கள்வத னங்கள்மதி
வாகையென்பவித ழுஞ்சலச மென்பகள சங்குமோக
சாரமஞ்சள்புய முங்கிளிமு கங்களுகிர்
பாளிதம்புனைது வண்டிசையொ டின்பரச
தாழியென்பவல்கு லுந்துளிர ரம்பைதுடை ரம்பைமாதர்
தாள்சதங்கைகொலு சுங்குலசி லம்புமணி
யாடல்கொண்டமட மங்கையரு டன்கலவி
தாகமுண்டுழல்கி னுங்கமழு றுங்கழல்ம றந்திடேனே

* மற்றும் - இன்னும். † வாரிபொட்டெழ - சமுத்திரம் வற்ற. ‡ அயில் துரந்த - வேல்எவிய. § விஷ்ணுவுக்குக் கிருபையான மருகோனே.

வீரவெண்டையமு ழுங்கவரி சங்குமுரசோடுபொன்பறைத தும்பவிதி யுஞ்சுரரும் வேதவிஞ்சையரு டன்குமுற வெந்துகவ டர்ந்தசூரன்

வீறடங்கமுகி லுங்கதற நஞ்சுடைய ஆயிரம்பகடு கொண்டவுர கன்குவடு மேகொளுந்தபல்சிரந்தனையெறிந்துநட னங்கொள்வேலா

நாரசிங்கவடி வங்கொடுப்ர சண்டிரணியோனடுங்கநட னஞ்செய்துவி லங்கைவலி ராவணன்குலம டங்கசிலை கொண்டகார் தந்தமூல

ஞானமங்கையமு தஞ்சொரூபி யென்றனொருதாயணங்குகுற மங்கையைம ணந்தபுய நாகையம்பதிய மர்ந்துவளர் நம்பர்புகழ் தம்பிரானே. (௨)

---

தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா தனதான.

808. விழு*தா தெனவே கருதா துடலே வினைசேர் வதுவே புரிபாவி

விருதா வினிலே †உலகா யதமே விடவே மடவார் மயலாலே

அழுதா கெடவே அவமா கிடநா ளடைவே கழியா துணையோதி

அலர்தா ளடியே னுறவாய் மருவோ ரழியா வரமே தருவாயே

தொழுதார் வினைவே ரடியோ டறவே துகள்தீர் பரமே தருதேவா

சுரர்பூ பதியே கருணா லயனே சுகிர்தா அடியார் பெருவாழ்வே

‡எழுதா மறைமா முடிவே வடிவே லிறைவா எனையா ளுடையோனே

இறைவா எதுவா வதுதா தனையே னிணைநா கையில்வாழ் பெருமாளே. (௩)

---

* தாது-சுக்கிலம். † உலகாயதம்-தேகமே ஆத்மா போகமே மோக்ஷம் என்னும் மதம். ‡ எழுதாமறை-ஈசன் திருநாவிலிருந் தெழுந்த வேதம்.

இது நாகபட்டணத்திலிருந்து வடக்கே அரைமைல் துலைவில் இருக்கிறது.

தன்னதத்த தனத்த தானன தன்னதத்த தனத்த தானன
தன்னதத்த தனத்த தானன தனதான.

809. கன்னலொத்த மொழிச்சொல் வேசியர் வன்மனத்தை யுருக்கு லீலையர்
கண்வெருட்டி விழித்த பார்வையர் இதமாகக்
கையிலுற்ற பொருட்கள் யாவையும் வையெனக்கை விரிக்கும் வீணியர்
கைகள்பற்றி யிழுத்து மார்முலை தனில்வீழப்
பின்னிவிட்ட சடைக்கு ளேமலர் தன்னைவைத்து முடிப்பை நீயவி
ழென்னுமற்ப குணத்த ராசையில் உழலாமல்
பெய்யுமுத்த மிழிற்ற யாபர என்னமுத்தர் துதிக்க வேமகிழ்
பிஞ்ஞகர்க்கு ரைசெப்பு நாயக அருள்தாராய்
வன்னியொத்த படைக்க லாதிய துன்னிகைக்கொ ளரக்கர் மாமுடி
மண்ணிலற்று விழச்செய் மாதவன் மருகோனே
மன்னுபைப்ப ணியுற்ற நீள்வட மென்னவிட்டு முடுக்கு சூரனை
மல்லுடற்று முருட்டு மார்பற அடைவாகச்
சென்னிபற்றி யறுத்த கூரிய மின்னிழைத்த திறத்த வேலவ
செய்யபொற்பு னவெற்பு மானணை மணிமார்பா
செம்மனத்தர் மிகுத்த மாதவர் நன்மைபெற்ற உளத்தி லேமலர்
செல்வசிக்கல் நகர்க்குள் மேவிய பெருமாளே. (௧)

---

தனதன தத்தத் தந்தான தானன
தனதன தத்தத் தந்தான தானன
தனதன தத்தத் தந்தான தானன தனதான.

810. புலவரை ரட்சிக் குந்தாரு வேமது
ரிதகுண வெற்பொக் குப்பூவை மார்முலை
பொருபுய திக்கெட் டும்போயு லாவிய புகழாளா
பொருவரு நட்புப் பண்பான வாய்மையி
லுலகிலு னக்கொப் புண்டோவெ னநல
பொருள்கள்நி ரைத்துச் செம்பாகமாகிய கவிபாடி
விலையில்த மிழ்ச்சொற் குன்போலு தாரிக
ளெவரென மெத்தக் கொண்டாடி வாழ்வெனும்
வெறிகொளு லுத்தர்க் கென்பாடு கூறிடு மிடிதீர

மிகவறு மைப்பட் டுன்பாத தாமரை
சரணமெ னப்பற் றும்பேதை யேன்மிசை
விழியருள் வைத்துக் குன்றுத வாழ்வையும் அருள்வாயே
இலகிய வெட்சிச் செந்தாம மார்புய
சிலைநுதல் மைக்கட் சிந்தூர வாணுதல்
இமையம கட்குச் சந்தான மாகிய முருகோனே
இளையகொ டிச்சிக் கும்பாக சாதன
னுதவுமொ ருத்திக் குஞ்சீல நாயக
எழிலியெ ழிற்பற் றுங்காய மாயவன் மருகோனே
அலர்தரு புட்பத் துண்டாகும் வாசனை
திசைதொறு முப்பத் தெண்காதம் வீசிய
அணிபொழி லுக்குச் சஞ்சார மாமளி இசையாலே
அழகிய சிக்கற் சிங்கார வேலவ
சமரிடை மெத்தப் பொங்காரமாய்வரும்
அசுரரை வெட்டிச் சங்கார மாடிய பெருமாளே. (௨)

---

## வலிவலம்.

இது நாட்டியத்தான்குடியிலிருந்து கிழக்கே 3 மைல் துலைவிலிருக்கிறது.

தனத்த தானன தனதன தனதன
தனத்த தானன தனதன தனதன
தனத்த தானன தனதன தனதன தனதான.

811. தொடுத்த நாள்முதல் மருவிய இளைஞனும்
இருக்க வேறொரு பெயர்தம திடமது
* துவட்சி யேபெறி லவருடன் மருவிடு பொதுமாதர்
துவக்கி லேயடி படநறு மலரயன்
விதித்த தோதக வினையுறு தகவது
துறக்க நீறிட அரகர வெனவுளம் அமையாதே
அடுத்த பேர்மனை துணைவியர் தமர்பொருள்
பெருத்த வாழ்விது சதமென மகிழ்வுறு
மசட்ட † னுதுலன் அவமது தவிரநின் அடியாரோ
டமர்த்தி மாமலர் கொடுவழி படவெனை
இருத்தி யேபர கதிபெற மயில்மிசை
‡ அரத்த மாமணி யணிகழ லிணைதொழ அருள்தாராய்

---

* துவட்சி - வறுமை. † ஆதுலன் - தரித்திரன். ‡ அரத்த - செம்மையாய.

எடுத்த வேல்பிழை புகலரி தெனவெதிர்
விடுத்த ராவணன் மணிமுடி துணிபட
எதிர்த்து மோர்கணை விடுமொரு காதலன் மருகோனே
எருக்கு மாலிகை குவளையி னறுமலர்
கடுக்கை மாலிகை பகிரதி சிறுபிறை
யெலுப்பு மாலிகை புனைசடி லவனருள் புதல்வோனே
வடுத்த மாவென நிலைபெறு நிருதனை
அடக்க வேழ்கட லெழுவரை துகளெழ
வடித்த வேல்விடு காதல *ஜெயஜெய புயவேளே
வனத்தில் வாழ்குற மகள்முலை தழுவிய
கடப்ப மாலிகை யணிபுய வமரர்கள்
மதித்த சேவக வலிவல நகருறை பெருமாளே. (க)

## எட்டிகுடி.

இது திருநெல்லிக்காவிலிருந்து தென்கிழக்கே 7 மைல்துலைவிலிருக்கிறது.

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான.

812. உரமுற் றிருசெப் பெனவட் டமுமொத்
திளகிப் புளகித் திடமாயே
உடைசுற் றுமிடைச் சமையொக் கவடுத்
தமிதக் கெறுவத் துடன்வீறு
தரமொத் துபயக் களபத் தளமிக்
கவனத் தருணத் தனமீதே
சருவிச் சருவித் தழுவித் தழுவித்
தவமற் கவிடுத் துழல்வேனோ
அரிபுத் திரசித் தசவக் கடவுட்
கருமைத் திருமைத் துனவேளே
அடல்குக் குடநற் கொடிகட் டியனர்த்
தசுரப் படையைப் பொருவோனே
பரிவிற் †றவருக் கருள்வைத் தருள்வித்
தகமுத் தமிழைப் பகர்வோனே
பழனத் தொளிர்முத் தணியெட் டிகுடிப்
பதியிற் குமரப் பெருமாளே. (க)

* ம்ருகமத என்றும் பாடம். † தவர்-அகத்தியர்.

தாந்ததந்தன தானதனத்தந் தனதான.

813. ஓங்குமைம்புல னோடநினைத்தின் பயர்வேனை
ஓம்பெரும்ப்ரண வாதியுரைத்தென் றனையாள்வாய்

வாங்கிவெங்கணை சூர்குலக்கொம் புகடாவி
வாங்கிநின்றன வேவிநுகைக்கும் குமரேசா

மூங்கிலம்புய வாசமணக்குஞ் சரிமானும்
மூண்டடைபங்குற மாதுமணக்குந் திருமார்பா

காங்கையங்கறு மாசின்மனத்தன் பர்கள்வாழ்வே
*காஞ்சிரங்குடி ஆறுமுகத்தெம் பெருமாளே. (௨)

---

தனதத்த தனதத்த தனதத்த தனதத்த
தனதத்த தனதத்த தனதான.

814. கடலொத்த விடமொத்த கணையொத்த பிணையொத்த
கயலொத்த மலரொத்த விழிமாதர்

கனசெப்பு களினத்து முலைவெற்பை நிகர்செப்பு
கதிர்முத்து முலைதைக்க அகலாதே

மிடலுற்ற கலவிக்கு ளுளநச்சி வளமற்று
மிடிபட்டு மடிபட்டு மனமாழ்கி

மெலிவுற்ற தமியற்கு னிருபத்ம சரணத்தை
மிகநட்பொ டருள்தற்கு வருவாயே

தடையற்ற கணைவிட்டு மணிவச்ர முடிபெற்ற
தலைபத்து டையதுட்டன் உயிர்போகச்

†சலசத்து மயிலுற்ற சிறைவிட்டு வருவெற்றி
தருசக்ர தரனுக்கு மருகோனே

திடமுற்ற கனகப்பொ துவில்நட்பு டனடித்த
சிவனுக்கு விழியொத்த புதல்வோனே

செபநத்து மிழுமுத்து வயலுக்குள் நிறைபெற்ற
திகழெட்டி குடியுற்ற பெருமாளே. (௩)

---

* காஞ்சிரங்குடி என்பது-எட்டிகுடி. †சலசத்துமயில்-சீதாபிராட்டி.

தத்தன தத்தன தானா தானா
தத்தன தத்தன தானா தானா
தத்தன தத்தன தானா தானா தனதான.

815. மைக்குழ லொத்தவை நீலோ மாலோ
அக்கணி யீணைக்கிணை சேலோ வேலோ
மற்றவர் சொற்றெளி பாலோ பாகோ வடிதேனோ

வத்திர மெய்ச்சசி தானோ நானோ
குத்துமு லைக்கிள நீரோ மேரோ
வைப்பிடை டைக்கிணை நூலோ *மேலோ வெனமாதர்

†தக்கவு றுப்பினுள் மாலே மேலாய்
லச்சைய றப்புணர் வாதே காதே
சைச்சையெ னத்திரி நாயே னோபா தலையாதே

தற்பொறி வைத்தருள் பாராய் தாராய்
தற்சம யத்தக லாவே னாதா
தத்துவ யிற்பரி மீதே நீதான் வருவாயே

முக்கணர் மெச்சிய பாலா சீலா
சித்தசன் மைத்துன வேளே தோளார்
மொய்த்தம ணத்தது மாயோன் மாயோன் மருகோனே

முத்தமிழ் வித்வவி னோதா கீதா
மற்றவ ரொப்பில ரூபா தீபா
முத்திகொ டுத்தடி யார்மேல் மாமால் உறுவோனே

இக்குவி ளைத்தவி ராலூர் சேலூர்
செய்ப்பழ நிப்பதி யூரா வாரூர்
மிக்க விடைக்கழி வேளூர் தாரூர் வயலூரா

எச்சுரு திக்குளு நீயே தாயே
சுத்தவி றற்றிறல் வீரா தீரா
எட்டிகு டிப்பதி வேலா மேலோர் பெருமாளே. (௪)

---

*மேலோ-ஆகாயமோ †தக்க உறப்பு-சொல்லப்படாத மற்றை அவயவம்.

## வேதாரணியம்.

இது திருத்துறைப்பூண்டியிலிருந்து கிழக்கே 23 மைல் தூலைவிலிருக்கிறது.

தானன தத்தத் தந்தன தந்தன தனதான.

816. சூழும்வி னைக்கட் டுன்பநெ டும்பிணி கழிகாமஞ்
சோரமி தற்குச் சிந்தைநி னைந்துறு துணையாதோ
ஏழைய னித்துக் கங்களு டன்தினம் உழல்வேனோ
ஏதம கற்றிச் செம்பத சிந்தனை தருவாயே
ஆழிய டைத்துத் *தங்கையி லங்கையை எழுநாளே
ஆண்மைசெ லுத்திக் கொண்டக ரும்புயல் மருகோனே
வேழமு கற்குத் தம்பியெ னுந்திரு முருகோனே
வேதவ னத்திற் சங்கரர் தந்தருள் பெருமாளே. (க)

தானன தத்தன தந்த தானன தத்தன தந்த
தானன தத்தன தந்த தனதான.

817. சேலையு டுத்துந டந்து மாலைய விழ்த்துமு டிந்து
சீதவ ரிக்குழல் கிண்டி யளிமூசத்
தேனிலி னிக்கமொ ழிந்து காமுக ரைச்சிறை கொண்டு
தேசம னைத்தையும் வென்ற விழிமானார்
மாலைம யக்கில்வி ழுந்து காமக லைக்குளு ளைந்து
மாலிலகப்பட நொந்து திரிவேனோ
வாலவி க்கிர ணங்க ளாமென வுற்றப தங்கள்
மாயைதொ லைத்திட உன்றன் அருள்தாராய்
பாலை வனத்தில்ந டந்து நீலவ ரக்கியை வென்று
பாரம லைக்குள கன்று கணையாலேழ்
பாரம ரத்திரள மங்க வாலியு ரத்தையி டந்து
பால்வரு ணத்தலை வன்சொல் வழியாலே
வேலைய டைத்துவ ரங்கள் சாடிய ரக்கரி லங்கை
வீடண ருக்கருள் கொண்டல் மருகோனே
மேவுதி ருத்தணி செந்தில் நீள்பழ நிக்குளு கந்து
வேதவ னத்தில மர்ந்த பெருமாளே. (உ)

---

* எழுநாளே ஆண்மை செலுத்தி லங்கையைக் கைக்கொண்டபுயல்.

818. நாலினை யொத்தம ருங்குல் தேரினை யொத்தநி தம்பம்
நூபுர மொய்த்தப தங்கள் இவையாலும்
நூறிசை பெற்றப தங்கொள் மேருவை யொத்தத னங்கள்
*நூல்வல்ம லர்ப்பொரு †துண்டம் அவையாலும்
சேலினை யொத்திடு கண்க ளாலும மைத்திடு பெண்கள்
தேனிதழ் பற்றுமொ ரின்ப வலைமூழ்கிச்
சீலம னைத்துமொ ழிந்து காமவி தத்தி லழுந்தி
தேறுத வத்தை யிழந்து திரிவேனோ
வாலவி ளப்பிறை தும்பை ஆறுக டுக்கை கரந்தை
வாசுகி யைப்புனை நம்பர் தருசேயே
மாவலி யைச்சிறை மண்ட ஓரடி யொட்டிய ளந்து
வாளிப ரப்பி இலங்கை அரசானோன்
மேல்முடி பத்தும ரிந்து தோளிரு பத்தும ரிந்து
வீரமி குத்தமு குந்தன் மருகோனே
மேவுதி ருத்தணி செந்தில் நீள்பழ நிக்குளு கந்து
வேதவ னத்தில மர்ந்த பெருமாளே. (௩)

---

## திருவாரூர்.

இது திருவாரூர் ஸ்டேஷனிலிருந்து மேற்கே ஒருமைல் துலைவிலிருக்கிறது.

தானா தானா தானா தானா தானா தானத் தனதான.

819. கூசா தேபா ரேசா தேமால் கூறு நூல்கற் றுளம்வேறு
கோடா தேவேல் பாடா தேமால் கூர்கூ தாளத் தொடைதோளில்
வீசா தேபேர் பேசா தேசீர் வேதா தீதக் கழல்மீதே
வீழா தேபோய் நாயேன் வாணாள் வீணே போகத் தகுமோதான்
நேசா வானோ ரீசா வாமா நீபா கானப் புனமானை
நேர்வா யார்வாய் சூர்வாய் சார்வாய் நீள்கார் சூழ்கற் பகசாலத்
தேசா தீனா தீனா ரீசா சீரா ரூரிற் பெருவாழ்வே
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப் பெருமாளே. (௧)

---

820. கூர்வாய் நாராய் வாராய் போனார் கூடா ரேசற் றலவாவி
கோதா னேன்மா தாமா ருனாள் கோளே கேள்மற் றிளவாடை
ஈர்வாள் போலே மேலே வீசா ஏறு வேறிட் டதுதீயின்
ஈயா வாழ்வோர் பேரே பாடா ஈடே றூரிற் கெடலாமோ

---

*நூல் வல்மலர்-தாமரை. † துண்டம்-முகம்.

சூர்வா ழாதே மாறு தேவாழ் சூழ்வா னோர்கட் கருள்கூரும்
தோலா வேலா வீறு ரூர்வாழ் சோதீ பாகத் துமையூடே
சேர்வாய் நீதி வானோர் வீரா சேரா ரூரைச் சுடுவார்தம்
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப் பெருமாளே. (௨)

821. பாலோ தேனோ பாகோ வானோர் பாரா வாரத் தமுதேயோ
பாரோர் சீரோ வேளேர் வாழ்வோ * பானோவான் முத் தெனநீளத்
தாலோ தாலே லோபா டாதே தாய்மார் நேசத் துனுசாரம்
தாரா தேபே ரீயா தேபே சாதே யேசத் தருமோதான்
†ஆலோல் கேளா மேலோர் நாண்மா லானு தேனற் புனமேபோய்
ஆயாள் தாள்மேல் வீழா வாழா ஆளா வேளைப் புகுவோனே
சேலோ டேசே ராரால் சாலால் சீரா ரூரிற் பெருவாழ்வே
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப் பெருமாளே. (௩)

தானனத் தனதான தானனத் தனதான.

822. நீதானெத் தனையாலும் நீடூழிக் குயையாகி
மாதானத் தனமாக மானானக் கழல்தாராய்
வேதாமைத் துனவேளே வீசாசற் குணசீலா
ஆதாரத் தொளியானே ஆரூரிற் பெருமாளே. (௪)

தனதன தனன தனதன தனன
தானன தந்த தனதான.

823. மகரம துகெட இருகுமி ழுடைசி
வாரச ரங்க ளெனநீளும்
மதர்விழி வலைகொ டுலகினில் மனிதர்
வாணாள டங்க வருவார்தம்
பகர்தரு மொழியில் ம்ருகமத களப
பாடீர கும்ப மிசைவாவிப்
படிமன துனது பரிபுர சரண
பாதார விந்த நினையாதோ
நகமுக சமுக நிருதரு மடிய
நானாவி லங்கல் பொடியாக
நதிபதி கதற ஒருகணை தெரியு
நாரய ணன்றன் மருகோனே

*பானோ - சூரியனோ. † ஆலோல் - ஆலோலம், பறவையோட்டு மொலி.

அகனக கனக சிவதல முழுது
மாராம பந்தி யவைதோறும்

அரியளி*விததி முறைமுறை கருது
மாரூர மர்ந்த பெருமாளே. (௫)

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான.

824. காமு முளரியின் மலர்முக மதிகுழல்
கனம தெனுமொழி கனிகதிர் முகைநகை
கலக மிடுவிழி கடலென விடமென மனதூடே

கருதி யனநடை கொடியிடை யியல்மயில்
கமழு மகிலுட னிளகிய ம்ருகமத
களப புளகித கிரியினு மயல்கொடு திரிவேனும்

இரவு பகலற இகலற மலமற
இயலு மயலற விழியினி ரிழிவா
இதய முருகியெ யொரு†குள பதமுற மடலூடே

எழுத அரியவள் குறமக ளிருதன
கிரியில் முழுகிய விளையவ னெனுமுரை
இனிமை பெறுவது மிருபத மடைவது மொருநாளே

சுரபி மகவுயிர் படவரண் மனையிடை
மனுவி னெறிமணி யசைவுற விசைமிகு
துயரில் செவியினி லடிபட வினவுமுன் அதிதீது

துணிவி விதுபிழை பெரிதென வருமனு
வுருகி யரகர சிவசிவ பெறுமதொர்
சுரபி யலமர விழிபுனல் பெருகிட நடுவாகப்

பரவி யதனது துயர்கொடு நடவிய
பழுதின் மதலையை யுடலிரு பிளவொடு
படிய ரதமதை நடவிட மொழிபவன் அருளாரூர்

படியி லறுமுக சிவசுத கணபதி
யிளைய குமாநி ருபபதி சரவண
பரவை முறையிட அயில்கொடு நடவிய பெருமாளே. (௬)

* விததி-கூட்டம். † குள பதம்-சர்க்கரைப் பாகுபதம்.

## பெரியமடம்.

இது திருவாரூருக்குத் தென்கிழக்கே 3 மைல் தூரத்தில் இருக்கிறது.

தனதனன தானதன தத்தன தாத்த
தனதனன தானதன தத்தன தாத்த
தனதனன தானதன தத்தன தாத்த தனதான.

825. கலகவிழி மாமகளிர் கைக்குளே யாய்ப்போய்
கனவுமத னூல்பலப டித்தவா வேட்கை
கனதனமு மார்புமுற விச்சையா லார்த்து *கழுநீரார்

கமழ்நறைச வாதுபுழு கைத்துழாய் வார்த்து
நிலவாசு காடறிய கட்டில்போ டாச்செய்
கருமமறி யாதுசிறு புத்தியால் வாழ்க்கை கருதாதே

தலமடைசு சாளரமு கப்பிலே காத்து
நிறைபவுசு வாழ்வாசு சத்யமே வாய்த்த
தெனவுருகியோடியொரு†சற்றுளேவார்த்தை தடுமாறித்

தழுவியனு ராகமும்வி ளைத்துமா யாக்கை
தனையுமரு நாளையும வத்திலே போக்கு
தலையறிவி லேனைநெறி நிற்கநீ தீட்சை தரவேணும்

அலகில்தமி ழாலுயர்ச மர்த்தனே போற்றி
அருணைநகர் கோபுரவி ருப்பனே போற்றி
அடல்மயில்ந டாவியவு ரத்தனே போற்றி அவதான

அறுமுகசு வாமியெனு மத்தனே போற்றி
அகிலதல மோடிவரு நிர்த்தனே போற்றி
அருணகிரி நாதவெனு மப்பனே போற்றி அசுரேசர்

பெலமடிய வேல்விடுக ரத்தனே போற்றி
காதலக பாலிகுரு வித்தனே போற்றி
பெரியகுற மாதணைபு யத்தனேபோற்றி பெருவாழ்வாம்

பிரமனறி யாவிரத தட்சண மூர்த்தி
பரசமய கோளரித வத்தினால் வாய்த்த
பெரியமட மேவியசு கத்தனே ‡யோக்யர் பெருமாளே. ()

---

* கழுநீர்-ஆம்பல். † சற்றுளே-சிறிதுநேரத்திலே. ‡யோக்யர்-யோகியர்.

தனதனன தானதான தனதனன தானதான
தனதனன தானதான தனதான

826. ஒருவழிப டாதுமாயை யிருவினைவி டாதுநாளு
முழலுமனு ராகமோக அநுபோகம்
உடலுமுயிர் தானுமாயு *முணர்விலொரு காலிராத
உளமு†நெகிழ் வாகுமாறு சிறியேனுக்
கிரவுபகல் போனஞான பரமசிவ யோகதீர
மௌனமொழியும் வீசுபாச கனகோப
எமபடரை மோதுமோன உரையிலுப தேசவாளை
எனதுபகை தீரநீயும் அருள்வாயே
அரிவையொரு பாகமான அருணகிரி நாதர்பூசை
அடைவுதவ றாதுபேணும் அறிவாளன்
அமணர்குல காலனாகும் அரியதவ ராஜராஜன்
அவனிபுகழ் சோமநாதன் மடமேவும்
முருகபொரு சூரர்சேனை முறியவட மேருவீழ
‡முகரசல ராசிவேக முனிவோனே
மொழியுமடி யார்கள்கோடி குறைகருதி னாலும்வேறு
முனியவறி யாததேவர் பெருமாளே. (௨)

---

## திருவம்பர்.

இது திருப்பூந்தோட்டத்திலிருந்து கிழக்கே 2 மைல் தூலையிலிருக்கிறது.

தானதந்தனந் தானதந்ததன
தானதந்தனந் தானதந்ததன
தானதந்தனந் தானதந்ததன தந்ததான.

827. சோதிமந்திரம் போதகம்பரவு
ஞானகம்பரந் தேயிருந்தவெளி
தோடலர்ந்தபொன் பூவிருந்தவிட முங்கொளாமல்
சூதுபந்தயம் பேசியஞ்சுவகை
சாதிவிண்பரிந் தோடுகண்டர்மிகு
தோகதம்பரித் தாடுசிந்துபரி கந்துபாயும்
வீதிமண்டலம் பூணமர்ந்துகழி
கோலமண்டிநின் றாடியின்பவகை
வேணுமென்றுகண் சோர வைம்புலனொ டுங்குபோதில்

* உணர்விலொரு காலிராத உளம் - நொடிப்பொழுதேனும் அறிவோடு ஒத்துவாராதமனம். † நெகிழ்வாகுமாறு - உருகும்படி. ‡ முகரம் - சங்கு.

வேதியன்புரிந் தேடுகண்டளவி*
லோடிவெஞ்சுடுங் காடணைந்துசுட
வீழ்கிவெந் † துகுந் தீடுமிந்தவிடர் என்றுபோமோ
ஆதிமண்டலஞ் சேரவும்பாம
சோமமண்டலங் கூடவும்பதும
வாளன்மண்டலஞ் சாரவுஞ்சுழிப டர்ந்ததோகை
ஆழிமண்டலந் தாவியண்டமுத
லானமண்டலந் தேடியென் § றதொமு
கானமண்டலஞ் சேடனங்கணயில் கொண்டுலாவி
சூதர்மண்டலந் தூளெழுந்துபொடி
யாகிவிண்பறந் தோடமண்டியொரு
சூரியன்திரண் டோடகண்டுநகை கொண்டவேலா
‖ சோடைகொண்டுளங் கானமங்கைமய
லாடிவிந்திரன் தேவர்வந்துதொழ
சோழமண்டலஞ் சாருமம்பர்வளர் தம்பிரானே.

---

## திருமாகாளம்.

இது திருவன்னியூர் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 2 மைல் துலைவிலிருக்கிறது.

தானான தானதன தானதன தானதன
தானான தானதன தானதன தானதன
தானான தானதன தானதன தானதன தனதான.

828. காதோடு தோடுகலி யாடவிழி வாள்சுழல
கோலாக லாரமுகை மார்புதைய பூணகல
காரோடு கூடளக பாரமல ரோடலைய அணைமீதே
காலோடு காலிகலி யாடபரி நூபுரமொ
டேகாச மானவுடை வீசியிடை நூல்துவள
காவீர மானவித ழூறல்தர நேசமென மிடறோசை
நாதான கீதகுயில் போலவல்குல் மால்புரள
மார்போடு தோள்கரமொ டாடிமிக நாணழிய
நாணுவி னோதமுற மாதரொடு கூடிமயல் படுவேனை
நானொரு நீயெவனெ னுமலென தாவிகவர்
சீபாத மேகவலை யாயுமுன வேநிதமும்
நாதாகு மாரமுரு காவெனவு மோதவருள் புரிவாயே

---

* வேதியன்புரிந் தேடுகண்டளவில் - பிரமனது தலையெழுத்து முடிந்த உடன். † உகுந்திடும் என்பது சந்தத்திற்காக 'உகுந்தீடும்' என நீண்டது. ‡ ஆதி மண்டலம் - ஆதித்த மண்டலம். § அதொமுகானமண்டலம் - அதோமுகமானமண்டலம், பாதாள லோகம். ‖ சோடை - சடைவு.

பாதாள சேடனுட லாயிரப ணுமகுட
மாமேரொ டேழுகட லோதமலை சூரருடல்
பாழாக தூளிவிணி லேறபுவி வாழவிடு சுடர்வேலா

பாலாழி மீதரவின் மேல்திருவொ டேயமளி
சேர்நீல ரூபன்வலி ராவணகு ழாமிரிய
*பாரேவை யேவியமு ராரியைவர் தோழனரி மருகோனே

மாதாபு ராரிசுக வாரிபரை நாரியுமை
ஆகாச ரூபியபி ராமிவல மேவுசிவன்
மாடேறி யாடுமொரு நாதன்மகிழ் போதமருள் குருநாதா

† வானோர்க ளீசன்மயி லோடுகுற மாதுமண
வாளாகு காகுமர மாமயிலின் மீதுதிரு
மாகாள மாநகரில் மாலொடடி யார்பரவு பெருமாளே.

---

## கூந்தலூர்.

இது திருமாகாளத்திலிருந்து வடக்கே 3 மைல்தூலவிலிருக்கிறது.

தனதன தனதன தாந்த தானன
தனதன தனதன தாந்த தானன
தனதன தனதன தாந்த தானன தனதான.

829. தரையினில் வெகுவழி சாந்த மூடனை
வெறியனை நிறைபொறைவேண்டி டாமத
சடலனை மகிமைகள் தாழ்ந்த வீணனை மிகுகேள்வி

தவநெறி தனைவிடு தாண்டு காலியை
யவமதி யதனில்பொ லாங்கு தீமைசெய்
சமடனை வலியவ சாங்க மாகிய தமியேனை

விசைசெறி குழலியர் வீம்பு நாரியர்
மதிமுக வனிதையர் வாஞ்சை மோகியர்
விழிவலை மகளிரொ டாங்கு கூடிய வினையேனை

வெகுமல ரதுகொடு வேண்டி யாகிலு
மொருமல ரிலைகொடு மோர்ந்து யானுனை
விதமுறு பரிவொடு வீழ்ந்து தாடொழ அருள்வாயே

---

* பாரேவை - அடுக்கடுக்கான பாணங்களை. † வானோர்களீசன் மயில் - தேவர்களுக்கதிபதியாம் இந்திரனுடைய மகளாகிய தெய்வயானை.

ஒருபது சிரமிசை போந்த ராவண
 னிருபது புயமுட னேந்து*மேதியு
 மொருகணை தனிலற வாங்கு மாயவன் மருகோனே
உனதடி யவர்புக ழாய்ந்த நூலின
 ரமரர்கள் முனிவர்க †ளீந்த பாலகர்
 உயர்கதி பெறவரு ளோங்கு மாமயில் உறைவோனே
குரைகழல் பணிவொடு ‡கூம்பி டார்பொரு
 களமிசை யறமது தீர்ந்த சூரர்கள்
 குலமுழு தனைவரு மாய்ந்து தூளெழ முனிவோனே
கொடுவிட மதுதனை வாங்கி யேதிரு
 மிடறினி லிருவென வேந்து மீசுரர்
 குருபர னெனவரு கூந்த லூருறை பெருமாளே. (க)

## திருவாஞ்சியம்.

இது கூந்தலூருக்கு வடக்கே 12 மைல் தூலைவில் இருக்கிறது.

தனதாந்த தத்ததனதன தனதாந்த தத்ததனதன
தனதாந்த தத்ததனதன தனதான.

830 §இபமாந்தர் சக்ரபதிசெறி படையாண்டு சக்ரவரிசைக
 ளிடவாழ்ந்து திக்குவிஜயமண் ணரசாகி
இருமாந்துவட்டவணைமிசை விரிசார்ந்து வெற்றிமலர்தொடை
 எழிலார்ந்த பட்டிவகைபரி மளலேபந்
தபனுங்க ரத்நவணிகல னிவைசேர்ந்த விச்சுவடிவது
 தமர்சூழ்ந்து மிக்கவுயிர்நழு வியபோது
தழல்தாங்கொளுத்தியிடவொரு பிடிசாம்பல்பட்டதறிகிலர்
 தனவாஞ்சை மிக்குனடிதொழ நினையாரே
உபசாந்த சித்தகுருகுல பவபாண்ட வர்க்குவாதன்மை
 யுருவோன்ப்ர சித்த நெடியவன் ரிஷிகேசன்
உலகீன்ற பச்சையுமையணன் வடவேங்க டத்திலுறைபவ
 னுயர்சார்ங்க சக்ரகரதலன் மருகோனே
த்ரிபுராந்த கற்குவரசுத ரதிகாந்தன் மைத்துனமுருக
 திறல்பூண்ட சுப்ரமணியசண் முகவேலா
திரைபாய்ந்த பத்மதடவய லியில்வேந்த முத்தியருள்தரு
 திருவாஞ்சி யத்திலமரர்கள் பெருமாளே.

---

* ஏதி - வாள். † ஈந்த பாலகர் - கொடுத்து ரட்சிப்போர். ‡ கூம்பிடார்-கும்பிடார். § இபமாந்தர்-யானைமீது அம்பாரிவைத்தேறுபவர்.

இது திலதைப்பதியிலிருந்து மேற்கே 2 மைல் தூலைவிலிருக்கிறது.

தனனு தனனு தனனு தனனு தனனு தனனு தனதான.

831. எருவாய் கருவாய் தனிலேயுருவாயிதுவேபயிராய் விளைவாகி
இவர்போயவராயவர்போயிவரா யிதுவேதொடர்பாய் வெறிபோல
ஒருதா யிருதாய் பலகோ டியதா யுடனே யவமா யழியாதே
ஒருகால் முருகா பரமா குமரா உயிர்கா வெனவோ தருள்தாராய்
முருகாவெனவோர்தரமோதடியார் முடிமேலிருதாள் புனைவோனே
முனிவோ ரமரோர் முறையோ வெனவே மூதசு ரர்மேல் விடும்வேலா
திருமால் பிரமா *அறியா தவர்சீர் †சிறுவா திருமால் மருகோனே
செழுமா மதில்சே ரழகார் பொழில்சூழ் திருவீ ழியில்வாழ் பெருமாளே.

---

## திலதைப்பதி.

இது திருவீழிமிழலையிலிருந்து கிழக்கே 2 மைல் தூலைவில் இருக்கிறது.

தனனத் தனனு தனதான தனனத் தனனு தனதான.

832. ‡இறையெத்தனையோ அதுதானும் இலை §யிட்டுணலேய் தருகாலம்
அறையிற் பெரிதா மலமாயை அலையப்படுமா றினியாதோ
||மறையத் தனைமா சிறைசாலை வழியுய்த் துயர்வா னுறுதேவர்
சிறையைத் தவிரா விடும்வேலா திலகைப் பதிவாழ் பெருமாளே. ()

---

தனதத்த தத்ததந்த தனதத்த தத்ததந்த
தனதத்த தத்ததந்த தனதான.

833. மகரக்கு ழைக்குளுந்து நயனக்க டைக்கிலங்கு
விசியச்ச ரத்தியைந்த குறியாலே
வடவெற்ப தைத்துரந்து களபக்கு டத்தைவென்று
மதர்விற்ப ணைத்தெழுந்த முலைமீதே
உகமெய்ப்ப தைத்துநெஞ்சம் விரகக்க டற்பொதிந்த
உலைபட்ட லர்ச்சரங்கள் நலியாமல்
உலகப்பு கழ்ப்புலம்பு கலியற்று ணர்ச்சிகொண்டு
னுரிமைப்பு கழ்ப்பகர்ந்து திரிவேனோ
புகர்கைக்க ரிப்பொதிந்த முளரிக்கு ளத்திழிந்த
பொழுதிற்¶க ரத்தொடார்ந்து பிடிநாளில்
பொருமித்தி கைத்துநின்று வாதற்க டைக்கலங்கள்
புகுதக்க ணத்துவந்து கையிலாரும்

---

* அறியாதவர் - சிவபெருமான். † சிறுவர் - புத்திரர். ‡ இறை - சாக்காடு, எனவே பிறப்பையும் குறிப்பா லுணர்த்திற்று. § இட்டுணல் - ஆட்கொண்டனுபவித்தல். || மறை அத்தனை-பிரமனை. ¶ கர - கரா, முதலை,

*திகிரிப்ப டைத்துறந்த வரதற்கு டற்பிறந்த
சிவைதற்ப ரைக்கிசைந்த புதல்வோனே
சிவபத்தர் முத்தரும்பர் தவசித்தர் சித்தமொன்று
திலதைப்ப திக்குகந்த பெருமாளே. (உ)

---

## திருக்குடவாயில்.

இது கோரடாச்சேரி ஸ்டேஷனிலிருந்து வடக்கே 8 மைல் தூலேவில் இருக்கிறது.

தனனு தத்தன தனனு தத்தன
தனனு தத்தன தனதான.

834. † அயிலார் மைக்கடு விழியார் மட்டைகள்
அயலார் நத்திடு விலேமாதர்
அணைமீ திற்றுயில் பொழுதே ‡தெட்டிக
ளவரே வற்கொரு தமியேனும்
மயலா கித்திரி வதுதா னற்றிட
மலமா யைக்குண மதுமாற
மறையால் மிக்கருள் பெறவே யற்புத
மதுமா லேப்பதம் அருள்வாயே
கயிலா யப்பதி யுடையா ருக்கொரு
பொருளே கட்டளே இடுவோனே
கடலா டிப்புகு முது§சூர் பொட்டெழ
கதிர்வேல் விட்டிடு திறலோனே
குயிலா லித்திடு பொழிலே சுற்றிய
குடவா யிற்பதி உறைவோனே
குறமா தைப்புணர் சதுரா வித்தக
குறையா மெய்த்தவர் பெருமாளே. (க)

---

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தனதான.

835. சுருதி யாயிய லாயியல் நீடிய
தொகுதி யாய்வெகு வாய்வெகு பாஷைகொள்
தொடர்பு மாயடி யாய்நடு வாய்மிகு துணையாய்மேல்

---

திகிரி - சக்ராயுதம் உறு - வந்த. † அயில் - வேல். ‡ தெட்டிகள் பொருள் பறிப்போர். § முதுசூர் - அசுரர் தலைவனுகிய சூரபதுமன்.

துறவு மாயற மாய்நெறி யாய்மிகு
விரிவு மாய்வினை வாயருள் ஞானிகள்
சுகமு மாய்முகி லாய்மழை யாயெழு சுடர்வீசும்

பருதி யாய்மதி யாய்நிறை தாரகை
பலவு மாய்வெளி யாயொளி யாயெழு
பகலி ராவிலை யாய்நிலை யாய்மிகு பரமாகும்

*பரம மாயையி னேர்மையை யாவரு
மறியொ ணாதகை நீகுரு வாயிது
பகரு மாறுசெய் தாய்†முதல் நாளுறு பயனோதான்

கருது மாறிரு தோள்மயில் வேலிவை
கருதொ ணாவகை யோரர சாய்வரு
கவுணி யோர்குல ‡வேதிய னுமை கனபாரக்

களப பூண்முலை யூறிய பாலுணு
மதலை யாய்மிகு பாடலின் மீறிய
கவிஞ னாய்வினை யாடி§பொய் வாதிகள் கழுவேறக்

|| குருதி யாறெழ வீதியெ லாமலர்
நிறைவ தாய்விட ¶ நீறிடவேசெய்து
கொடிய மாறன்செய் கூனிமி ராமுனை குலையாவான்

குடிபு கீரென மாமது ராபுரி
இயலை யாரண வூரென நேர்செய்து
குடசை மாநகர் வாழ்வுற மேவிய பெருமாளே. (உ)

---

## திருவாவடுதுறை.

இது நரசிங்கம் பேட்டையிலிருந்து கிழக்கே 1 மைல் தூலவிலிருக்கிறது.

தத்ததனதான தனத்தனத்தத்ததத்த
தத்ததனதான தனத்தனத்தத்ததத்த
தத்ததனதான தனத்தனத்தத்ததத்த தனதான

836 சொற்பிழைவராம லுனைக்கனக்கத்துதித்து
$ நிற்பதுவராத பவக்கடத்திற்சுழற்றி
சுக்கிலவதார வழிக்கிணக்கிக்களித்து விலைமாதர்

---

* பரமமாயையினேர்மையை - சத்துமின்றி அசத்துமின்றியுள்ளமாயா தன்மையை. † முதல் நாள் - ஜென்மமெடுப்பதற்குமுன். ‡ வேதியனும்-திருஞானசம்பந்தமூர்த்தியாய். § பொய்வாதிகள் சமணர்கள். || குருதி - இரத்தம். ¶ நீறிடவே - விபூதியிடவே. $ நிற்பது - பிறப்பிறப்பற்றிருப்பது.

துப்பிறையான இதழ்க்கனிக்குக்கருத்தை
வைத்துமயலாகி மனத்தைவிட்டுக்கடுத்த
துற்சன *மகாத கரைப்புவிக் †குட்டழைத்த நிதிமேவு

கற்பகவிராச னெனப்படைக்குப்பெருத்த
அர்ச்சுனநராதி யெனக்கவிக்குட்பதித்து
கற்றறிவினுவை யெடுத்தடுத்துப்படித்து மிகையாகக்

கத்திடுமெயாக வலிக்கலிப்பைத்தொலைத்து
கைப்பொருளிலாமை யெனைக்கலக்கப்படுத்து
கற்பனைவிடாம லலைத்திருக்கச்சலிக்க விடலாமோ

எற்பணியாவை மிதித்துவெட்டித்துவைத்து
பற்றியகாவை யிழுத்தூக்கக்கிழித்து
எட்கரிபடாம விதத்தபுத்திக்கதிக்கு நிலையோதி

எத்திய ‡பசாசின் முலைக்குடத்தைக்குடித்து
முற்றுயிரிலாம லடக்கிவிட்டுச்சிரித்த
§இற்கணையிராமர் சுகித்திருக்கச்சினத்த திறல்வீரா

வெற்பனமதாணி நிறுத்துருக்கிச்சமைத்து
வர்க்கமணியாக வடித்திருத்தித்தகட்டின்
மெய்க்குலமதாக மலைக்கமுத்தைப்பதித்து வெகுகோடி

விட்கதிரதாக நிகர்த்தொளிக்கச்சிவத்த
ரத்தினபடாக மயிற்பரிக்குத்தரித்து
மிக்கதிருவாவ டுதுறைக்குட்செழித்த பெருமாளே.

---

தான தானன தானன தந்தன தான தானன தானன தந்தன
தான தானன தானன தந்தன தனதான.

837. சோதி மாமதி போல்முக முங்கிளர் மேருலாவிய மாமுலையுங்கொடு
தூர வேவரு மாடவர் தங்கள்முன் எதிராயே
சோலி பேசிமு னளிவி ணங்கிய மாதர் போலிரு தோளில்வி ழுந்தொரு
சூதி னூல்வர வேமனை கொண்டவ ரொடுமேவி
மோதி யேகனி வாயத ரந்தரு நாளி லேபொருள் சூறைகள் கொண்டுபின்
மோன மாயவ மேசில சண்டைக ளுடனேசி

---

* மகாதகரை - மகா காதகரை. † குட்டழைத்த - கூள்தழைத்த.
‡ பசாசு - கம்சனு லனுப்பப்பட்ட பூதகி. § இற்கணை - இடம் பெற்றகணை.

மோச மேதரு தோதக வம்பியர் மீதி லேமய லாகிம னந்தளர்
மோட னாகிய பாதக னுங்கதி பெறுவேனோ
ஆதி யேயெனும் வானவர் தம்பகை யானசூரனை மோதிய ரும்பொடி
யாக வேமயி லேறிமு னிந்திடு நெடுவேலா
ஆயர் வாழ்பதி தோறுமு கந்தர லேறி யேயுறி மீதனை யுங்கள
வாக வேகொடு போதநு கர்ந்தவன் மருகோனே
வாதி னல்வரு காளியை வென்றிடு மாதி நாயகர் வீறுத யங்குகை
வாரி ராசனு மேபணி யுந்திரு நடபாதர்
வாச மாமல ராளொடு செந்திரு மார்பில் வீறிய மாயவ னும்பணி
* மாசி லாமணி ஈசர்ம கிழ்ந்தருள் பெருமாளே. (உ)

---

## திருக்குரங்காடுதுறை.

இது வைத்தீசுவரன் கோவிலிலிருந்து மேற்கே 5 மைல் தூலவிலிருக்கிறது.

தனந்தான தனத்தனனத் தனந்தான தனத்தனனத்
தனந்தான தனத்தனனத் தனதான.

838. அலங்கார முடிக்கிரணத் திரண்டாறு முகத்தழகிற்
கசைந்தாடு குழைக்கவசத் திரடோளும்
அலந்தாம மணித்திரளைப் புரண்டாட நிரைத்தகரத்
தணிந்தாழி வளைக்கடகச் சுடர்வேலும்
சிலம்போடு மணிச்சுருதிச் சலங்கோசை மிகுத்ததிரச்
சிவந்தேறி மணத்தமலர்ப் புனைபாதம்
திமிந்தோதி திமித்திமிதித் தனந்தான தனத்தனனத்
தினந்தோறு நடிப்பதுமற் புகல்வேனோ
இலங்கேசர் வனத்துள்வனக் † குரங்கேவி யழற்புகையிட்
டிளந்தாது மலர்த்திருவைச் சிறை ‡ மீளும்
இளங்காள முகிற்கடுமைச் சரங்கோடு கரத்திலெடுத்
திருங்கான நடக்குமவர்க் கினியோனே
குலங்கோடு படைத்தசுரப் பெருஞ்சேனை யழிக்கமுனைக்
கொடுந்தாரை வெயிற்கயிலைத் தொடும்வீரா
கொழுங்காவின் மலர்ப்பொழிலிற் கரும்பாலை புணர்க்குமிசைக்
குரங்காடு துறைக்குமரப் பெருமாளே. (க)

---

* மாசிலாமணியீசர் என்பது திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும் சுவாமியின் பெயர். † குரங்கேவி குரங்கை அனுப்பி, ‡ மீளும்-மீட்கும்.

தனத்தனந் தானதனதன தனத்தனந் தானதனதன
தனத்தனந் தானதனதன தனதான.

839. குறித்தநெஞ் சாசைவிரகிகள் நவிற்றுசங் கீதமிடறிகள்
குதித்தரங் கேறுநடனிகள் எவரோடும்
குறைப்படுங் காதல்குணகிகள் * அரைப்பணங் கூறுவிலையினர்
கொலைக்கொடும் பார்வைநயனிகள் நகரேகை
பொறித்தசெங் காரமுகையினர் வடுப்படுங் கோவையிதழிகள்
பொருட்டினந் தேடுகபடிகள் தவர்சோரப்
† புரித்திடும் பாவசொருபிகள் உருக்குசம் போகசரசிகள்
புணர்ச்சிகொண் டாடுமருளது தவிர்வேனோ
நெறித்திருண் ‡ டாறுபதமலர் மணத்தபைங் கோதைவவைவகை
நெகிழ்க்குமஞ் சோதிவனசரி மணவாளா
நெருக்குமிந்த்ராதியமரர்கள் வளப்பெருஞ் சேனையுடையவர்
நினைக்குமென் போலுமடியவர் பெருவாழ்வே
செறித்தமந் தாரை மகிழ்புனை மிகுத்ததண் சோலைவகைவகை
தியக்கியம் பேறுநதியது பலவாறும்
திரைக்கரங் கோலிநவமணி கொழித்திடுஞ் சாரல்வயலணி
திருக்குரங் காடுதுறையுறை பெருமாளே. (௨)

---

## திருப்பந்தணைநல்லூர்.

இது தற்றலத்திலிருந்து வடக்கே 9 மைல் துலைவில் இருக்கிறது.

தனதந்தன தனதந்தன தனதந்தன தான
தனதந்தன தனதந்தன தனதந்தன தான
தனதந்தன தனதந்தன தனதந்தன தான தனதான.

840. இதசந்தன புழுகுஞ்சில மணமுந்தக வீசி
யணையுந்தன கிரிகொண்டினை யழகும்பொறி சோர
இருளுங்குழல் மழையென்பந வரசங்கொளுமோகக் குயில்போலே
இடையுங்கொடி மதனன்தனை யிடுகுந்தள பார
இலையுஞ்சுழி துடைரம்பையு மமுதந்தட மான
இயலங்கடி தடமும்பொழி மதவிஞ்சைகள் பேசித் தெருமீதே
பதபங்கய மணையும்பரி புரமங்கொலி வீச
நடைகொண்டிடு மயிலென்பன கலையுஞ்சுழ லாட
பரிசும்பல மொழியுஞ்சில கிளிகொஞ்சுகை போலப் பரிவாகிப்

* அரைப்பணங்கூறு விலையினர் - வயிற்றுப் பிழைப்புக்காகத் தங்களை விலைகூறித் திரிகின்றவர். † புரித்திடும் - புரிந்திடும். ‡ ஆறுபதம் - வண்டு.

பணமுண்டெனஅவலம்படு நினைவுண்டிடை சோர
இதுகண்டவர் மயல்கொண்டிட மனமுஞ்செயல் மாற
பகலுஞ்சிலவிரவுந்துயில்சிலவஞ்சகர்மாயைத் துயர்தீராய்

திதிதிந்திமி தனதந்தன டுடுடுண்டுடு பேரி
டகுடங்குகு டிகுடிங்குகு படகந்துடி வீணை
செகணஞ்செகவெனவும்பறைதிசையெங்கினுமோதக் கொடுசூர்

சிரமுங்கர வுடலும்பரி யிரதங்கரி யாளி
நிணமுங்குடல் தசையுங்கட லெனசெம்புன லோட
சிலசெம்புகள் கழுகுஞ்சிறு நரியுங்கொடியாடப் பொரும்வேலா

மதவெங்கய முரி*கொண்டவர் மழுவுங்கலை பாணி
இடமன்பொடு வளருஞ்சிவை புகழ்சுந்தரி யாதி
வளருந்தழ லொளிர்சம்பவி பரைவிண்டிளதோகைத் தருசேயே

வதனஞ்சசி யமுதம்பொழி முகைநன்குற மாதொ
டிசையுஞ்சுரர் தருமங்கையொ டிதயங்களி கூர
வருபந்தனை நகர்வந்துறை விமலன்குரு நாதப் பெருமாளே. ()

---

தனதன தந்த தனதன தந்த தனதன தந்த தனதான.

841. இருவினை யஞ்ச வருவினை கெஞ்ச இருள்பிணி துஞ்ச மலமாய
எனதிடர் மங்க உனதருள் பொங்கவிசைகொடு துங்க புகழ்கூறித்

திருமுக சுந்த்ர முருகக டம்ப சிவசுத கந்த குகவேலா
சிவசிவ வென்று தெளிவுறு நெஞ்சு திகழநடஞ்செய் கழல்தாராய்

மருதொடு கஞ்ச னுயிர்பலி கொண்டு மகிழரி விண்டு மருகோனே
வதைபுரி கின்ற நிசிசரர் குன்ற வலம்வரு செய்பொன் மயில்வீரா

அருகுறு மங்கை யொடுவிடை யுந்து மமலனு கந்த முருகோனே
அருள்செறிபந்த ணையிலிருமங்கை அமளிநலங்கொள் பெருமாளே.

---

தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன தனதான.

842. †எகினி னம்பழி நாடக மாடிகள்
மயிலெ னுஞ்செய லா‡ரகி நேர்§குறி
இசையி டுங்குர லார்கட ளுளிகள் வெகுமோகம்

* உரி-உரித்ததோல். † எகின்-அன்னம். ‡ அகி-பாம்பு. § குறி-அல்குற்படம்.

எனவி ழுந்திட வார்முகை மேல்துகி
லலைய வுந்திரி வாரெவ ராயினு
மிளகு கண்சுழல் வார்விலை வேசியர் வலைவீசும்

அகித வஞ்சக பாவனை யால்மயல்
கொடுவி ழுந்திட ராகமு நோய்பிணி
யதிக முங்கொடு நாயடி யேனினி உழலாமல்

அமுத மந்திர ஞானொப தேசமு
மருளி யன்புற வேமுரு காவென
அருள்பு குந்திட வே*கழ லார்கழல் அருள்வாயே

ககன விஞ்சையர் கோவென வேகுவ
டவுணர் சிந்திட வேகடல் தீவுகள்
கமற வெந்தழல் வேல்விடு சேவக முருகோனே

கரிநெ டும்புலி தோலுடை யாரெனை
யடிமை கொண்டசு வாமிச தாசிவ
கடவு ளெந்தையர் பாகம்வி டாவுமை அருள்பாலா

செகமு மண்டமு மோருரு வாய்நிறை
நெடிய அம்புயல் மேனிய னாரி
திருவு றைந்துள மார்பக னார்திரு மருகோனே

தினைவ னந்தனில் வாழ்வளி நாயகி
வளர்த னம்புதை மார்பழ காமிகு
திலக பந்தணை மாநகர் மேவிய பெருமாளே. (௩)

---

தந்தன தனத்த தந்தன தனத்த
தந்தன தனத்த தனதான.

843. கும்பமு நிகர்த்த கொங்கையை வளர்த்த
கொஞ்சுகி ளியொத்த மொழிமாதர்

குங்கும பணிக்குள் வண்புழு குவிட்ட
கொந்தள குவைத்த மடவார்பால்

வம்புகள் விளைத்து † நண்புகள் கொடுத்து
மங்கிந கரத்தில் மெலியாமல்

---

* கழல் - ஆடவாணியும் பாதப்பூண். † நண்பு - சிநேகம்.

வண்கயி லைச்சுற்றி வந்திடு பதத்தை
வந்தனை செயுத்தி தருவாயே
*பம்புந தியுற்ற பங்கொரு சமர்த்தி
பண்டுள தவத்தில் அருள்சேயே
பைம்புய லுடுத்த தண்டலை மிகுத்த
பந்தணை நகர்க்குள் உறைவோனே
†சம்புநி ழலுக்குள் வந்தவ தரித்த
சங்கரர் தமக்கும் இறையோனே
‡சங்கணி கரத்த ரும்பர்ப யமுற்ற
சஞ்சல மறுத்த பெருமாளே. (௪)

---

தந்ததன தந்தனந் தனதனத்
தந்ததன தந்தனந் தனதனத்
தந்ததன தந்தனந் தனதனத் தனதான.

844. கெண்டைகள்பொ ருங்கண்மங் கையர்மலர்க்
கொண்டைகள்கு லுங்கநின் றருகினிற்
கெஞ்சுபலு டன்குழைத் தமளியிற் கொடுபோய்வண்
கெந்தபொடி யும்புனைந்§தரவணைத்
தின்பகல விகள்தருந் தொழிலடுக்
கின்றவறி விலனுறுந் துயரறப் ப்ரபைவீசும்
தண்டைகள்க லின்கலின் கலினெனக்
கிண்கிணிகி ணின்கிணின் கிணினெனத்
தண்கொலுசு டன்சிலம் பசையவுட் பரிவாகிச்
சந்ததமும் வந்திரும் பரிமளப்
பங்கயப தங்களென் கொடுவினைச்
சஞ்சலம லங்கெடும் படியருட் புரிவாயே
தொண்டர்கள்ச ரண்சரண் சரணெனக்
கொம்புகள்கு குங்குகுங் குகுமெனத்
துந்திமிதி மிந்திமிந் திமினெனக் குறமோசை
சுந்தரம ணஞ்செய்யுஞ் சவுரியக்
கந்தகுற வஞ்சிதங் கருவனத்
துங்கமலை யும்புரந் தமரருக் கிடர்கூரும்

---

* பம்புநதி - ஆரவாரிக்கின்ற கங்காநதி. † சம்புநிழல் - நாவல்மரத்து நிழல். ‡ சங்கணி கரத்தர் - விஷ்ணு. § அரவணைத்து - ஆதரித்து.

*பண்டர்கள் புயங்களும் பொடிபடக்
கண்டவப்ர சண்டகுஞ் சரிமெழிற்
பைந்தரு வனம்புரந் தகமெயிற் புடைசூழும்

பந்திவரு மந்திசெண் பகமகிற்
சந்துசெறி கொன்றைதுன் றியவனப்
பந்தணையில் வந்திடுஞ் சரவணப் பெருமாளே. (ரு)

தானதந்ததன தானதந்ததன
தானதந்ததன தானதந்ததன
தானதந்ததன தானதந்ததன தந்ததான.

845. தேனிருந்தவித ழார்பளிங்குநகை
யார்குளிர்ந்தமொழி யார்சரங்கள்விழி
சேர்சிறந்தமுக வாரிளம்பிறைய தன்புருவர்

தேனமர்ந்தகுழ லார்†களங்கமுகி
னார்புயங்‡கழையி னார்தனங்குவடு
சேர்சிவந்தவடி வார்துவண்டவிடை §புண்டரீயர்

சூனியங்கொள்செய லார்||ரம்பைதுடை
யார்சரண்கமல நேரிளம்பருவ
தோகைசந்தமணி வாருடன்கலவி இன்பமூடே

சோகமுண்டுவினை யாடினுங்கமல
பாதமும்புயமி ராறுமிந்துளபல்
தோடலங்கலணி மார்பமும்பரிவு ளங்கொள்வேனே

ஓநமந்தசிவ ரூபியஞ்சுமுக
நீலிகண்டிகலி யாணிவிந்துவொளி
ஓசைதங்குமபி ராமியம்பிகைப யந்தவேளே

ஓலமென்றவுணர் சேனைமங்கையர்கள்
சேறுடன்குருதி யோடவெண்டிசையும்
ஓதுகெந்தருவர் பாடநின்றநட னங்கொள்வேலா

ஏனல்மங்கைசசி ஞானரம்பையென
தாயிசந்த்ரமுக பாவைவஞ்சிகுற
மாதுடன்பர்தரு மானணைந்தழகி லங்குமார்பா

ஏர்கரந்தையறு கோடுகொன்றைமதி
ஆறணிந்தசடை யார்விளங்குமெழி
லீறில்பந்தணை நூரமர்ந்துவளர் தம்பிரானே (சு)

* பண்டர்கள்-கீழ்மக்களாகிய அசுரர்கள். † களம்-கழுத்து. ‡ கழை-மூங்கில். § புண்டரீயர்-தளிர்ந்துள்ள கொடியிடையார். || அரம்பை-வாழை.

தனதந் தத்தன தனந்த தானன
தனதந் தத்தன தனந்த தானன
தனதந் தத்தன தனந்த தானன தனதான.

846. மதியஞ் சத்திரு நிறைந்த மாமுக
மயிலஞ் சக்கிளி யினங்க ளாமென
மதுரஞ் செப்பிய மடந்தை மேனகை ரதிபோலே

மருவும் பொற்குட மெழுந்த மாமுலை
வளர்வஞ் சிக்கொடி நடந்த வாறென
வருதுங் கக்*கட லணங்கு போல்பவர் தெருவூடே

நிதமிக் தப்படி இருந்து †வாறவர்
பொருதங் கப்‡பணி கலந்து போய்வா
நெறிதங் கிட்டவர் வசங்க ளாமென உழலாதே

நிதிபொங் கப்பல தவங்க ளாலனி
மொழியும் புத்திகள் தெரிந்து நானுனை
நிகர்சங் கத்தமிழ் சொரிந்து பாடவும் அருள்தாராய்

நதிமிஞ் சச்சடை விரிந்த நாயக
னுமையன் பிற்செயு மிகுந்த பூசனை
நலமென் றுட்குளிர் சிவன்ப ராபரன் அருள்பாலா

நவகங் கைக்கிணை பகர்ந்த மா§மணி
நதிபங் கிற்குல வு||கந்து காபுரி
நகர்பொங் கித்தழை யவந்து வாழ்வுறு முருகோனே

கெதிதங் கத்தரு கணங்கள் வானவ
¶ரரிகஞ் சத்தவர் முகுந்தர் $நாவலர்
கிளைபொங் கக்கிருபை புரிந்து வாழ்கென அருள்நாதா

கெருவம் பற்றிகல் விளைந்த சூரொடு
தளமஞ் சப்பொரு தெழுந்து தீயுகள்
கிரவுஞ் சக்கிரி வகிர்ந்த வேலுள பெருமாளே. (எ)

---

* கடலணங்குபோல்பவர் - இலக்குமியைப்போன்ற அழகுள்ளவர். †வாறவர் - வருகிறவர் என்பதன் மரூஉ. ‡பணி - பண்ணி. § மணி நதி-மண்ணியாறு. || கந்துகாபுரி - பந்தணைநல்லூர். கந்துகம்-பந்து. ¶ அரி-இந்திரன். $சிறப்புப்பற்றி நாவலர்களையும் தெய்வங்களோடு ஒப்பிட்டனர்.

## திருப்பனந்தாள்.

இது ஆடுதுறை ஸ்டேஷனிலிருந்து வடக்கே 6 மைல் துலைவிலிருக்கிறது.

தந்தா னத்தன தந்தா னத்தன
தந்தா னத்தன தனதான.

847. கொந்தார் மைக்குழ லிந்தார் சர்க்கரை
யென்றே செப்பிய மொழிமாதர்
கொங்கார் முத்துவ டந்தா னிட்டத
னந்தா னித்தரை மலைபோலே
வந்தே சுற்றிவ ளைந்தா லற்பம
னந்தா னிப்படி உழலாமல்
மங்கா நற்பொரு ளிந்தா வற்புத
மென்றே யிப்படி அருள்வாயே
இந்தோ டக்கதிர் கண்டோ டக்கட
மண்டா நற்றவர் குடியோட
எங்கே யக்கிரி எங்கே யிக்கிரி
யென்றே திக்கென வருசூரைப்
பந்தா டித்தலை விண்டோ டக்களம்
வந்தோ ரைச்சில ரணகாளி
பங்கா கத்தரு கந்தா மிக்கப
னந்தா ளுற்றருள் பெருமாளே. (க)

---

## திருவிடைமருதூர்.

இது திருவிடைமருதூரிலிருந்து வடக்கே ½ மைல் துலைவில் இருக்கிறது.

தனதனன தனதனன தனதனன தனதனன
தான தானனா தான தானனா தனதன தனதான.

848. அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெரியதொரு
ஆக மாகியோர் பால ரூபமாய்
அருமதலை குதலைமொழி தனிலுருகி யவருடைய
ஆயி தாதையார் மாய மோகமாய்
அருமையினி லருமையிட மொளுமொளென உடல்வளர
ஆளு லாசமாய் வாலரூபமாய் அவரொரு பெரியோராய்
அழகுபெற நடையடைய கிறுதுபடு மொழிபழகி
ஆவி யாயவோர் தேவிமாருமாய்
விழுசுவரை யரிவையர்கள் படுகுழியை நிலைமையென
வீடு வாசலாய் மாட கூடமாய்

அணுவளவு தவிடுமிக பிதிரவிட மனமிறுகி
ஆசை யாளராய் ஊசி வாசியாய் அவியுறு சுடர்போலே

வெறுமிடிய னொருதவசி யமுதுபடை யெனுமளவில்
மேலை வீடுகேள் கீழை வீடுகேள்
திடுதிடென நுழைவதன்முன் எதிர்முடுகி யவர்களொடு
சீறி *ஞாளிபோல் ஏறி வீழ்வதாய்
விரகினொடு வருபொருள்கள் சுவறியிட மொழியுமொரு
வீணி யார்சொலே மேலதாயிட விதிதனை நினையாதே

மினுகுமினு கெனுமுடல மறமுறுகி நெகிழ்வுறவும்
வீணர் சேவையே பூணு பாவியாய்
மறுமையுள தெனுமவரை விடும்விழலை யதனின்வரு
வார்கள் போகுவார் காணு மோவென
விடுதுறவு பெரியவரை மறையவரை வெடுவெடென
மேள மேசொலாய் ஆளி வாயராய் மிடையுற வருநாளில்

வறுமைகளு முடுகிவர உறுபொருளு நழுவசில
வாத மூதுகா மாலை சோகைநோய்
பெருவயிறு வயிறுவலி படுவன்வர இருவிழிகள்
பீளை சாடிட வீளை மேலிட
வழவழென உமிழுமது கொழுகொழென ஒழுகிவிழ
வாடி யூனெலாம் நாடி பேதமாய் †மனையவள் மனம்வேறாய்

மறுகமனை யுறுமவர்கள் நணுகுநணு கெனுமளவில்
மாதர் சீயென வாலர் சீயென
கனவுதனி லிரதமொடு குதிரைவர நெடியசுடு
காடு வாவென வீடு போவென
வலதழிய விரகழிய உரைகுழறி விழிசொருகி
வாயு மேலிட ஆவி போகுநாள் மனிதர்கள் பலபேச

இறுதியதொ டுறுதியென உறவின்முறை கதறியழ
ஏழை மாதராள் மோதி மேல்விழ
எனதுடைமை யெனதடிமை யெனுமறிவு சிறிதுமற
‡ஈமொ லேலென வாயை யாவென
இடுகுபறை சிறுபறைகள் திமிலையொடு தவிலறைய
§ஈம தேசமே பேய்கள் சூழ்வதாய் ||எரிதனி விடும்வாழ்வே

* ஞாளி-குக்கல். † மனையவள்-பெண்சாதி. ‡ ஈமொ லேலென-ஈக்கள் மொல்லென்று மொய்க்க. § ஈமதேசம்-மயானபூமி. || எரி-நெருப்பு,

இணையடிகள் பாவுமுன தடியவர்கள் பெறுவதுவும்
ஏசி டார்களோ பாச நாசனே
இருவினைமு மலமுமற *இறவியொடு பிறவியற
ஏக போகமாய் நீயு நானுமாய்
இறுகும்வகை பரமசுக மதனையரு ளிடைமருதில்
ஏக நாயகா லோக நாயகா இமையவர் பெருமாளே. (க)

தனன தனதனன தான தானதன
தனன தனதனன தான தானதன
தனன தனதனன தான தானதன தந்ததான.

849. இலகு †குழைகிழிய வூடுபோயுலவி
யடர வருமதன னூல ளாவியெதி
ரிளைஞ ருயிர்கவர ஆசைநேர்வலைபொ திந்த‡நீலம்
இனிமை கரைபுரள வாகு லாவுசரி
செறிவு கலகலென வாசம் வீசுகுழ
லிருளின் முகநிலவு கூர §மாணுடைய கன்றுபோக
மலையு மிதழ்பருகி வேடை தீரவுட
லிறுக இறுகியனு ராகபோகமிக
வளரு மிளகுதன பார மீதினில்மு யங்குவேனை
மதுர கவியடைவு பாடி வீடறிவு
முதிய அரியதமி ழோசை யாகவொளி
வசன முடையவழி பாடு சேருமருள் தந்திடாதோ
கலக அசுரர்கிளை மாள மேருகிரி
தவிடு படவுதிர வோல வாரியலை
கதற வரியாவம் வாய்வி டாபசித ணிந்தபோக
கலப மயிலின்மிசை யேறி வேதநெறி
பரவு மமரர்குடி யேற நாளும்வினை
கடிய கொடியவினை வீழ வேலைவிட வந்தவாழ்வே
அலகை யுடனடம தாடு தாதைசெவி
நிறைய மவுனவுரை யாடு நீபவெழி
லடவி தனிலுறையும் வேடர் பேதையைம ணந்தகோவே
‖அமணர் கழுவில்வினை யாட வாதுபடை
கருது குமரகுரு நாத நீதியுள
தருளு மிடைமருதில் மேவு மாமுனிவர் தம்பிரானே. (உ)

* இறவி - இறப்பு. † குழை - காது. ‡ நீலம் - குவளைப்புட்பமொத்த கண்கள். § மாணுடை - மதிக்கத்தக்க உடை. ‖ அமணர் - சமணர்.

தனனதன தனனதன தந்தனந் தந்தனந்
தனனதன தனனதன தந்தனந் தந்தனந்
தனனதன தனனதன தந்தனந் தந்தனந் தந்ததான

850. படியையளவி டுநெடிய கொண்டலுஞ் சண்டனும்
தமரசது மறையமரர் சங்கமும் *சம்புவும்
பரவரிய நிருபன்விர கன்சுடுஞ் சம்பனன் செம்பொன்மேனிப்

பரமனெழில் புனையுமர வங்களுங் கங்கையுந்
திருவளரு முளரியொடு திங்களுங் கொன்றையும்
பரியகுமி ழறுகுகன தும்பையுஞ்செம்பையுந் துன்றுமூலச்

சடைமுடியி லணியுநல சங்கரன் கும்பிடுங்
குமரனறு முகவன்மது ரந்தருஞ் செஞ்சொலன்
சரவணையில் வருமுதலி கொந்தகன் கந்தனென் றுய்ந்துபாடித்

தணியவொலி புகலும்வித மொன்றிலுஞ் சென்றிலன்
பகிரவொரு தினையளவு பண்புகொண் டண்டிலன்
தவநெறியி லொழுகிவழி பண்படுங் †கங்கணஞ் சிந்தியாதோ

கடுகுபொடி தவிடுபட மந்திரந் தந்திரம்
பயில்வரு ‡நிருதருட லம்பிளந் தம்பரங்
கதறிவெகு §குருதிநதிபொங்கிடுஞ்சம்ப்ரமங் கண்டுசேரக்

கழுகுநரி கொடிகருட னங்கெழுந் தெங்குநின்
றலகைபல திமிலைகொடு தந்தனந் தந்தனந்
கருதியிசை பொசியுநசை கண்டுகண் டின்புறுந் துங்கவேலா

அடல்புனையு மிடைமருதில் வந்திணங் குங்குணம்
பெரியகுரு பரகுமர ‖சிந்துரஞ் சென்றடங்
கடவிதனி லுறை¶குமரி சந்திலங்குந்தனந் தங்குமார்பா

அருணமணி வெயிலிலகு தண்டையம் பங்கயம்
கருணைபொழி வனகழலி லந்தமுந் தம்பமென்
றழகுபெற நெறிவருடி யண்டருந்தொண்டுறுந் தம்பிரானே. ()

---

* சம்பு - பிரமன். † கங்கணம் - உயர்வு. ‡ நிருதருடலம் - இராச்சதர் சரீரம். § குருதி - இரத்தம். ‖ சிந்துரம் - யானை. ¶ குமரி வள்ளிநாயகி.

தனதனதன தானதானன தனதனதன தானதானன
தனதனதன தானதானன தந்ததான.

851. புழுகொடுபனி நீர்சவாதுட னிருகரமிகு மார்பிலேகன
புளகிதவபி ராமபூஷித கொங்கையானை
பொதுவினில்விலை கூறுமாதர்கள் மணியணிகுழை மீதுதாவடி
பொருவனகணை போல் *விலோசன †வந்தியாலே
மெழுகெனவுரு காவனுர்தம திதயகலக மோடுமோகன
வெகுவிதபரி தாபவாதனை கொண்டுநாயேன்
மிடைபடுமல மாயையால்மிக ‡கலவியவறி வேகசாமிநின்
விதரணசிவ ஞானபோதகம் வந்துதாராய்
எழுகிரிநிலை யோடவாரிதி மொகுமொகுவென வீசமேதினி
இடர்கெடவசு ரேசர்சேனைமு றிந்துபோக
இமையவர்சிறை மீளநாய்நரி கழுகுகள்கக ராசன்மேலிட
ரணமுககண பூதசேனைகள் நின்றுலாவச்
செழுமதகரி நீலகோமள வபிநவமயி லேறுசேவக
செயசெயமுரு காகுகாவளர் கந்தவேளே
திரையொருகவை மோதுகாவிரி வருபுனல்வயல்வாவிசூழ்தரு
திருவிடைமரு தூரில்மேவிய தம்பிரானே. (௪)

## திருநாகீச்சுரம்.

இது தும்பகோணத்திலிருந்து மேற்கே 1 மைல் தூலவில் இருக்கிறது.

தானன தானத் தனத்த தத்தன
தானன தானத் தனத்த தத்தன
தானன தானத் தனத்த தத்தன தனதான.

852. ஆசார வீனக் குதர்க்க துட்டர்கள்
மாதாபி தாவைப் பழித்த துட்டர்கள்
§ஆமாவி னூனைச் செருக்க துட்டர்கள் பாதாரம்
ஆகாதெ னுமற் பொசித்த துட்டர்கள்
நானாவு பாயச் சரித்ர துட்டர்கள்
‖ஆவேச நீரைக் குடித்த துட்டர்கள் தமியோர்¶சொம்

* விலோசனம் - கண்கள். † வந்தி - வருத்தம். ‡ கலவிய-கலங்கிய. § ஆமா - பசு, மற்றவிலங்குகள். ‖ ஆவேசநீர் - கள். ¶ சொம் - சொத்து.

கூசாது சேரப் பறித்த துட்டர்கள்
ஊரார்க ளாசைப் பிதற்று துட்டர்கள்
கோலால வாழ்விற் செருக்கு துட்டர்கள் குருசேவை

கூடாத பாவத் தவத்த துட்டர்கள்
ஓயாது தேடிப் புதைத்த துட்டர்கள்
* கோமாள நாயிற் கடைப்பி றப்பினில் உழல்வாரே

வீசாவி சாலப் பொருப்பெ டுத்தெறி
போரார வாரச் சமுத்தி ரத்தினில்
மீளாம லோடித் துரத்தி யுட்குறும் ஒரு†மாவை

வேரோடு வீழத் தறித் தடுக்கிய
போரோடு சாமர்த் தியத்தி ருக்கையில்
வேலாயு தாமெய்த் திருப்பு கழ்ப்பெறு வயலூரா

நாசாதி ப்ராரத் ததுக்க மிக்கவர்
மாயாவி காரத் தியக்க றுத்தருள்
ஞாநோப தேசப் ரசித்த சற்குரு வடிவான

நாதாவெ னுமுற் றுதித்தி டப்புவி
யாதார மாய்கைக் குமிட்ட முற்றருள்
நாகீச நாமத் தகப்பன் மெச்சிய பெருமாளே.

---

## சிவபுரம்.

இது கும்பகோணத்திலிருந்து கிழக்கே 3 மைல் தூலவில் இருக்கிறது.

தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன தனதான.

853. மனமெ னும்பொருள் ‡ வானறை கால்கனல்
புன லு டன்புவி கூடிய தோருடல்
வடிவு கொண்டதி லே§பதி மூணெழு வகையாலே

வருசு கந்துய ராசையி லேயுழல்
மதியை வென்றுப ராபர ஞானநல்
வழிபெ றும்படி நாயடி யேனைநின் அருள்சேராய்

---

* கோமள நாய் - பரிகசிக்கத்தக்க இழிபிறப்புற்றநாய். † மா - மாமரம். ‡ வானறை கால் கனல் புனலுடன் புவிகூடியதோ ருடல் - பிரிதிவி, அப்பு, வாயு, தேயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதத்தாற் கூடிய உடல். § பதிமூணு ஏழுவகை-தத்துவம் கூகூ-ல் சிவதத்துவம் ரு-நீங்கலாகமற்ற கூக - தத்துவம்.

சௌரி சங்கரி யாரணி நாரணி
விமலை பெண்குண பூரணி காரணி
சுவைப ரம்பரை யாகிய பார்வதி அருள்பாலா

சிறைபு குஞ்சுரர் மாதவர் மேல்பெற
அசுரர் தங்கிளை யானது வேறற
சிவனு கந்தருள் கூர்தரு வேல்விடு முருகோனே

கனக னங்கயி லைமறை தூணிடை
மனித சிங்கம தாய்வளர் பார்திசை
கடக்க லங்கிட வேபொரு தேயுகிர் முனையாலே

கதற வென்றுடல் கீறிட ஆவியு
முதிர முஞ்சித ருதமு தாயுனு
மயல உந்திய னாகிய மால்திரு மருகோனே

தினக ரன்சிலை வேளருள் மாதவர்
சுரர்க ளிந்திர னாரா காதிபர்
திசைமு கன்செமூ மாமறை சீர்புகழ் அழகோனே

*திரும டந்தையர் நாலிரு வோர்நிறை
அகமொ டம்பொனி லைய நீடிய
சிவபு ரந்தனில் வாழ்குரு நாயக பெருமாளே.

---

## திரிபுவனம்.

இது திருவல்லத்திலிருந்து கிழக்கே 7 மைல் துலைவில் இருக்கிறது.

தனதன தனதன தனதன தனதன
தத்தத் தத்தன தத்தத் தத்தன தந்ததான.

854. தனுநுதல் வெயர்வெழ விழிகுழி தரவளை
சத்திக் கச்சில தித்திக் கப்படும் அன்புபேசித்

தழுவிய மகளிர்த முகிழ்முலை யுரமிசை
தைக்கச் சர்க்கரை கைக்கப் பட்டன தொண்டையூறல்

கனவிலு நுகர்தரு கலவியின் வலையிடை
கட்டுப் பட்டுயிர் தட்டுப் பட்டழி கின்றதோதான்

கதிபெற விதியிலி மதியிலி யுனதிரு
†கச்சுற் றச்சிறு ‡செச்சைப் பத்மப தம்பெறேனோ

* திருமடந்தையர் நாலிருவோர் - அஷ்ட லக்ஷ்மிகள். † கச்சுற்றச் சிறு-வீரக்கழலாற் பிணிக்கப்பட்ட சிறிய. ‡ செச்சை-செம்மைபொருந்திய.

முனைமலி குலிசைதன் மிருகமத புளகித
முத்தச் சித்ர தனத்துக் கிச்சித அம்புராசி
முறையிட முதுநிசி சரர்திரள் முதுகிட
முட்டப் பொட்டெழ வெட்டிக் குத்தும டங்கல்வீரா
அநுபவ மளிதரு நிகழ்தரு மொருபொருள்
அப்பர்க் கப்படி யொப்பித் தர்ச்சனை கொண்டநாதா
அகிலமு மழியினு நிலைபெறு திரிபுவ
னத்துப் பொற்புறு சித்திச் சித்தர்கள் தம்பிரானே. (க)

---

## கும்பகோணம்.

இது ஸ்டேஷனிலிருந்து மேற்கே ஒரு மைல் தூலையில் இருக்கிறது.

தந்ததனத் தானதனத் தந்ததனத் தானதனத்
தந்ததனத் தானதனத் தனதான.

855. இந்துகதிர்ச் சேரருணப் பந்திநடுத் தூணொளிபட்
டின்பரசப் பாலமுதச் சுவைமேவும்
எண்குணமுற் றோனடனச் சந்த்ரவொளிப் பீடகமுற்
றெந்தைநடித் தாடுமணிச் சபையூடே
கந்தமெழுத் தோடுறுசிற் கெந்தமணப் பூவிதழைக்
கண்டுகளித் தேயமுதக் கடல்மூழ்கிக்
கந்தமதித் *தாயிரவெட் டண்டமதைக் கோல்புவனக்
கண்டமதைக் காணவெனக் கருள்வாயே
திந்ததிமித் தீதகுடட் டுண்டுமிடட் டாடுடுடிட்
டிந்தமெனக் காளமணித் தவிலோசை
சிந்தைதிகைத் தேழுகடற் பொங்கவரிச் சூர்மகுடச்
செண்டுகுலைத் தாடுமணிக் கதிர்வேலா
குந்தியரித் தாழ்துளபச் செந்திருவைச் சேர்களபக்
கொண்டல்நிறத் தோன்மகளைத் தரைமீதே
கும்பிடுகைப் பூவிலெடுத் தம்பொனூரத் தோடணைநற்
கும்பகொணத் தாறுமுகப் பெருமாளே. (க)

---

* ஆயிரம், எட்டு - சந்தம் நோக்கி ஆயிரவெட்டு என வந்தது.

856. தும்பிமுகத் தானைபணைக் கொம்பதெனத் தாவிமயற்
றொந்தமெனப் பாயுமுலைக் கனமாதர்
தும்பிமலர்ச் சோலைமுகிற் கங்குலிருட் காரினிறத்
தொங்கல்மயிற் சாயலெனக் குழல்மேவிச்
செம்பொனுருக் கானமொழிச் சங்கினொளிக் காமநகைச்
செங்கயலைப் போலும்விழிக் கணையாலே
சிந்தைதகர்த் தாளுமிதச் சந்த்ரமுகப் பாவையர்தித்
திந்திமெனுற் றுடுமவர்க் குழல்வேனோ
தம்பிவரச் சானகிபொற் கொம்புவரக் கூடவனச்
சந்தமயிற் றுய்விலகிச் சிறைபோகச்
சண்டர்முடித் தூள்கள்படச் சிந்தியரக் கோர்கள்விழத்
தங்கநிறத் தாள்சிறையைத் தவிர்மாயோன்
கொம்புகுறிக் காளமடுத் திந்தமெனுற் றுடிநிரைக்
கொண்டுவளைத் தேமகிழச் சுதனீனக்
கொஞ்சுசுகப் பாவையிணைக் கொங்கைதனிற் றுவிமகிழ்க்
கும்பகொணத் தாறுமுகப் பெருமாளே. (௨)

---

தந்ததா னத்தனன தந்ததா னத்தனன
தந்ததா னத்தனன தனதான.

857 கெண்டைநே ரொத்தவிழி மங்கைமோ கக்கலவை
கெந்தவா சப்புழுகு மணநாறும்
*கிம்புரீ சக்களப கொங்கைரூ பப்பொலிவு
†கிஞ்சுகா ணப்பெருகி அடியேனும்
‡மண்டியோ சக்கலவி கொண்டுகா மித்துருகி
§வண்டனா கப்புவியில் உழலாமல்
வந்துஞா னப்பொருளி லொன்றுபோ தித்தனது
மஞ்சுதா ளைத்தினமும் அருள்வாயே
அண்டர்வா ழப்பிறைபை சண்டமே ருக்கிரிய
ளைந்துவீ ழப்பொருத கதிர்வேலா

---

* கிம்புரீசக்களபம் - சிறந்த பூணணிந்த (கொம்பையுடைய) யானை.
† கிஞ்சு-அற்பம். ‡ மண்டி-அதே வேலையாய்க் கருதி. § வண்டன்-மூடன்.

*அஞ்சுவா யிற்பானை நெஞ்சினூ றித்தவசி
னன்புளா ரைச்சிறையி டசுரோரைக்
கொண்டுபோய் †வைத்தகழு நெஞ்சிலே றக்கழுகு
கொந்தியா டத்தலையை அரிவோனே
கொண்டல்சூ ழக்கழனி சங்குலா விப்பரவு
கும்பகோ ணத்திலுறை பெருமாளே. (௩)

தந்ததானத்தத் தனதான தந்ததானத்தத் தனதான.

858. பஞ்சுசேர் நிர்த்தப் பதமாதர் பங்கமார் தொக்கிற் படியாமல்
செஞ்சொல்சேர்சித்ரத்தமிழாலுன் செம்பொனூர்வத்தைப் பெறுவேனோ
பஞ்சபா ணத்தற் பொருதேவர் பங்கில்வாழ் சத்திக் குமரேசா
குஞ்சரீ வெற்புத் தனநேயா கும்பகோ ணத்திற் பெருமாளே. (௪)

தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தனதான.

859. மாலைதனில் வந்து வீதிதனில் நின்று
வாசமலர் சிந்து குழல்கோதி
வாரிருத னங்கள் பூணுடுகு லுங்க
மால்பெருகி நின்ற மடவாரைச்
சாலைவழி வந்து போமவர்க ணின்று
தாழ்குழல்கள் கண்டு தடுமாறித்
தாகமயல் கொண்டு மாலிருள மூந்தி
சாலமிகு நொந்து தவியாமல்
காலையிலெ ழுந்து னுமமெமொ ழிந்து
காதலுமை மைந்த எனவோதிக்
காலமுமு ணர்ந்து ஞானவெளி கண்கள்
காணஅரு ளென்று பெறுவேனோ
கோலமுட னன்று சூர்படையின் முன்பு
கோபமுடனின்ற குமரேசா
கோதையிரு பங்கின் மேவவளர் கும்ப
கோணநகர் வந்த பெருமாளே. (௫)

*அஞ்சு வாயில்-பஞ்சேந்திரிய வழிகளாலும். † வைத்த. கூர்மையாகிய

தனத்த தந்தன தனதன தந்தத்
தனத்த தந்தன தனதன தந்தத்
தனத்த தந்தன தனதன தந்தத் தனதான.

860. கறுத்த குஞ்சியும் வெளிறியெ ழுங்கொத்
துருத்த வெண்பலு மடையவி ழுந்துட்
கருத்து டன்திகழ் மதியும ருண்டுச் சுருள்நோயால்

கலக்க முண்டல மலமுற *வெண்டிப்
பழுத்தெ ழும்பிய முதுகுமு டங்கக்
கழுத்தில் வந்திளை யிருமலொ துங்கக் கொழுமேனி

அறத்தி ரங்கியொர் தடிகைந டுங்கப்
பிடித்†தி டும்புற மனைவியு நிந்தித்
தடுத்த மைந்தரும் வசைகள்வி ளம்பச் சடமாகி

அழுக்க டைந்திடர் படுமுடல் ‡பங்கப்
பிறப்பெ னுங்கட லழியவொ ழிந்திட்
டடுத்தி ருந்திரு வடிதனை யென்றுற் றிடுவேனோ

புறத்த லம்பொடி படமிக வுங்கட்
டறப்பெ ருங்கடல் வயிறுகு ழம்பப்
§புகட்ட ரங்கிய விரகது ரங்கத் திறல்வீரா

பொருப்பு ரம்படர் கிழிபட வென்றட்
டரக்கர் வன்றலை நெரிய நெருங்கிப்
புதைக்கு றுந்தசை குருதிகள் பொங்கப் பொரும்வேலா

சிறுத்த தண்டைய மதலையொ ரஞ்சச்
சினத்து மிஞ்சரி திரிதரு குன்றத்
தினைப்பு னந்திகழ் குறமகள் கொங்கைக் கிரிமேவிச்

செருக்கு நெஞ்சுடை முருகசி கண்டிப்
பரிச்சு மந்திடு குமரக டம்பத்
திருக்கு டந்தையி லுறைதரு கந்தப் பெருமாளே. (௬)

---

* வெண்டி-நீர்வற்றி. † இடும்பு-அவமதிப்பு. ‡ பங்கப்பிறப்பு-வினையின் பயனாகிய பிறவி - §புகட்டரங்கிய - புகவிட்டு அரங்கிய, அரங்கிய - அரக்கிய.

தனத்த தந்தன தானன தானன
தனத்த தந்தன தானன தானன
தனத்த தந்தன தானன தானன தனதான.

861. செனித்தி டுஞ்சல சாழலு மூழலும்
விளைத்தி டுங்குடல் பீறியு மீறிய
செருக்கொ டுஞ்சதை பீளையு மீளையும் உடலூடே

தெளித் திடும்பல சாதியும் வாதியும்
இரைத்தி டுங்குல மேசில கால்படர்
சினத்தி டும்பவ நோயென வேயிதை யனைவோரும்

கனைத்தி டுங்கலி காலமி தோவென
வெடுத்தி டுஞ்சுடு காடுபு காவென
கவிழ்த்தி டுஞ்சட மோபொடி யாய்விடும் உடல்பேணிக்

கடுக்க னுஞ்சில பூடண மாடைகள்
இறுக்கி டுங்கலை யேபல வாசைகள்
கழித்தி டுஞ்சிவ யோகமு ஞானமும் அருள்வாயே

தனத்த னந்தன தானன தானன
திமித்தி திந்திமி தீகத தோகத
தகுத்து துந்துமி * தாரைவி ராணமொ டடல்பேரி

சமத்த மொன்றிய தானவர் சேனையை
வளைத்து வெஞ்சின வேல்விடு சேவக
சமித்து ணர்ந்திடு மாதவர் பாலருள் புரிவோனே

தினைப்பு னந்தனி லேமய லாலொரு
மயிற்ப தந்தனி லேசா ணுனென
திருப்பு யந்தரு மோகன மானினை அணைவோனே

சிவக்கொ ழுஞ்சுட ரேபர ஞகிய
தவத்தில் வந்தருள் பாலக்ரு பாகர
திருக்கு டந்தையில் வாழ்முரு காசுரர் பெருமாளே. (எ)

---

* தாரை விராணம் - வாத்திய பேதங்கள்.

தனதனன தனதனன தானான தானதன
தனதனன தனதனன தானான தானதன
தனதனன தனதனன தானான தானதன தனதான.

862. கரியகுழல் சரியமுகம் வேர்வாட வாசமுறு
களபமுலை புளகமெழ நோரான வேல்விழிகள்
கயல்பொருது செயலதென நீள்பூச லாடநல கனிவாயின்

கமழ்குமுத அதரவிதழ் தேனூறல் பாயமிகு
கடலமுத முதவியிரு தோள்மாலை தாழவளை
கலகலென மொழிபதற மாமோக காதலது கரைகாணு

தெரியனுறு மெழுகுபத மாய்மேவி மேவியிணை
யிருவருட லொருவரென நாணாது பாயல்மிசை
இளமகளிர் கலவிதனி லேமூழ்கி யாழுகினு மிமையாதே

இரவினிடை துயிலுகினும் யாரோடு பேசுகினும்
இளமையுமு னழகுபுனை யீராறு தோள்நிரையும்
இருபதமு மறுமுகமும் யானோதை ஞானமதை யருள்வாயே

உரியதவ நெறியில்நம நாராய ணாயவென
ஒருமதலை மொழியளவி லோராத கோபமுட
னுனதிறைவனெதனிலுளனோதாயடாவெனுமுன் உறுதூணில்

உரமுடைய அரிவடிவ தாய்மோதி வீழவிர
லுகிர்புதைய இரணியனை மார்பீறி வாகைபுனை
உவணபதி நெடியவனும் வேதாவும் நான்மறையும் உயர்வாக

வரியளிக ளிசைமுரல வாகான தோகையிள
மயிலிடையில் நடனமிட ஆகாச மூடுருவ
வளர்கமுகின் விரிகுலைகள் பூணார மாகியிட மதில்சூழும்

மருதரசர் படைவிடுதி வீடாக நாடிமிக
மழவிடையின் மிசையிவரு *சோமீசர் கோயில்தனில்
மகிழ்வுபெற உறைமுருக னேபேணு வானவர்கள் பெருமாளே. ()

---

* இது கும்பகோணத்திலுள்ள சிவாலயங்களிலொன்று.

இது தாரேச்சுரத்திலிருந்து தென்மேற்கே 2 மைல் துலைவில் இருக்கிறது.

தனதனன தத்தத்த தத்தத்த தத்ததன
தனதன்ன தத்தத்த தத்தத்த தத்ததன
தனதனன தத்தத்த தத்தத்த தத்ததன தனதான.

863. கடகிரிம ருப்பிற்க திர்த்துப்ர மிக்கமிக
உரமிடநெ ருக்கிப்பி டித்துப்பு டைத்துவளர்
கனகுட மொத்துக்க னத்துப்பெ ருத்தமணி யணியாலே

கதிர்திகழு செப்பைக்க திக்கப்ப தித்துமகிழ்
கமலமுகை பட்சத்தி ருத்திப்பொ ருத்துமுகை
கமழ்விரைகொள் செச்சைக்க லப்பைப்பொ தித்ததனை விலகாது

கடுவைவடு வைப்பற்றி விற்சிக்க வைத்தசெய
லெனநிறமி யற்றிக்கு யற்றிப்பு ரட்டிவரு
கயல்விழிவெ ருட்டித்து ரத்திச்செ விக்குழையின் மிசைதாவும்

களமதன னுக்குச்ச யத்தைப்ப டைத்தவ்வு
கடுமொழிப யிற்றக்க லைத்துக்கொ டிச்சியர்கள்
கணியினில கப்பட்ட ழுத்தத்து யர்ப்படுவ தொழியேனோ

அடலைபுனை முக்கட்ப ரற்குப்பொ ருட்சொலரு
மறைதனையு ணர்த்திச்செ கத்தைப்பெ ருத்தமயில்
அதனைமுன டத்திக்க ணத்திற்றி ரித்துவரும் அழகோனே

அபகடமு ரைத்தத்த மெத்தப்ப டைத்துலகில்
எளியரைம ருட்டிச்செ கத்திற்பி ழைக்கவெணு
மசடர்தம னத்தைக்க லக்கித்து ணித்தடரும் அதிதீரா

விடவரவ ணைக்குட்டு யிற்கொட்க்ரு பைக்கடவு
*ளுலவுமலை செப்பைச்செ விக்கட்செ றித்துமிக
விரைவி†லுவ ணத்திற்சி றக்கப்ரி யத்தில்வரும் ஒருமாயோன்

விழைமருக கொக்கிற்ச முத்ரத்தி லுற்றவனை
நெறுநெறென விட்டுக்ர சத்தித்த னிப்படைய
விடையவர்தி ருச்சத்தி முத்தத்தி னிற்குலவு பெருமாளே.

---

*. உலவுமலை செப்பை - யானை கூப்பிட்டதை. † உவணம் - கருடன்.

## திருப்பழையாறை.

இது தாரேச்சுரம் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கே 7 மைல் துலைவில் இருக்கிறது.

தானத்தத் தானன தானன தானத்தத் தானன தானன
தானத்தத் தானன தானன தனதான.

864. தோடுற்றுக் காதளவோடிய வேலுக்குத் தானிகராயெழு
சூதத்திற் காமனி ராசத விழியாலே
சோடுற்றத் தாமரை மாமுகை போலக்கற் பூரம ளாவிய
தோல்முத்துக் கோடென வீறிய முலைமானார்
கூடச்சிக் காயவ ளூழிய மேபற்றிக் காதலி னோடிய
கூளச்சித் தாளனை மூளனை வினையேனைக்
கோபித்துத் தாயெனநீயொரு போகத்தைப் பேசவதாலருள்
கோடித்துத் தானடி யேனடி பெறவேணும்
வேடிக்கைக் காரவு தாரகு ணபத்மத் தாரணிகாரண
வீரச்சுத் தாமகு டாசமர் அடுதீரா
வேலைக்கட் டாணிம காரத சூரற்குச் சூரனைவேல்விடு
வேழத்திற் சீரரு ளூறிய இளையோனே
ஆடத்தக் காருமை பாதியர் *வேதப்பொற் கோவணவாடையர்
ஆவித்துத் தாமரு ளூறிய முருகோனே
ஆடப்பொற்கோபுரமேவிய ஆடிக்கொப்பாமதிள் சூழ்பழை
ஆறைப்பொற் கோயிலின் மேவிய பெருமாளே. (௧)

---

## திருநல்லூர்.

இது சுந்தரப்பெருமாள் கோயிலிலிருந்து மேற்கே 2 மைல் துலைவில் இருக்கிறது.

தானதந்ததன தானதந்ததன தானதந்ததன தானதந்ததன
தானதந்ததன தானதந்தன தனதான.

865. மூலமுண்டவனு பூதிமந்திர ராபாஞ்சுடர்கள் மூணுமண்டல †அ
தாரசந்திமுக மாறுமிந்த்ரதரு வுந்தளாமேல்
மூதுரம்பலவர்பீடமந்தமுமி லாதபந்தவொளியாயிரங்கிரண
மூணுமிந்துவொளிர் சோதிவிண்படிக விந்துநாதம்
ஓலமென்றுபல தாளசந்தமிடு சேவைகண்டமுதை வாரிரிண்டுலகி
ரேழுகண்டுவினை யாடியிந்துகதிர் அங்கிசூலம்

---

* வேதங்களைக் கோவணமாயணிந்த ஈசன். † அதார - ஆதார.

ஓடுமந்த*கலி காலொடுங்கநடு தூணில்தங்கவரி ஞானவண்கயிறு
மீதணைந்துசத கோடிசந்த்ரவொளி சந்தியாதோ
சூலியந்தகரி பாலிசங்கரிபு ராரியம்பரிகு மாரியெண்குணசு
வாமிபங்கிசிவ காமிசுந்தரியு கந்தசேயே
சூரசங்கரகு மாரஇந்திர சகாய அன்பருப காரசுந்தரகு
காவெனுஞ்சுருதி ஓலமொன்றநட னங்கொள்வேலா
சீலவெண்பொடியி டாதவெஞ்சமணர் மாளவெங்கழுவி லேறுமென்றுபொடி
நீறிடுங்கமல பாணிசந்த்ரமுக கந்தவேளே
†தேவரம்பையமு தீனுமங்கைதரு மானணைந்தபுய தீரசங்கரதி
யாகர்வந்துறைந லூரமர்ந்துவளர் தம்பிரானே

## திருவலஞ்சுழி.

இது சுந்தரப்பெருமாள் கோயிலுக்குக்கிழக்கே ஒரு மைல்துலைவிலிருக்கிறது.

தனன தந்தன தான தானன.
தனன தந்தன தான தானன
தனன தந்தன தான தானன தனதான.

866. ‡மகர குண்டல மீதே மோதுவ
வருண பங்கய மோபூ வோடையில்
மருவு செங்கழு நீரோ நீவிடு வடிவேலா
வதன்வி டுங்கணை யோவா ளோசில
கயல்கள் கெண்டைக ளோசே லோகொலை
மறலி யென்பவ னோமா னோமது நுகர்கீத
முகர வண்டின மோவான் மேலெழு
§நிலவ ருந்துபு ளோமா தேவருண்
முதிய ||வெங்கடு வோதே மாவடு வகிரோபார்
முடிவெ னுங்கட லோயா தோவென
உலவு கண்கொடு நேரே சூறைகொள்
முறைய றிந்தப சாசே போல்பவர் உறவாமோ
நிகரில் வஞ்சக மாரீ சாதிகள்
நிசமு கன்படை கோடா கோடிய
நிருத ரும்பட வோ¶ரே வேவியெ அடுபோர்செய்
நெடிய னங்கனு மானோ டேயெழு
பதுவெ ளங்கவி சேனா சேவித
நிருப னம்பார் கோமான் ராகவன் மருகோனே

* கலிகால் - வலியகாற்று. † தெய்வானை வள்ளியம்மையார். ‡ மகர குண்டலம் - காதிலணியும் வயிரத்தோடு. § நிலவருந்துபுள் - சந்திரனைப் பற்றுகின்ற அரவு. || வெங்கடு-கொடிய நஞ்சு. ¶ ஏ - பாணம்.

சிகர உம்பர்கள் பாகி ராதிகள்
பிரபை யொன்றுமி ராசா தாதிகள்
சிவச டங்கமொ டசா ஞதிகள் சிவமோனர்

தெளியு மந்த்ரக லாபா யோகிக
ளயல்வி ளங்குசு வாமீ காமரு
திருவ லஞ்சுழி வாழ்வே தேவர்கள் பெருமாளே.

## திருச்சக்கரப்பள்ளி.

இது ஐயன்பேட்டை ஸ்டேஷனிலிருந்து மேற்கே ஒரு மைல் துலவில் இருக்கிறது.

தத்தனத்தன தத்தன தத்தன
தத்தனத்தன தத்தன தத்தன
தத்தனத்தன தத்தன தத்தன தனதான.

867. திட்டெனப்பல செப்பைய டிப்பன
பொற்கு டத்தையு டைப்பன வுத்தர
திக்கி னிற்பெரு வெற்பைவி டுப்பன அதின்மேலே

செப்ப வத்திம ருப்பையொ டிப்பன
*புற்பு தத்தையி மைப்பி லழிப்பன
செய்த்த லைக்கம லத்தைய லைப்பன திறமேய

†புட்ட லைக்கக னத்தில்வி டுப்பன
சித்த முற்பொர விட்டுமு றிப்பன
‡புட்ப இக்கன்மு டிக்குறி யுய்ப்பன இளநீரைப்

புக்கு டைப்பன முத்திரை யிட்டத
னத்தை விற்பவர் பொய்க்கல விக்குழல்
புத்தி யுற்றமை யற்றிட எப்பொழு தருள்வாயே

துட்ட நிக்ரக சத்தித ரப்ரப
லப்ர சித்தச மர்த்தத மிழ்த்ரய
சொற்சு வைக்கவி தைப்புக லிக்கர செனநாமா

சொற்க ணிக்கசு லட்சண §தக்கிண
குத்திரத்தில கத்திய னுக்கருள்
சொற்கு ருத்வம கத்துவ சத்வசண் முகநாதா

---

* புற்புதம்-நீர்க்குமிழி. † புள்-சக்ரவாகப்புள். ‡ புட்ப இக்கன் - மன்மதன். § தக்கிண குத்திரம் - பொதியமலை.

தட்டறச்சம யத்தை வளர்ப்பவ
ளத்தன் முற்புகழ் செப்பவ நுக்ரக
தத்து வத்தைய ளித்திடு செய்ப்பதி மயிலேறி

சட்ப தத்திரள் மொய்த்தம ணப்பொழில்
மிக்க ரத்நம திற்புடை சுற்றிய
சக்க ரப்பளி முக்கணர் பெற்றருள் பெருமாளே.

---

## காவளூர்.

இது சக்கரப்பள்ளியிலிருந்து வடக்கே 3 மைல் துலைவில் இருக்கிறது.

தான தானன தத்தன தந்தன
தான தானன தத்தன தந்தன
தான தானன தத்தன தந்தன தனதான,

38. மானை நேர்விழி யொத்தம டந்தையர்
பாலை நேர்மொழி யொத்தவி ளம்பியர்
வாச மாமலர் கட்டும ரம்பையர் இருதோளும்

மார்பு மீதினு முத்துவ டம்புரள்
காம பூரண பொற்கட கம்பொர
வாரி நீலவ ளைக்கைபு லம்பிட அநுராகம்

ஆன நேரில்வி தத்திர யங்களும்
நாண மாறம யக்கியி யம்பவும்
ஆடை சோரநெ கிழ்த்தியி ரங்கவும் உறவாடி

ஆர வாரந யத்தகு ணங்களில்
*வேளி னூல்கலை கற்றவி ளம்பவும்
ஆகு மோகவி பத்துமொ ழிந்தினி அடைவேனோ

சான கீதுய ரத்தில ருஞ்சிறை
போன போதுதொ குத்தசி னங்களில்
தாப சோபமொ ழிப்பவி லங்கையும் அழிவாகத்

தாரை மாநொரு சுக்கிரி பன்பெற
வாலி வாகுத லத்தில்வி ருந்திட
†சாத வாளிதொ டுத்தமு குந்தனன் மருகோனே

* வேளினூல்-மதனநூல். † சாதவாளி-மந்திரவாளி.

கானவேடர்சி றுக்குடி லம்புன
மீதில் வா*ழித ணத்திலு றைந்திடு
காவல் கூருகு றத்திபு ணர்ந்திடு மணிமார்பா
காவி லாலிய பொற்கமு கின்திரள்
பாளை வீசம லர்த்தட மூஞ்செறி
காவலூர்தனில் முத்தமி ழூந்தெரி பெருமாளே. (க)

---

## தஞ்சை.

இது ஜங்ஷனிலிருந்து ஒரு மைல் தூலைவில் இருக்கிறது.

தந்தன தானன தனதான தந்தன தானன தனதான.

869. அஞ்சனவேல்விழி மடமாதர் அங்கவர்மாயையில் அலைவேனோ
விஞ்சுறு மாவுன தடிசேர † விம்பம தாயருள் அருளாயோ
நஞ்சமு தாவுணும் அரனார்தம் நன்குமராவுமை அருள்பாலா
தஞ்சென வாமடி யவர்வாழத் தஞ்சையில் மேவிய பெருமாளே. (க)

---

தந்த தானனத் தந்த தானனத்
தந்த தானனத் தனதான.

870. அம்பு ராசியிற் கெண்டை சேலொழித்
தஞ்ச வேமணிக் குழைவீசும்
அங்க ணாரிடத் தின்ப சாகரத்
தங்கி மூழ்குமிச் சையினாலே
எம்பி ரானைச் சிந்தி யா‡தொழித்
திந்த்ர சாலவிப் ப்ரமைதீர
இங்கு வாவெனப் பண்பி னாலழைத்
தெங்கு மானமெய்ப் பொருள்தாராய்
கொம்பு போலிடைத் ‖ தொண்டை போலிதழ்க்
கொண்டல் போல்குழற் கனமேருக்
குன்று போல்முலைப் பைங்§கி ராதியைக்
கொண்ட கோலசற் குணவேலா
¶சம்ப ராரியைக் கொன்ற தீவிழிச்
சம்பு போதகக் குருநாதா
சண்ட கோபுரச் செய்பொன் மாளிகைத்
தஞ்சை மாநகர்ப் பெருமாளே. உ)

---

* இதணத்தில் - பரணில், இதண் - பரண். †விம்பமதாய்-பிரகாசமாய்.
‡ ஒழித்த இந்த்ரசால எனப்பிரிக்க. ‖ தொண்டை - கொவ்வைக்கனி.
§ கிராதி - குறக்குலம் புகுந்த வள்ளி. ¶சம்பராரி-ரதிகேள்வனான மன்மதன்.

தந்தன தனதான தானதத்த தந்த
தந்தன தனதான தானதத்த தந்த
தந்தன தனதான தானதத்த தந்த தனதான.

871. கந்தவார் குழல்கோதி மாலையைப்பு னைந்து
மஞ்சளா லழகாக மேனியிற்றி மிர்ந்து
கண்டமாலைகளான ஆணிமுத்த ணிந்து தெருவூடே

கண்டபேரையெலா*ம வாயினிற்கொணர்ந்து
வண்பயோதபார மேருவைத்திறந்து
கண்களாகியகூர வேலைவிட்டெறிந்து விலைகூறி

வந்தபேர் களையேகை யாலெடுத்த ணைந்து
கொண்டுதேனிதழூறு வாயைவைத்த ருந்தி
மந்தமாருதம்வீசு பாயலிற்பு ணர்ந்து மயல்பூணு

மங்கைமாரநுபோக தீவினைப்ப வங்கள்
மங்கியேகிடுமாறு ஞானவித்தை தந்து
வண்டுலாவியநீப மாலைசுற்றி லங்க வருவாயே

இந்த்ரதாருவைஞால மீதினிற்கொணர்ந்த
சங்கபாணியனாதி கேசவப்ர சங்க
னென்றுவாழ் மணிமார்பன் வீரவிக்ரமன்றன் மருகோனே

எண்டிசாமுகவேலை ஞாலமுற்று மண்டு
†கந்ததாருகசேனை நீறுபட்டொ துங்க
வென்றுபேரொளிசேர்ப்ர காசம்விட்டி லங்கு கதிர்வேலா

சந்த்ரசேகரிநாக பூஷணத்தி யண்ட
முண்டநாரணியால போஜனத்தி யம்பை
தந்தபூரணஞான வேள்குறத்தி ‡துஞ்சு மணிமார்பா

சண்டநீலகலாப வாசியிற்றி கழ்ந்து
கஞ்சன்வாசவன்மேவி வாழ்பதிக்கு யர்ந்த
தஞ்சைமாநகர்ராஜ கோபுரத்த மர்ந்த பெருமாளே. (ரு)

---

* அவாயினில் - காதலி காதலனுக்கேற்படுகிற அன்பின் பெருக்கில்.
† உகந்த தாருகசேனை - பராக்ரமித்த அசுரசேனை. ‡ துஞ்சும் - உறங்கும்.

## திருவையாறு.

இது தஞ்சையிலிருந்து வடக்கே 7 மைல் துலைவிலிருக்கிறது.

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தனதான.

872. சொரியு மாமுகி லோஇரு ளோகுழல்
சுடர்கொள் வாளிணை யோபிணை யோவிழி
சுரர்த மாமுத தோகுயி லோமொழி இதழ்கோவை

*துவர தோஇல வோதெரி யாவிடை
துகளி லாவன மோபிடி யோநடை
துணைகொள் மாமலை யோமுகை தானென உரையாடிப்

பரிவி னாலெனை யாளுக நானொரு
பழுதி லானென வாணுத லாரொடு
பகடி பேபடி யாவொழி யாவிடர் படுமாயப்

பரவை மீதழி யாவகை ஞானிகள்
பரவு சீர்புக ழேயது வாமிகு
பரம வீடது சேர்வது மாவதும் ஒருநாளே

கரிய மேனிய †ஆனிரை யாள்பவன்
அரிய ராவணை மேல்வளர் மாமுகில்
‡கனகன் மார்பது பீரிய வாளரி கனமாயக்

கபடன் மாமுடி யாறுட னாலுமோர்
கணைபி னால்நில மீதுற §நூறிய
கருணை மால்||கவி கோபக்ரு பாகரன் மருகோனே

திரிபு ராதிகள் தூளெழ வானவர்
திகழ வே¶முனி யாவருள் கூர்பவர்
தெரிவை பாதியர் சாதியி லாதவர் தருசேயே

சிகர பூதரம் நீறுசெய் வேலவ
திமிர $மோகர வீரதி வாகர
திருவை யாறுறை தேவக்ரு பாகர பெருமாளே. (௧)

* துவர் - பவளம். † ஆனிரை - பசுக்கூட்டங்கள். ‡ கனகன் - இரணியன். § நூறிய - துணித்த. || கவிகோப - வாலியைக் கோபித்த. ¶ முனியா - கோபியாது. ஈண்டுச்சிரித்தெனப் பொருள்பெற்றது. $ மோகரம்-பராக்ரமம்.

தனன தானன தானனதத்தன தனனதானன தானனதத்தன
தனன தானன தானனதத்தன தனதான.

873. மருவுலாவிடு மோதிருக்குலைப்பவர் சமரவேலெனு நீடுவிழிச்சியர்
மனதிலேகப டுருபாத்தையர் அதிகேள்வர்

மதனனேடுறழ் பூசலிடைச்சிய ரினைஞாருயிர்வாழுமுலைச்சியர்
மதுரமாமொழி பேசுகுணத்தியர் தெருமீதே

சருவியாரையும் வாவெனழைப்பவர் பொருளிலேவெகு ஆசைபரப்பிகள்
சகலதோதக மாயைபடிப்பரை அணுகாதே

சலசமேவிய பாதநினைத்துமு னருணைநாட திலோதுதிருப்புகழ்
தணியவோ கையிலோதவெனக்கருள் புரிவாயே

அரியகானக மேவுகுறத்தித னிதணிலேசில நாளுமனத்துட
னடவிதோறுமெ வாழியல்பத்தினி மணவாளா

அசுரர்வீடுகள் நூறுபொடிப்பட உழவர்சாகர மோடியொழித்திட
அமரர்நாடுபொன் மாரிமிகுத்திட நினைவோனே

திருவின் மாமரு மார்பழனப்பதி அயிலு*சோறவை யாறுதுறைப்பதி
திசையி†னான்மறை தேடிய முற்குடி ‡விதியாதிச்

சிரமு மாநிலம் வீழ்தருமெய்ப்பதி §பதும நாயகன் வாழ்பதி||நெய்ப்பதி
திருவை யாறுட னேழுதிருப்பதி பெருமாளே. (௨)

---

## திருப்பூந் துருத்தி.

இது தஞ்சைக்கு வடக்கே 8 மைல் தூலவிலிருக்கிறது.

தாந்த தத்தன தானு தானன
தாந்த தத்தன தானு தானன
தாந்த தத்தன தானு தானன தந்ததான.

874. வீங்கு பச்சிள நீர்போல் மாமுலை
சேர்ந்த ணைத்தெதிர் மார்பூ டேபொர
வேண்டு சர்க்கரை பால்தே னேரிதழ் உண்டுதோயா

வேண்டு ரைத்துகில் வேறாய் மோகன
தாஞ்சை யிற்களி கூரா வாள்விழி
மேம்ப டக்குழை மீதே மோதிட வண்டிராசி

---

* சோறவையாறு துறைப்பதி - திருச்சோற்றுத்துறை. † நான்மறை தேடிய முற்குடி-திருவேதிகுடி. ‡ விதிசிரம் வீழ்தருபதி-திருக்கண்டியூர். § பதுமநாயகன் வாழ்பதி-திருப்பூந்துருத்தி. || நெய்ப்பதி-திருநெய்த்தானம்.

ஓங்கு மைக்குழல் சாதா வீறென
வீந்து புட்குரல் கூவா வேள்கலை
யோர்ந்தி டப்பல க்ரீடா பேதமு யங்குமாகா

ஊண்பு ணர்ச்சியு மாயா வாதனை
தீர்ந்து னக்கெளி தாயே மாதவ
மூன்று தற்குமெய்ஞ் ஞான சாரம்வ ழங்குவாயே

தாங்கும் * அற்சார் சேனை நீறுசெய்
தோங்கு ருத்ரகு மாரா கோஷண
தாண்ட வற்கருள் † கேகி வாகன துங்கவீரா

சார்ங்க கைத்தல மாலோ டீசம
கேந்த்ரர் மெச்சிய வேலா போதக
சாந்த வித்தக ஸ்வாமீ கீபவ லங்கன்மார்பா

பூங்கு ளத்திடை தாரா வோடன
மேய்ந்த செய்ப்பதி நாதா மாமலை
போன்ற விக்ரக சூரா ரீ ‡ பகி ரண்டரூபா

போந்த பத்தர்பொ லாநோய் போயிட
வேண்ட நுக்ரக போதா மேவிய
பூந்து ருத்தியில் வாழ்வே தேவர்கள் தம்பிரானே

---

## திருநெய்த் தானம்.

இது திருப்பூந்துருத்திக் கருகிலுள்ள ஸ்தலம்.

தனனத் தானத் தனதன தனதன
தனனத் தானத் தனதன தனதன
தனனத் தானத் தனதன தனதன தனதான.

875. முகிலைக் காரைச் சருவிய குழலது
சரியத் தாமத் தொடைவகை நெகிழ்தர
முளரிப் பூவைப் பனிமதி தனைநிகர் முகம்வேர்வ

முனையிற் காதிப் பொருகணை யிணையிள
வடுவைப் பானற் பரிமள § நறையிதழ்
முகையைப் போலச் சமர்செய் மிருவிழி குழைமோதத்

---

* அற்சார்சேனை - அசுரர்சேனை † கேகீ - மயில். ‡ பகிரண்டரூபா
அண்டாண்ட முதலிய சகலமும் தானான சொரூபா. § நறை-தேன்.

*துகிரைக் கோவைக் கனிதனை நிகரிதழ்
பருகிக் காதற் றுயாற வளநிறை
துணைபொற் றோளிற் குழைவுற மனமது களிகூறச்

சுடர்முத் தாரப் பணியணி †ம்ருகமத
நிறைபொற் பாரத் திளகிய ‡முகிழ்முகை
துவளக் கூடித் துயில்கினு முனதடி மறவேனே

குகுகுக் கூகுக் குகுகுகு குகுவென
திமிதித் தீதித் திமிதியென் முரசொடு
குழுமிச் சீறிச் சமர்செயு மசுரர்கள் களமீதே

குழறிக் கூளித் திரளெழ வயிரவர்
குவியக் கூடிக் கொடுவர §அலகைகள்
‖குணலிட் டாடிப் பசிகெட அயில்விடு குமரேசா

செகசெச் சேசெச் செகவென முரசொலி
திகழச் சூழத் திருநட மிடுபவர்
செவிகட் காளப் பணியணி யிறையவர் தருசேயே

சிகரப் பாரக் கிரியுறை குறமகள்
கலசத் தாமத் தனகிரி தழுவிய
திருநெய்த் தானத் துறைபவ சுரபதி பெருமாளே. (௧)

---

## பெரும்புலியூர்.

இது திருவையிலிருந்து வடக்கே 2 மைல் தூலவிலிருக்கிறது.

தனந்ததன தானத் தனந்ததன தானத்
தனந்ததன தானத் தனதான.

876. சதங்கைமணி வீரச் சிலம்பினிசை பாடச்
சரங்கவொளி வீசப் புயமீதே

தனங்கள்குவ டாடப் படர்ந்தபொறி மால்பொற்
சரங்கண்மறி காதிற் குழையாடை

இதங்கொள்மயி¶லேரொத் துகந்தநகை பேசற்
றிரம்பையழ கார்மைக் குழலாரோ

டிழைந்தமளி யோடுற் றழுந்துமெனை நீசற்
றிரங்கியிரு தாளைத் தருவாயே

---

* துகிர்-பவளம். † ம்ருகமதம்-கத்தூரி ‡ முகிழ்-குவிழ்ந்த. § அலகை. கள்-பேய்க்கூட்டங்கள். ‖ குணலிட்டு-கொக்கரித்து. ¶ ஏர் - அழகு.

செம்பாகு மாக் கடம்புதொடை யாடச்
சிறந்தமயில் மேலுற் றிடுவோனே

சிவந்தகழு காடப் பிணங்கள்மலை சாச்
சினந்தசுரர் வேரைக் களைவோனே

பொதும்பையெழு கோலச் செயங்கொள்சிவ காமிப்
ப்ரசண்டஅபி ராமிக் கொருபாலா

பெரும்புனம தேகிக் * குறம்பெணொடு கூடிப்
பெரும்புலியூர் வாழ்பொற் பெருமாளே. (க)

---

## வாலிகொண்டபுரம்.

இது தஞ்சையிலிருந்து தெற்கே 19 மைல் துலைவிலிருக்கிறது.

தான தந்ததன தான தந்ததன
தான தந்ததன தான தந்ததன
தான தந்ததன தான தந்ததன தனதான.

877. ஈயெ றும்புநரி நாய்க ணங்கழுகு
காக முண்பவுட லேசு மந்துமிக
தேவ்வ தென்றுமத மேபொ ழிந்துமத † உம்பல்போலே

ஏது மென்றனிட கோலெ னும்பரிவு
மேவி நம்பியிது போது மென்கசில
ரேய்த னங்கள்தனி வாகு சிந்திவச னங்கள்பேசிச்

சீத தொங்கலழ காவ ணிந்துமணம்
வீச மங்கையர்க ளாட வெண்கவரி
சீற கொம்புகுழ லூத தண்டிகையில் அந்தமாகச்

சேர்க னம்பெரிய வாழ்வு கொண்டுழலு
மாசை வெந்திடவு ளைசை மிஞ்சி ‡ சிவ
சேவை கண்டுனது பாத தொண்டனென அன்புதாராய்

சூதி ருந்தவிடர் மேயி ருண்டகிரி
சூரர் வெந்துபொடி யாகி மங்கிவிழ
சூரி யன்புரவி தேர்ந டந்துநடு பங்கிநேடைச்

---

* குறப்பெண் - சந்தம்நோக்கிக் 'குறம்பெண்' என்று வந்தது.
† உம்பல் - யானை. ‡ சிவசேவை - பிர்ம விஷ்ணு ருத்ர மகேஸ்வர சதாசிவ மென்னும் ஐமுகப் பிர்மத்தோடு, அவைக் காதார முகமுஞ் சேர்ந்த சேவை.

சோதி யந்தபிர மாபு ரந்தானு
மோதி யந்தமுதல் தேவ ருந்தொழுது
சூழ மன்றில்நட மாடு மெந்தை முதல் அன்புகூர

வாது கொண்டவுணர் மாள செங்கையயி
லேவி யண்டர்குடி யேற விஞ்சையர்கள்
மாதர் சிந்தைகளி கூர நின்றுநட னங்கொள்வோனே

வாச கும்பதன மானை வந்துதினை
காவல் கொண்டமுரு காநி தம்பெரிய
வாலி கொண்டபுர மேய மர்ந்துவளர் தம்பிரானே. (க)

---

## திருப்பழுவூர்.

இது புலியூருக்கு மேற்கே 3 மைல் தூலவிலிருக்கிறது.

தனன தந்தன தாத்த தானன தனன தந்தன தாத்த தானன
தனன தந்தன தாத்த தானன தனதான.

878. விகட சங்கட வார்த்தை பேசிகள் அவல மங்கையர் கூத்து நாரிகள்
விரிவ டங்கிட மாற்றும் வீறிகள் வருவார்தம்

விதம்வி தங்களை நோக்கி யாசையி லுபரி தங்களை மூட்டி யேதம
திடும ருந்தொடு சோற்றை யேயிடு விலைமாதர்

சகல மஞ்சன மாட்டி யேமுகை படவ ளைந்திசை மூட்டி யேவரு
சரச விங்கித நேர்த்தி யாகிய சுழலாலே

சதிமு ழங்கிட வாய்ப்ப ணைந்து மலர உந்தியை வாட்டி யேயிடை
தளர வுங்கணை யாட்டும் வேசியர் உறவாமோ

திகிரி கொண்டிரு ளாக்கி யேயிரு தமையர் தம்பியர் மூத்த தாதையர்
திலக மைந்தரை யேற்ற சூரரை வெகுவான

செனம டங்கலு மாற்றி யேயுடல் தகர அங்கவர் கூட்டை யேநரி
திருகி யுண்டிட ஆர்த்த கூளிகள் அடர்பூமி

அகடு துஞ்சிட மூட்டு பாரத முடிய அன்பர்க ளேத்த வே* அரி
அருளு மைந்தர்கள் வாழ்த்து மாயவன் மருகோனே

அமர ரந்தணர் போற்ற வேகிரி கடல திர்ந்திட நோக்கு மாமயி
லழகொ டும்பழு வூர்க்குள் மேவிய பெருமாளே. (க)

*அரி அருளு மைந்தர்-யமன், வாயு, இந்திரன் என்னும் மூவர் புதல்வர்களான தரும வீம அருச்சுனரும், அவரைச்சார்ந்த நகுல சகாதேவர்களும்.

## நெடுங்களம்.

இது திருப்பாற்றுறைக்குத் தெற்கே 7 மைல் தூலவிலிருக்கிறது.

தந்ததன தந்ததன தந்ததன தந்ததன
தந்ததன தந்ததன தந்ததான.

879, பஞ்சபுல னும்பழைய ரண்டுவினை யும்பிணிகள்
பஞ்செனவெ ரிந்துபொடி அங்கமாகிப்
*பண்டறவு டன்பழைய தொண்டர்களு டன்பழகி
பஞ்சவர்வி யன்பதியு டன்குலாவக்
குஞ்சாமு கன்றுணைமொ டந்தவனம் வந்துலவ
கொஞ்சியபசி லம்புகழல் விந்துநாதம்
கொஞ்சமயி லின்புறமெல் வந்தருளி யென்கவலை
கொன்றருள்நி றைந்தகழல் இன்றுதாராய்
எஞ்சியிடை யுஞ்சுழல அம்புவிழி யுஞ்சுழல
இன்பரச கொங்கைகா முங்கொளாமல்
†எந்தவுடை சிந்தபெல மிஞ்சியமு தம்புரள
இந்துநுத லும்புரள கங்குல்மேகம்
அஞ்சுமள சம்புரள மென்குழைக ளும்புரள
அம்பொனுரு மங்கைமண முண்டபாலா
அன்பர்குல வுந்திருநெ டுங்களவ ளம்பதியி
லண்டரய னும்பரவு தம்பிரானே. (க)

---

## திருத்தவத்துறை.

இது திருப்பாற்றுறைக் கருகில் 3 மைல் தூலவிலிருக்கிறது.

தானன தந்தன தத்த தத்தன
தானன தந்தன தத்த தத்தன
தானன தந்தன தத்த தத்தன தனதான.

880. காரணி யுங்குழ லைக்கு லைத்திடு
கோகன கங்கொடு மெத்தெ னப்பிறர்
காணவ ருந்திமு டித்தி டக்கடு விரகாலே
காதள வுங்கய லைப்பு ரட்டிம
ஞதிகள் வஞ்சமி குத்தி டப்படி
காமுக ரன்புகு வித்த கைப்பொருள் உறவாகிப்

---

* பண்டறவு-பழயகாலத் தொடக்கம். † எந்த-மீற.

பூரண கும்பமெ னப்பு டைத்தெழு
சீதள குங்கும மொத்த சித்திர
பூஷித கொங்கையி லூற்று முத்தணி பிறையான

*போருவை யொன்றுநெ கிழ்த்து ருக்கிமெய்
யாரையும் நெஞ்சைவி லைப்ப டுத்திடு
பூவையர் தங்கள்ம யக்கை விட்டிட அருள்வாயே

வீரபு யங்கிரி யுக்ர விக்ரம
பூதக ணம்பல நிர்த்த மிட்டிட
வேகமு டன்பறை கொட்டி டக்கழு கினமாட

வீசிய பம்பா மொப்பெ னக்களி
வீசந டஞ்செய் †வி டைத்த னித்துசர்
வேதப ரம்பரை யுட்க ளித்திட வரும்வீரா

சீரணி யுந்திரை ‡தத்து முத்தெறி
காவிரியின்கரை மொத்து மெத்திய
சீர்புனை கின்றதி ருத்த வத்துறை வரும்வாழ்வே

சீறியெ திர்ந்தவ ரக்க ரைக்கெட
மோதி யடர்ந்தருள் பட்ச முற்றிய
தேவர்கள் தஞ்சிறை வெட்டி விட்டருள் பெருமாளே. (க)

---

தனத்த தத்தன தானன தானன
தனத்த தத்தன தானன தானன
தனத்த தத்தன தானன தானன தனதான.

881. நிரைத்த §நித்தில நீள்மணி மாலைகள்
பொறுத்த வெற்பிணை மார்முலை மேலணி
நெறித்த ‖நெய்க்குழல் வாள்விழி மாமதி முகமானார்

நெளித்த சிற்றிடை மேல்கலை யாடையை
யுடுத்தி ¶யத்தமு ளோர்தமை யேமயல்
நிரப்பி நித்தமும் வீதியில் நேருறு நெறியாலே

* போருவை-மார்பிலணிந்த கச்சு. † விடைத்தனித் துசர்-விடைக்கொடி யுடைய சிவபிரான். ‡ தத்து-வீசுகின்ற. § நித்திலம்-முத்து. ‖ நெய்க்குழல்-தைலந்தேய்த்தகுழல். ¶ அத்தமுளோர்-பொருளுடையோர்.

கரைத்தி தக்குயில் போல்மொழி மாதர்கள்
வலைக்கு ளிற்குழ லாவகை யேயுன துறமேவிக்
கழற்று தித்திடு வாழ்வது தான்மன
கதித்த பத்திமை சாலடி யார்சபை
தகுத்தி ழிக்குண பாதக னேனுயர் உரையாயோ
கதிக்க டுத்துயர் வாகவு மேயருள்
*வரைத்த நுக்கார் மாதவ மேவின
ரகத்தி டத்தினில் வாழ்சிவ னார்திரு வடிவேலா
மணிச்செ விக்குள்மெய்ஞ் ஞானம தோதிய
மதித்த முத்தமி ழாய்வினர் மேலவ
ருரைத்து ளத்திரு வாசக மானது மணிமாடத்
மனத்து†ளெத்தழ கார்புகழ் வீசிய
திரைக்க டற்பொரு காவிரி மாநதி
பெருக்கெ டுத்துமெ யாய்வள நீர்பொலி குவையாகச்
செழித்த நெற்செநெல் வாரிக ளேகுவை
செருக்கு செய்ப்பதி வாழ்முரு காவறம்
வளர்த்த நித்தியகல் யாணிக்கு பாகரி பெருமாளே. (உ)
திருத்த வத்துறை மாநகர் தானுறை

---

## திருமாந்துறை.

இது திருவானைக்காவுக்கு வடகிழக்கு 10 மைலிலிருக்கிறது.

தாந்ததன தந்த தாந்ததன தந்த
தாந்ததன தந்த தனதான.

882. ஆங்குடல்வ ளைந்து நீங்குபல்நெ கிழ்ந்து
‡ஆஞ்சுதளர் சிந்தை தடுமாறி
ஆர்ந்துளக டன்கள் வாங்கவும றிந்து
ஆண்டுபல சென்று §கிடையோடே
ஊங்கிருமல் வந்து வீங்குகுடல் நொந்து
ஓய்ந்துணர்வ ழிந்து உயிர்போமுன்
ஓங்கு||மயில் வந்து சேண்பெறவி சைந்து
ஊன்றியப தங்கள் தருவாயே

---

* வரைத்தனுக்கார்-மலையை வில்லாய்ப்பிடித்தவர். † எத்து-ஏத்து.
‡ ஆஞ்சு-அலைகின்ற. § கிடை-படுக்கை. || மயில்வந்து-மயிலின்மீதுவந்து.

வேங்கையுமு யர்ந்த தீம்புனமி ருந்த
வேந்திழையி னின்ப மணவாளா

வேண்டுமவர் கண்ட தாங்கள்பத மிஞ்ச
வேண்டிய பதங்கள் புரிவோனே

மாங்கனியு டைந்து தேங்கவயல் வந்து
மாண்புநெல்வி ளைந்த வளநாடா

மாந்தர்தவ ரும்பர் கோன்பரவி நின்ற
மாந்துறைய மர்ந்த பெருமாளே. (க)

---

## பூவாளூர்.

இது திருமாந்துறைக்கு வடக்கே 2 மைல் தூலவிலிருக்கிறது.

தான தாத்தன தானா தானன
தான தாத்தன தானா தானன
தான தாத்தன தானா தானன தனதான.

883. காலன் வேற்கணை *யீர்வா ளாலமு
நேர்க ணாற்கொலை சூழ்மா பாவிகள்
காம சாத்திர வாய்பா டேணிகள் எவரேனும்

காத லார்க்கும்வி னாவாய் கூறிகள்
போக பாத்திர மாமூ தேவிகள்
காசு கேட்டிடு மாயா ரூபிகள் அதிமோக

மாலை மூட்டிகள் வானா டேநிமிர்
ஆனைபோற்பொர நேரே போர்முலை
மார்பு காட்டிகள் நானா பேதக மெனமாயர்

மாப ராக்கிக ளோடே சீரிய
போது போக்குத லாமோ நீயினி
வாவெ னாப்பரி வாலே யாள்வதும் ஒருநாளே

†பால றாத்திரு வாயா லோதிய
ஏடு நீர்க்கெதிர் போயே வாதுசெய்
பாடல் தோற்றிரு நாலா மாயிர சமண்மூடர்

---

* ஈர்வாள் - கொலைசெய்தற்கேற்ற வேலாயுதம். † பாலறாத்திரு - பான் மணம் மாறாத குழந்தையாகிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள்.

பாரின் மேற்கழு மீதே யேறிட
*நீறி டாத்தமிழ் நாடீ டேறிட
பாது காத்தரு ளாலே கூனிமீர் இறையோனும்

ஞால மேத்திய தோர்மா தேவியும்
ஆல வாய்ப்பதி வாழ்வா மாறெனு
ஞான பாக்கிய பாலா வேலவ மயில்வீரா

ஞான தீக்ஷித சேயே காவிரி
யாறு தேக்கிய கால்வாய் மாவளா
நாடு போற்றிய பூவா ளூருறை பெருமாளே. (க)

## வயலூர்.

இது பூவாளூருக்கு மேற்கே 12 மைல் தூலவிலிருக்கிறது.

தானதன தாத்த தானதன தாத்த
தானதன தாத்த தனதான.

884. ஆரமுலை காட்டி மாரனிலை காட்டி
ஆடையணி காட்டி அனுராக

ஆலவிழி காட்டி ஆசைமொழி காட்டி
ஆதரவு காட்டி எவரோடும்

ஈரநகை காட்டி நேரமிகை காட்டி
யேவினைகள் காட்டி உறவாடி

ஏதமயல் காட்டி மாதர்வலை காட்டி
ஈடழிதல் வாட்டி அருளாயோ

வீரபவ ராட்டு சூர்படை காட்டில்
வீழனலை யூட்டி மயலூர்தி

வேலையுறை நீட்டி வேலைதனி லோட்டி
வேலைவிளை யாட்டு வயலூரா

சோமலை நாட்டில் வாரமுடன் வேட்ட
சீலிகுற வாட்டி மணவாளா

தேசுபுகழ் தீட்டி யாசைவரு கோட்டி
தேவர்சிறை மீட்ட பெருமாளே. (க)

* நீறிடாத்தமிழ்நாடு-சமணரால் விபூதியிட்டுக்கொள்ளாத தமிழ்நாடு.

தனனதன தனனதன தத்தத்த தத்ததன
தத்தத்த தத்ததன தனதான.

885. *இகல்கடின முகபடவி சித்ரத்து திக்கைமத
மத்தக்க ளிற்றையெதிர்
புளகதன மிளகவினி தெட்டிக்க முத்தொடுகை
கட்டிப்பி ணித்திறுகி
இதழ்பொதியி னமுதுமுறை மெத்தப்பு சித்துருகி
முத்தத்தை யிட்டுநக தந்தமான
இடுகுறியும் வரையையுற நெற்றித்த லத்திடையி
லெற்றிக்க லக்கமுற
இடைதுவள உடைகழல இட்டத்த ரைப்பையது
தொட்டுத்தி ரித்துமிக
இரணமிடு முரணர்விழி யொக்கக்க றுத்தவிழி
செக்கச்சி வக்கவளை செங்கைசோர
அருகவிடு ம்ருகமதம ணத்துக்க னத்தபல
கொத்துக்கு ழற்குலைய
மயில்புறவு குயில் †ஞிமிறு குக்கிற்கு ரற்பகர
நெக்குக்க ருத்தழிய
‡அமளிபெரி §தமளிபட வக்கிட்டு மெய்க்கரண
வர்க்கத்தி னிற்புணரும் இன்பவேலை
அலையின்விழி மணியின்வலை யிட்டுப் பொருட்கவர
கட்டுப்பொ றிச்சியர்கள்
மதனகலை விதனமறு வித்துத்தி ருப்புகழை
யுற்றுத்து திக்கும்வகை
அபரிமித சிவவறிவு சிக்குற்று ணர்ச்சியினில்
ரட்சித்த ளித்தருள்வ தெந்தநாளோ
திகுடதிகு தகுடதகு திக்குத்தி குத்திகுட
தத்தித்த ரித்தகுட

* இகல்-வலிமை. † ஞிமிறு-வண்டு. ‡ அமளி-மஞ்சம். § ஆடம்பரம்.

செகணசெக சகணசக செக்கச்செ கச்செகண
சத்தச்ச கச்சகண

திகுதிகுர்தி தகுதகுர்த திக்குத்தி குத்திகுர்தி
தக்குத்த குத்தகுர்த திங்குதிதோ

திரிரிதிரி தரிரிதரி தித்தித்தி ரித்திரிரி
தத்தித்த ரித்தரிரி

டிகுடடகு டகுடடிகு டிட்டிட்டி குட்டிகுடி
டட்டட்ட குட்டகுட

தெனதிமிர்த தவில்மிருக டக்கைத்தி ரட்சலிகை
பக்கக்க ணப்பறைத வண்டைபேரி

வகைவகையின் மிகவதிர வுக்ரத்த ரக்கர்படை
பக்கத்தி னிற்சரிய

எழுதுதுகில் முழுதுலவி பட்டப்ப கற்பருதி
விட்டத்த மித்தெென

வருகுறளி பெருகுகுரு திக்குட்கு ளித்துழுது
தொக்குக்கு னிப்புவிட வென்றவேலா

வயலிநகர் பயில்குமர பத்தர்க்க னுக்ரகவி
சித்ரப்ர சித்தமுறு

அரிமருக அறுமுகவ முக்கட்க ணத்தர்துதி
தத்வத்தி றச்சிகர

வடகுவடில் நடனமிடு மப்பர்க்கு முத்திநெறி
தப்பற்று ரைக்கவல தம்பிரானே. (௨)

---

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான.

886. இலகு முலைவிலை யசடிகள் கசடிகள்
கலைகள் பலவறி தெருளிகள் மருளிகள்
எயிறு கடிபடு முதடிகள் பதடிகள் எவரோடும்

இனிய நயமொழி பழகிகள் அழகிகள்
மடையர் பொருள்பெற மருவிகள் சருவிகள்
யமனு மிகையென வழிதரு முழிதரும் விழிவாளால்

உலக மிடர்செயு நடலிகள் மடலிகள்
சிலுகு சிலமொடு புகலிக ளிகலிக
ளுறவு சொலவல தூகிகள் விரகிகள் பிறைபோலே

உகிர்கை குறியிடு *கமுகிகள் சமுகிகள்
பகடி யிடவல கபடிகள் முகடிகள்
உணர்வு கெடும்வகை †பருவிக ளுருவிகள் உறவாமோ

‡ அலகை புடைபட வருவன பொருவன
கலக § கணநிரை நகுவன தகுவன
அசுரர் தசைவழி நிமிர்வன திமிர்வன பொடியாடி

அலரி குடதிசை அடைவன குடைவன
தரும வநிதையு மகிழ்வன புகழ்வன
அகில புவனமு மரகர கரவென அமர்வேள்வி

திலக நுதலுமை பணிவரு செயமகள்
கலையி னடமிட வெரிவிரி முடியினர்
திரள்ப லுயிருடல் குவடுக ளெனநட மயிலேறிச்

சிறிது பொழுதினி லயில்விடு குருபர
அறிவு நெறியுள அறுமுக இறையவ
த்ரிசிர கிரியயல் வயலியி லினிதுறை பெருமாளே. (ங)

---

தன்ன தனத்தன தன்ன தனத்தன
தன்ன தனத்தன தனதான.

887. என்னால் பிறக்கவும் என்னா லிறக்கவும்
என்னால் துதிக்கவுங் கண்களாலே

என்னா லழைக்கவும் என்னால் நடக்கவும்
என்னா லிருக்கவும் பெண்டிர்வீடு

என்னால் சுகிக்கவும் என்னால் முசிக்கவும்
என்னால் சலிக்கவும் தொந்தநோயை

என்னா லெரிக்கவும் என்னால் நினைக்கவும்
என்னால் தரிக்கவும் § இங்குநானார்

---

* கமுகிகள்-கண்டத்தினையுடையவர்கள். † பருவிகள்-பருத்தவர்கள். ‡ அலகை, கணம் - பேய்க்கூட்டம். § இங்குநானார் - அதிகாரி நானல்ல.

கன்ன ரீந்தவென் மன்ன வெனக்குநல் கர்ண மிர்தப்பதந் தந்தகோவே
கல்லார் மனத்துட னில்லா மனத்தவ கண்ண டியிற்றடங் கண்டவேலா
மன்ன னதக்கலை முன்னள் முடித்தலை வன்வா ளியிற்கொளுந் தங்கரூபன்
மன்ன குறத்தியின் மன்ன வயற்பதி மன்ன முவர்க்கொரு தம்பிரானே (௪)

தனனத் தனதன தனனத் தனதன
தனனத் தனதன தனதான.

888. கடல்போற் கணைவிழி சிலைபோற் பிறைநுதல் கனிபோற் றுவரிதழ் எழிலாகும்
கரிபோற் கிரிமுலை கொடிபோற் றுடியிடை கடிபோற் பணியரை எனவாகும்
உடல்காட் டினிமையி லெழில்பாத் திரமிவ ளுடையாற் கெறுவித நடையாலும்
ஒருநாட் பிரிவது மரிதாய்ச் சுழல்படும் ஒழியாத் துயரது தவிரேனோ
குடலீர்த் தசுரர்க ளுடல்காக் கைகள்நரி கொளிவாய்ப் பலவல கைகள்பேய்கள்
கொலைபோர்க் களமிசை தினமேற் றமரர்கள் குடியேற் றியபகுக உயர்தாழை
மடல்கீற் றினிலெழு விரைபூப் பொழில்செறி வயலூர்ப் பதிதனில் உறைவோனே
மலைமேற் குடியுறை கொடுவேட் டுவருடை மகள்மேற் ப்ரியமுள பெருமாளே. (௫)

தனதத்த தானன தனதத்த தானன
தனதத்த தானன தந்ததான.

889. கமையற்ற சீர்கேடர் வெகுதர்க்க கோலாலர் கலையுற்று மாயாது மந்த்ரவாதக்

கடைகெட்ட ஆபாத மூறுசித்ர கோமாளர்
கருமத்தின் மாயாது கொண்டுபூணுஞ்

சமயத்த ராசார நியமத்தின் மாயாது
சகளத்து ளோநாளு நண்புளோர்செய்

சரியைக்கிரி யாயோக நியமத்தின் மாயாது
சலனப்ப டாஞானம் வந்துதாராய்

அமரிற்சு ராபான திதிபுத்ர ராலோக
மதுதுக்க மேயாக மிஞ்சிடாமல்

அடமிட்ட வேல்வீர திருவொற்றி யூர்நாதர்
அருணச்சி காநீல கண்டபார

*மமபட்ச மாதேவ ரருமைச்சு வாமீநி
மலிநிட்க ளாமாயை விந்துநாதம்

வரசத்தி மேலான பரவத்து வேமேலை
வயலிக்குள் வாழ்தேவர் தம்பிரானே. (சா)

---

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான.

890. குருதி கிருமிகள் சலமல மயிர்தசை
மருவு முருவமும் அலமலம் அழுகொடு
குலவு பலபணி பரிமள மறுசுவை †மடைபாயல்

குளிரி லறையக மிவைகளும் அலமலம்
மனைவி மகவனை அநுசர்கள் முறைமுறை
குனகு கிளைஞர்க ளிவர்களும் அலமலம் ஒருநாலு

சுருதி வழிமொழி ‡சிவகலை யலதினி
உலக கலைகளும் அலமலம் இலகிய
தொலைவி லுனைநினை பவருற வலதினி அயலார்பால்

சுழல்வ தினிதென வசமுடன் வழிபடு
முறவும் அலமலம் மருளலை கடல்கழி
துறைசெ லறிவினை என துள மகிழ்வுற அருள்வாயே

---

* மம - என்னுடைய. † மடை-சோறு. ‡ சிவகலை - சைவசித்தாந்த நூல்.

விருது முரசுகள் மொகுமொகு மொகுவென
*முகுற †ககபதி முகிழ்திகழ் முகடதில்
விகட இறகுகள் பறையிட அலகைகள் நடமாட

விபுத ரரகர சிவசிவ சரணென
விரவு கதிர்முதி ரிமகரன் வலம்வர
வினைகொள் திரிசரர் பொடிபட அடல்செயும் வடிவேலா

மருது நெறுநெறு நெறுவென முறிபட
உருளு முரலொடு தவழரி மருகசெ
வனச மலர்சுனை புலிநுழை முழையுடை யவிராலி

மலையி லுறைகிற அறுமுக குருபர
கயலு மயிலையு மகரமு முகள்செநெல்
வயலி நகரியி லிறையவ அருள்தரு பெருமாளே. (எ)

---

தனதானன தனதானன தனதானன தனதானன
தனதானன தனதானன தனதான.

891. குயிலோமொழி அயிலோவிழி கொடியோவிடைபிடியோநடை
குறியீர்தனி செறியீரினி என்றுபாடிக்

குனுகாவடி பிடியாவிதழ் கடியாநகம் வகிராவுடை
குலையாகுறி அளையாவிரு கொங்கைமீதிற்

பயிலாமன மகிழ்மோகித சுகசாகர மடமாதர்கள்
பகையேயென நினையாதுற நண்புகூரும்

பசுபாசமு மகிலாதிக பரிபூரண புரணுகர
பதிநேருநி னருளால்மெய் யுணர்ந்திடேனோ

வெயில்வீசிய கதிராயிர வருணோதய விருணசன
விசையேழ்பரி ரவிசேயெனும் அங்காரசன்

விசிகாகவ மயில்பேடிகை படுபோதுசன் னிதியானவன்
விதிதேடிய திருவாளிய ரன்குமாரா

---

* முகுற - குமுற. எழுத்து நிலைமாறல். † ககபதி - கருடன்.

அயலூருறை மயிலாபல கலைமானுழை புலி *தோலரி
அகிலாமம தெறிகாவிரி வண்டல்மேவு
அதிமோகா வயலூர்மிசை திரிசேவக முருகேசா
அமராபதி அதில்வாழ்பவர் தம்பிரானே. (அ)

---

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான.

892. தாமரையின் மட்டு வாசமல ரொத்த
தாளிணைநி னைப்பில் அடியேனைத்
தாதவிழ்க டுக்கை நாகமகிழ் கற்ப
தாருவென †மெத்தி யவிராலி
மாமலையி னிற்பம் நீகருதி யுற்று
வாவெனவ ழைத்தென் மனதாசை
மாசினைய றுத்து ஞானமுத ளித்த
வாரமினி நித்த மறவேனே
காமனையெ ரித்த தீநயன நெற்றி
காதியசு வர்க்க நதிவேணி
கானிலுறை புற்றி லாடுபணி யிட்ட
காதுடைய அப்பர் குருநாதா
‡சோமனொடு ருக்கன் மீனுலவு மிக்க
சோலைபுடை சுற்று வயலூரா
சூடியத டக்கை வேல்கொடுவி டுத்து
சூர்தலைது ணித்த பெருமாளே. (௧)

---

தனதன்ன தான்ன தனதன்ன தான்ன
தனதன்ன தான்ன தனதான.

893. திருவுருப நேரக அழகதான மாமாய
திமிரமோக மானார்கள் கலைமூடுஞ்

---

* தோல்-யானை. † மெத்திய-மிகுந்த. ‡ சோமனொடுருக்கன்-சந்திரசூரியர்.

சிகரியூடு தேமாலை யடவியூடு போயாவி
செருகுமால ஞசார வினையேனைக்

கருவிழாது சிரோதி யடிமைபூண வாமாறு
கனவிலாள்சு வாமீநின் மயில்வாழ்வும்

கருணைவாரி கூரேக முகமும்வீர மாருத
கழலுநீப வேல்வாகு மறவேனே

சருவதேவ தேவாதி நமசிவாய நாமாதி
சயிலநாரி பாகாதி புதல்வோனே

* சதமகிவல் போர்மேவு குலிசபாணி † மால்யானை
சாசமான ‡ சாரிசெய் இளையோனே

மருவுலோக மீரேழு மளவிடாதொ ளுவான
வரையில்வீசு தாள்மாயன் மருகோனே

மநுநியாய சோணாடு தலைமையாக வேமேலை
வயலிமீது வாழ்தேவ பெருமாளே. (ம)

---

தத்த தனதன தனண தனண
தத்த தனதன தனண தனண
தத்த தனதன தனண தனண தனதான.

894. நெய்த்த சுரிகுழ லறலோ முகிலோ
பத்ம நறுநுதல் சிலையோ பிறையோ
நெட்டை யிணைவிழி கணையோ பிணையோ இனிதூறும்

நெக்க அமுதிதழ் கனியோ துவரோ
சுத்த மிடறது வளையோ கமுகோ
நிற்கு மிளமுலை குடமோ மலையோ அறவேதேய்ந்

தெய்த்த இடையது கொடியோ துடியோ
மிக்க திருவரை அரவோ ரதமோ
இப்பொ னடியிணை மலரோ தளிரோ எனமாலாய்

*சதமகி-இந்திரன். †மால்யானை-தெய்வயானை. ‡சாரிசெய்-விளையாடுகின்ற.

இச்சை விரகுடன் மடவா ருடனே
செப்ப மருளுட னவமே திரிவேன்
ரத்ந பரிபுர விருகா லொருகால் மறவேனே

புத்த ரமணர்கள் மிகவே கெடவே
தெற்கு நரபதி திருநீ றிடவே
புக்க அனல்வய மிகவே டுயவே உமையாள்தன்

புத்ர னெனவிசை பகர்நூல் மறைநூல்
கற்ற தவமுனி பிரமா புரம்வாழ்
பொற்ப கவுணியர் பெருமா னுருவாய் வருவோனே

சுத்த முடையசண் முகனே குகனே
வெற்பி லெறிசுட ரயிலா மயிலா
சத்தி கணபதி இளையா யுளையா ஒளிகூரும்

சக்ர தரஅரி மருகா முருகா
உக்ர இறையவர் புதல்வா முதல்வா
தட்ப முளதட வயலூ ரியலூர் பெருமானே. (கக)

---

தனதன தந்தன தாத்தன தனதன தந்தன தாத்தன
தனதன தந்தன தாத்தன தனதான.

895. முகிலள கஞ்சரி யாக்குழை இகழ்வன கண்சிவ வாச்சிவ
முறுவல்மு கங்குறு வேர்ப்பெழ அநுபோக
முகைபுள கஞ்செய வார்த்தையும் நிலையழி யும்படி கூப்பிட
முகுளித பங்கய மாக்கர நுதல்சேரத்
துகிலொழு குஞ்சல பாத்திர மெலியமி குந்துத ராக்கினி
துவளமு யங்கிவி டாய்த்தெரி வையர்தோளின்
*துவையலி நின்றன் †வியாத்தமும் வயலியல் வஞ்சியின் மேற்பயில்
சொருபமு நெஞ்சிலி ராப்பகல் மறவேனே
சகலம யம்பர மேச்சுரன் மகபதி யுய்ந்திட வாய்த்தருள்
சரவண சம்பவ தீர்க்கசண் முகமாகிச்
சருவுக்ர வுஞ்சகி ரோச்சய முருவவெ றிந்தகை வேற்கொடு
சமரமு கந்தனில் நாட்டிய மயிலேறி

* துவையலி - துவைக்கப்பட்டவன். † வியாத்தம் - கீர்த்தி.

அகிலமு மஞ்சிய வாக்ரம விகடப யங்கர ராக்கத
அசுரர கங்கெட வார்த்திடு கொடிகூவ

அமரர டங்கலு மாட்கொள அமரர்த லங்குடி யேற்றிட
அமரரை யுஞ்சிறை மீட்டருள் பெருமாளே. (௧௨)

---

தனன தத்தன தானன தானன
தனன தத்தன தானன தானன
தனன தத்தன தானன தானன தனதான.

896. முலைம றைக்கவும் வாசலி லேதலை
மறைய நிற்கவும் ஆசையு ளோரென
முகிழ்ந கைச்சிறு தூதினை யேவவு முகமோடே

முகம மூத்தவும் ஆசைகள் கூறவும்
நகம மூத்தவும் லீலையி லேயுற
முறைம சக்கவும் வாசமு லாமலர் அணைமீதே

கலைநெ கிழ்க்கவும் வாலிப ரானவர்
உடல்ச ளப்பட நாள்வழி நாள்வழி
கறைய ழிக்கவும் நானென வே*யணி விலையீதே

கடிய சத்திய மாமென வேசொலி
யவர்கு டப்பண மாறிட வீறுடு
கடுக டுத்திடு வாரொடு கூடிய தமையாதோ

மலையை மத்தென வாசுகி யேகடை
கயிறெ னத்திரு மாலொரு பாதியு
மருவு மற்றது வாலியு மேவிட அலையாழி

வலைய முட்டவொ ரோசைய தாயொலி
திமிதி மித்திமெ னுவெழ வேயலை
மறுகி டக்கடை யாவெழ மேலெழும் அமுதோடே

†துலைவ ருத்‡திரு மாமயில் வாழ்வுள
வயலை யற்புத னேவினை யானவை
தொடர றுத்திடு மாரிய§கேவலி மணவாளா

---

* அணி - அண்ணி. † துலை வரு - ஒப்பாகவந்த. ‡ திருமாமயில் - லக்ஷுமி. § கேவலி - முத்தியைத் தரவல்ல தெய்வயானை அம்மையார்.

அசல குலபதி தருமொரு திருமகள்
அமலை *விமலைக ளெழுவரும் வழிபட
அருளி அருணையி லுறைதரு மிறையவள் அபிராமி

அநகை அநுபவை அநுதயை அபிநவை
அதல முதலெழு தலமிவை முறைமுறை
அடைய அருளிய பழையவ ளருளிய சிறியோனே

†வசுவ பசுபதி மகிழ்தர வொருமொழி
மவுன மருளிய மகிமையு மிமையவர்
மரபில் வனிதையும் வனசரர் புதல்வியும் வடிவேலும்

மயிலு மியலறி புலமையு முபநிட
மதுர கவிதையும் விதரண கருணையும்
வடிவு மிளமையும் வளமையு மழகிய பெருமாளே. (௪)

957. நெடிய வடகுவ டிடியவு மெழுகிரி
நெறுநெ றெனநெரி யவுமுது பணிபதி
‡நிபிட முடிகிழி யவுநில மதிரவும் விளையாடும்

நிகரில் கலபியும் ரவியுமிழ் துவசமும்
நினது கருணையு முறைதரு பெருமையும்
நிறமு மிளமையும் வளமையு மிருசர ணமும்நீப

முடியு மபிநவ வனசரர் கொடியிடை
தளர வளர்வன ம்ருகமத பரிமள
முகுள புளகித தனகிரி தழுவிய திரடோளும்

மொகுமொ கெனமது கரமுரல் குரவணி
முருக னறுமுக னெனவரு வனபெயர்
முழுது மியல்கொடு பழுதற மொழிவதும் ஒருநாளே

கொடிய படுகொலை நிசிசர ருரமொடு
குமுகு மெனவிசை யுடனிசை பெறமிகு
குருதி நதிவித சதியொடு குதிகொள விதியோடக்

குமுறு கடல்குடல் கிழிபட வடுமர
மொளுமொ ளெனவடி யொடபலறி விழவுயர்
§குருகு பெயரிய வரைதுளை படவிடு சுடர்வேலா

* விமலைகள் எழுவர் - சப்த மாதர்கள் † வசுவ பசுபதி - அக்கினி சொரூபியாகிய சிவபிரான். ‡ நிபிட - நெருங்கிய § குருகு பெயரிய வரை - பறவைப் பெயருடைய மலை; அது கிரவுஞ்சகிரி என்னும் மலை.

இடியு முனைமலி குலிசமு மிலகிடு
கவள தவளவி கடதட கனகட
இபமு மிரணிய தாணியு முடையதொர் தனையானைக்

கிறைவ குருபர சரவண வெகுமுக
ககன புனிதையும் வனிதைய ரறுவரும்
எமது மகவென உமைதரு மிமையவர் பெருமாளே (௫)

958. பகிர நினைவொரு தினையள விலுமிலி
கருணை யிலியுன தருணையொ டுதணியல்
பழநி மலைகுரு மலைபணி மலைபல மலைபாடிப்

பரவு மிடறிலி படிறுகொ டிடறுசொல்
பழகி யழகிலி குலமிலி நலமிலி
*பதிமை யிலிபவு ஷதுமிலி மகிமையி லிகுலாலன்

திகிரி வருமொரு செலவினி லெழுபது
செலவு வருமன பவுரிகொ டலமரு
திருக னுருகுத லழுகுதல் தொழுகுதல் நினையாத

திமிர னியல்பிலி யருளிலி பொருளிலி
திருடன் மதியிலி கதியிலி விதியிலி
செயலி லுணர்விலி சிவபத மடைவதும் ஒருநாளே

மகர சலநிதி முறையிட நிசிசரன்
மகுட மொருபது மிருபது திரள்புய
வரையு மறவொரு கணைதெரி புயல்குரு நிர்பதூதன்

மடுவில் மதகரி முதலென உதவிய
வரத னிருதிறல் மருதொடு பொருதவன்
மதலை குதலையின் மறைமொழி யிகழிர ணியனுகம்

உகிரி னுதிகொடு வகிருமொ ரட†லரி
திகிரி தாமர கதகிரி எரியுமிழ்
உரக ‡சுடிகையில் நடநவி லரிதிரு மருகோனே

உருகு மடியவ ரிருவினை இருள்பொரு
முதிய தினகர இமகரன் வலம்வரு
உலக முழுதொரு நொடியினில் வலம்வரு பெருமாளே.

---

* பதிமை-பத்திமை. † அரி-நரசிங்கம். ‡ சுடிகை-பணமுடி.

959\. முருகு செறிகுழ லவிழ்தர முகமதி
முடிய வெயர்வர முறுதிரை யமுதன
மொழிகள் பதறிட வளைகல கலவென அணைபோக

முகையின் மிசையிடு வடமுடி யறஇடை
முறியு மெனஇரு பரிபுர மலறிட
முகுள அலரிள நிலவெழ இலவிதழ் பருகாநின்

றுருகி யுளமுட லுடலொடு செருகிட
வுயிரு மெனதுயி ரெனமிக வுறவுசெய்
துதவு மடமக ளிர்களொடு மமளியில் அநுராக

உததி அதனிடை விழுகினு மெழுகினும்
உழலு கினுமுன தடியிணை எனதுயிர்
உதவி யெனவுனை நினைவது மொழிவது மறவேனே

*எருவை ஒடுகொடி கெருடனும் வெளிசிறி
திடமு மிலையென வுலவிட அலகையின்
இனமும் நிணமுண எழு†குறள் களுமியல் இசைபாட

இகலி முதுகள மினமிசை யொடிதனி
இரண பயிரவி பதயுக மிருநட
மிடவு மிகவெதி ரெதிரெதி ரொருதனு இருகாலும்

வரிசை அதனுடன் வளைதர ஒருபது
மகுட மிருபது புயமுடன் ‡மடிபட
வலியி னொருகணை விடுகர முதலரி நெடுமாயன்

மருக குருபர சரவண மதில்வரு
மகிப சுரபதி பதிபெற அவுணர்கள்
மடிய இயல்கொளு மயில்மிசை வரவல பெருமாளே.

தனத்ததனத் தனத்ததனத் தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத் தனதான.

960\. இருட்குழலைக் குலைத்துமுடித் தெழிற்கலையைத் திருத்தியுடுத்
திணைக்கயலைப் புரட்டிவிழித் தநிபார

இழைக்களபப் பொருப்பணிகச் செடுத்துமறைத் தழைத்துவளைத்
திருத்தியகப் படுத்திநகைத் துறவாடிப்

பொருட்டுமிகத் துதித்திளகிப் புலப்படுசித் திரக்கரணப்
புணர்ச்சியிலைத் துருக்குபரத் தையர்மோகப்

*எருவை-கழு. † குறள்-பூதகணங்கள். ‡ மடிபட-மடிந்துபோக.

புழுத்துளையிற் றிளைத்ததனைப் பொறுத்தருளிச் சடக்கெனவப்
புறத்திலழைத் திருத்தியளித் திடுவாயே
உருத்திரரைப் பழித்துலகுக் குகக்கடையப் பெனக்ககனத்
துடித்தகரப் படுத்திகிரித் தலமேழும்
உடுத்தபொலப் பொருப்புவெடித் தொலைப்பமறுத் தினைப்பநெருப்
பொளிக்கவிருப் பிடத்தைவிடச் சுரரோடித்
திரைக்கடலுட் படச்சுழலச் செகத்ரயமிப் படிக்கலையச்
சிரித்தெதிர்கொக் கரித்துமலைத் திடுபாவி
செருக்கழியத் தெழித்ததிரத் திரைக்கடலிற் சுழித்தலையிற்
றிளைத்தவயிற் காக்குமரப் பெருமாளே. (௮)

961. வினைத்திரளுக் கிருப்பெனவித் தகப்படவிற் சலப்பிலமிட்
டிசைக்குமிடற் குடிற்கிடைபுக் கிடுமாய
விளைப்பகுதிப் பயப்பளவுற் றமைத்ததெனக் கருத்தமைவிற்
சகப்பொருள்மெய்க் குறப்பருகக் கருதாதே
எனக்கெதிரொப் பிசைப்பவரெத் தலத்துளரெச் சமர்த்தரெனப்
புறத்துரையிட் டிகழ்ச்சியினுற் றலையாதுன்
எழிற்கமலத் திணைக்கழலைத் தமிழ்ச்சுவையிட் டிரப்பர*எய்த்
திடக்கருணைத் திறத்தெனைவைத் தருள்வாயே
சினத்தைமிகுத் தனைத்துலகத் திசைக்கருதிக் கடற்பரவித்
திடத்தொடதிர்த் தெதிர்த்திடலுற் றிடுசூரன்
சிரத்துடன்மற் புயத்தகலத் தினிற்குருதிக் கடற்பெருகச்
சிறப்புமிகத் திறத்தொடுகைத் திடும்வேலா
கனத்தமருப் பினக்கரிநற் கலைத்திரள்கற் புடைக்கிளியுட்
கருத்துருகத் தினைக்குளிசைத் திசைபாடிக்
கனிக்குதலைச் சிறுக்குயிலைக் கதித்தமறக் குலப்பதியிற்
களிப்பொடுகைப் பிடித்தமணப் பெருமாளே. (௯)

தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன தனதான.

962. கொந்து வார்†குர வடியினு மடியவர்
சிந்தை வாரிச நடுவினு நெறிபல
கொண்ட வேதநன் முடியினு மருவிய குருநாதா

* எய்த்திட-அறிய. † குரவடி - திருவிடைக்கழியிற்குராமரத்தினடி.

கொங்கி லேர்தரு பழநியி லறுமுக
செந்தில் காவல தணிகையி லிணையிலி
கொந்து காவென மொழிதர வருசம யவிரோத

தந்த்ர வாதிகள் பெறவரி யதுபிறர்
சந்தி யாதது தனதென வருமொரு
சம்ப்ர தாயமு மிதுவென உரைசெய்து விரைநீபச்

சஞ்ச ரீகரி கரமுரல் தமனிய
கிண்கி ணீமுக விதபத யுகமலர்
தந்த பேரருள் கனவிலு நனவிலு மறவேனே

சிந்து வாரமு மிதழியு மிளநவ
சந்த்ர ரேகையு மரவமு மணிதரு
கொஞ்ச டாதரர் திருமக வெனவரு முருகோனே

செண்ப காடவி யினுமித ணினுமுயர்
சந்த னாடவி யினுமுறை குறமகள்
செம்பொ னூபுர கமலமும் வளையணி புதுவேயும்

இந்து வாண்முக வனசமு ம்ருகமத
குங்கு மாசல யுகளமு மதுரித
இந்த ளாம்ருத வசனமு முறுவலும் அபிராம

இந்த்ர கோபமு மாகத வடிவமு
மிந்த்ர சாபமு மிருகுழை யொடுபொரு
மிந்த்ர நீலமு மடலிடை எழுதிய பெருமாளே. (ம)

தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன தனதான.

963. முருகு லாவிய குழலினு நிழலினு
மருவ மாகிய இடையினு நடையினு
முளரி போலுநல் விழியினு மொழியினு மடமாதர்

முனிவி லாநகை வலையினு நிலையினு
மிறுக வாரிடு மலையெனு முலையினு
முடிவி லாததொர் கொடுவிட மடுவித மயலாகி

நாகி லேவிழு மவலனை அசடனை
வழிப டாதவொர் திருடனை மருடனை
நலமி லாவக கபடனை விகடனை வினையேனை

நடுவி லாதன படிறுகொ ளிடறுசொல்
வதனில் மூழ்கிய மறவனை இறவனை
நளின மார்பத மதுபெற ஒருவழி அருள்வாயே

வரிய ராவினின் முடிமிசை நடமிடு
பாத மாயவ னெழுபுவி யளவிடு
வரதன் மாதவ னிரணிய னுடலிரு பிளவாக

வகிரு மாலரி திகிரிய னலையெறி
தமர வாரிதி முறையிட நிசிசரன்
மகுட மானவை ஒருபதும் விழவொரு கணையேவும்

கரிய மேனியன் மருதொடு பொருதவ
னினிய பாவல னுரையினி லொழுகிய
கடவுள் வேயிசை கொடுநிரை பரவிடும் அபிராமன்

கருணை நாரண னரபதி சுரபதி
மருக கானக மதனிடை உறைதரு
கரிய வேடுவர் சிறுமியொ டுருகிய பெருமாளே. (௧௧)

தானதன தந்தான தானதன தந்தான
தானதன தந்தான தனதான.

964. நீருநில மண்டாத தாமரைப டர்ந்தோடி
நீளமக லஞ்சோதி வடிவான

நேசமல ரும்பூவை மாதின்மண மும்போல
நேர்மருவி உண்காதல் உடன்மேவிச்

சூரியனு டன்சோம னீழலிவை அண்டாத
சோதிமரு வும்*பூமி அவையூடே

தோகைமயி லின்பாக முமௌனம கிழ்ந்தாட
சோதியயி லுந்தாரும் அருள்வாயே

வாரியகி லங்கூச ஆயிரப ணஞ்சேடன்
வாய்விட†வொ டெண்பாலு முடுபோல

வார்மணியு திர்ந்தோட வேகவினி றைந்தாட
மாமயில்வி டுஞ்சேவல் கொடியோனே

---

* பூமி - மோட்சவீடு. † ஒ டெண்பாலும் - ஒடு எண்பாலும்.

ஆரியன வனதாதை தேடியிலா மும்பாடு
மாடவரு ணஞ்சோதி    அருள்பாலா
ஆனைமுக வன்தேடி போட்டடவ னங்காத
லாசைமரு வுஞ்சோதி    பெருமாளே. (கஉ)

தத்ததன தானன தத்ததன தானன
தத்ததன தானன    தனதான.

965. பக்கமுற கோரான மக்களுட னேமாதர்
பத்தியுடன் மேல்மூடி    இனிதான
பட்டினுட னேமாலை இட்டுநெடி தோர்பாடை
பற்றியணை வோர்கூவி    அலைநீரிற்
புக்குமுழு காநீடு துக்கமது போய்வேறு
பொற்றியிட வேபாவி    பிரியாமுன்
பொற்கழலை நாடோறு முட்பரிவி னாலோது
புத்திநெடி தால்வாழ்வு    புரிவாயே
இக்கனுக வேநாடு முக்கணர்ம காதேவ
ரெப்பொருளு மாமீசர்    பெருவாழ்வே
எட்டவரி தோர்வேலை வற்றமுது சூர்மாள
எட்டியெதி ரேயேறு    மிகல்வேலா
மக்களொடு வானாடர் திக்கில்முனி வோர்சூழ
மத்தமயில் மீதேறி    வருவோனே
வைத்தநிதி போல்நாடி நித்தமடி யார்வாழ
வைத்தபடி மாறாத    பெருமாளே. (கந)

தந்தன தனதனந் தந்தன தனதனந்
தந்தன தனதனந்    தனதான.

966. உம்பரா ரமுதெனுந் தொண்டைவா யமுதமுண்
டுண்டுமே கலைகழன்    றயலாக
உந்திவா வியில்விழுந் தின்பமா முழுகியன்
பொன்றிலா ரொடுதுவண்    டணைமீதே
செம்பொனார் குடமெனுங் கொங்கையா பரணமுஞ்
சிந்தவாள் விழிசிவந்    தமாடத்
*திங்கள்வேர் வுறவனந் தின்பவா ரியில்விழுஞ்
சிந்தையே †னெனவிதங்    கரைசேர்வேன்

* திங்கள் - திங்கள் போன்ற முகம். † என விதம் - என்ன விதம்.

கொம்புநா லுடையவெண் கம்பமால் கிரிவருங்
கொண்டலோ டசையல்சங் கமபாரக்
கும்பமால் வரைபொருந் திந்த்ரபூ பதிதருங்
கொண்டலா னையைமணஞ் செயும்வீரா
அம்புரா சியுநெடுங் குன்றுமா மரமுமன்
றஞ்சவா னவருறுஞ் சிறைமீள
அங்கநான் மறைசொலும் பங்கயா சனமிருந்
தங்கைவே லுறவிடும் பெருமாளே. (கச)

967. வண்டுதான் மிகவிடங் கொண்டகா ரளகமென்
மந்திமா மலர்சொரிந் துடைசோர
வம்புசேர் கனிபொருந் தின்பவா யமுதருந்
தந்தமா மதனலம் விதமாக
விண்டுமே னிகள்துவண் டன்றில்போ லுளமிரண்
டொன்றுமா யுறவழிந் தநுபோகம்
விஞ்சவே தருமிளங் கொங்கையார் வினைகடந்
துன்றன்மே லுருகவென் றருள்வாயே
பண்டுபா ரினையளந் துண்டமால் மருகசெம்
பைம்பொன்மா நகரிலிந் திரன்வாழ்வு
பண்பெலா மிகுதிபொங் கின்பயா னையைமணந்
தன்பினோ ரகமமர்ந் திடுவோனே
அண்டர்தா மதிபயங் கொண்டுவா டிடநெடுந்
தண்டுவாள் கொடுநடந் திடுசூரன்
அங்கமா னதுபிளந் தெங்கும்வீ றிடவெகுண்
டங்கைவே லுறவிடும் பெருமாளே. (கரு)

தானனா தந்தனந் தானனா தந்தனந்
தானனா தந்தனந் தனதான.

968. காதல்மோ கந்தருங் கோதைமார் கொங்கைசிங்
காரநா கஞ்செழுங் கனிவாய்கண்
காளகூ டங்கொடுங் காலரூ பம்பொருங்
காமபா ணஞ்சுரும் பினம்வாழும்

ஓதிகார் செஞ்சொல்மென் பாகுதே னென்றயர்ந்
தோாமோ கந்தவென் றுரையாதே
ஊசலா டும்புலன் * தாரியே சென்றுநின்
றேயுமா ருென்றையுங் கருதாதே
தாதகி சண்பகம் பூகமார் கந்தாந்
தாரம் † வா சந்திசந் தனநீடு
‡ சாமவே தண்டவெங் கோபகோ தண்டசந்
தானமா தெங்கள்பைம் புனமேவும்
தீதிலா வஞ்சியஞ் சீதபா தம்படுஞ்
சேகரா தண்டையங் கழல்பேணித்
தேவிபா கம்பொருந் தாதிநா தன்தொழுந்
தேசிகா உம்பர்தம் பெருமாளே. (௧௬)

தனன தனன தாத்தன தனன தனன தாத்தன
தனன தனன தாத்தன தனதான.

969. சரியு மவல யாக்கையு ளெரியு முரிய தீப்பசி
தணிகை § பொருடி ராப்பகல் தடுமாறுஞ்
சகல சமய தார்க்கிகர் கலக மொழிய நாக்கொடு
சரண கமல மேத்திய வழிபாடற்
றரிய துரிய மேற்படு கருவி கரண நீத்ததொ
ரறிவின் வடிவ மாய்ப்புள கிதமாகி
அவச கவச மூச்சற அமரு மமலர் மேற்சில
ரதிப திவிடு பூக்கணை படுமோதான்
விரியு முதய பாஸ்கர கிரண மறைய வார்ப்பெழு
மிடையு மலகில் தேர்ப்படை ஒடுகூழும்
விகட மகுட பார்த்திப ரனைவ ருடனு நூற்றுவர்
விசைய னொருவ னுற்பட ஒருதூது
திரியு மொருப ராக்ரம அரியின் மருக பார்ப்பதி
சிறுவ தறுகண் வேட்டுவர் கொடிகோவே
திமிர உததி கூப்பிட அவுண மடிய வேற்கொடு
சிகரி தகர வீக்கிய பெருமாளே. (௧௭)

* தாரி - வழி. † வாசந்தி - குருக்கத்தி ‡ சாம வேதண்டம்-கரிய நிறத்தையுடைய மலை. § பொரு டிராப்பகல் - பொருட்டாக இராப்பகல்.

970. மகளு மனைவி தாய்க்குல மனையு மனைவர் வாக்கினில்
மறுகி புறமு மார்த்திட உடலூடே
மருவு முயிரை நோக்கமு மெரியை உமிழ ஆர்ப்பவ
ருடனு மியமன் மாட்டிட அணுகாமுன்
உகமு முடிவு மாச்செனு முசய மதியி னேட்டமு
முளது மிலது மாச்சென உறைவோரும்
உருகு முரிமை காட்டிய முருக னெனவு நாக்கொடு
உனது கழல்கள் போற்றிட அருள்தாராய்
புகல வரிய போர்ச்சிலை விரக விசைய னூர்புக
முடைய திருத ராட்டிர புதல்வோர்தம்
புரவி கரிகள் தேர்ப்படை மடிய அரசை மாய்த்துயர்
புவியின் விதன மாற்றினர் மருகோனே
மிகவு மலையு மாக்கடல் முழுது மடிய வேற்றரு
வெனவு மருவி வேற்கொடு பொருசூரன்
விரைசெய் நெடிய தோட்கண அடலு முருவ வேற்படை
விசைய முறவும் வீக்கிய பெருமாளே. (கஅ)

---

தான தாத்தன தாத்தன தான தாத்தன தாத்தன
தான தாத்தன தாத்தன தனதான.

971. *ஆவி காப்பது மேற்பத மாத விற்புரு டார்த்தமி
தாமெ னுப்பர மார்த்தம துணராதே
ஆனை மேற்பரி மேற்பல சேனை போற்றிட விட்டொட
நேக நாட்டொடு காட்டொடு தடுமாறிப்
பூவை மார்க்குரு காப்புதி தான கூத்தொடு பாட்டொடு
பூவி னுற்றம ருத்தன கிரிதோயும்
போக போக்யக லாத்தொடு வாழ்ப ராக்கொடி ராப்பகல்
போது போக்கியெ னுக்கையை விடலாமோ
தேவி பார்ப்பதி சேர்ப்பர பாவ னூர்க்கொரு சாக்ரவ
தீத தீட்சைப ரீட்சைகள் அறவோதும்
தேவ பாற்கர நாற்கவி பாடு லாட்சண மோட்சதி
யாக ராத்திகழ் கார்த்திகை பெறுவாழ்வே
மேவி னூர்க்கருள் தேக்குது வாத சாட்சச டாட்சர
†மேரு வீழ்த்தப ராக்ரம வடிவேலா

---

* ஆவி காப்பது - பிறப்பிறப்பு நீப்பது. † மேரு - மலை, இங்கே கரவுஞ்சம்.

விர ராக்கத ரார்ப்பெழ வேத தாட்சக னுக்கெட
வேலை கூப்பிட வீக்கிய பெருமாளே.(௧௧)

972. ஏக மாய்ப்பல வாய்ச்சிவ போக மாய்த்தெளி வாய்ச்சிவ
மீதெ னுக்குரு வார்த்தையை உணராதே

ஏழு பார்க்கும்வி யாக்கிரன் யானெ னுப்பரி தேர்க்கரி
ஏறு மாப்பிறு மாப்புடன் அரசாகித்

தோகை மார்க்கொரு காற்றொலை யாத வேட்கையி னுற்கெடு
சோர்வி னுற்கொடி தாக்கையை இழவாமுன்

சோதி காட்டவ ராச்சுத நாத னுர்க்கருள் போற்றிய
தூரி தாப்பர மார்த்தம தருள்வாயே

நாக மேற்றுயில் வார்க்கய னுன பேர்க்கரி யார்க்கொரு
ஞான வார்த்தையி னுற்குரு பரனுய

நாத நாட்டமு ருப்பல காலும் வேட்கையி னுற்புகல்
நாவ லோர்க்கரு ளாற்பதம் அருள்வாழ்வே

வேக மேற்கொள ராப்புடை தோகை மேற்கொடு வேற்கொடு
வீர*மாக்குலை யாக்குல வரைசாய

மேலை நாட்டவர் பூக்கொடு வேல போற்றியெ னுத்தொழ
வேலை கூப்பிட வீக்கிய பெருமாளே. (௨௰)

---

தனதன்ன தனதனன தனதனன தனதனன
தனதனன தனதனன தனதான.

973. அளகநிரை குலையவிழி குவியவளை கலகலென
அமுதமொழி பதறியெழ அணியாரம்

அழுகொழுகு புளகமுலை குழையவிடை துவளமிக
அமுதநிலை அதுபரவ அதிமோகம்

உளமுருக வருகலவி தருமகளிர் கொடுமையெனு
முறுகபட மதனில்மதி அழியாதே

உலகடைய மயிலின்மிசை நொடியளவில் வலம்வருமு
னுபயநறு மலரடியை அருள்வாயே

* மாக்குலையாக்குலவரை - மாமரமாகிய அசுரகுலப் பெருக்கு.

வளையுமலை கடல்சுவற விடுபகழி வாதனிரு
மருதினொடு பொருதருளும் அபிராமன்

வரியாவின் மிசைதுயிலும் வாதஜய மகள்கொழுநன்
மருகவமர் முடுகிவரு நிருதேசர்

தளமுறிய வரைதகா அசுரர்பதி தலைசிதற
தகனமெழ முடுகவிடு வடிவேலா

தாளமணி வடமிலகு குறவர்திரு மகள் கணவ
சகலகலை முழுதும்வல பெருமாளே. (உக)

974. அனகனென அதிகனென அமலனென அசலனென
அபயனென அதுலனென அனமாயன்

அடல்மதன னெனவிசைய னெனமுருக னென*நெருடி
அவர்பெயரு முடைசெருகி இசைபாடி

வனசமணி பணிலமழை சுரபிசுரர் தருநிகர்கை
மகிபவென ஒருதினைய ளவுமீயா

மனிதர்கடை தொறுமுழலு மிடியொழிய மொழியொழிய
மனமொழிய ஒருபொருளை அருள்வாயே

இனனிலவு தலைமலைய அடியினுகி ரிலைகளென
இருசதுர திசையிலுர கமும்வீழ

இரணியச யிலம்ரசித சயிலமர கதசயில
மெனவிமலை யமுனையென நிழல்வீசிக்

கனகமழை யுகைகடவு ளுடலமென முதியவிழி
கதுவியெழில் பொதியமிசை படர்கோலக்

கலபகக மயில்கடவி நிருதர்கஜ ரததுரக
கடகமுட னமர்பொருத பெருமாளே. (உஉ)

975. குடருமல சலமுமிடை இடைதடியு முடையளவு
கொழுவிழுதி ரமும்வெளிற ளறுமாகக்

கொளகொளென அளவில்புழு நெளுநெளென விளைகுறுதி
குமுகுமென இடைவழியில் வாநாறும்

உடலின்மண மலிபுழுகு தடவியணி கலமிலக
உலகமரு ளுறவரும ரிவையாரன்

பொழியவினை ஒழியமன மொழியவிரு ளொழிய†என
தொழிவிலக லறிவையருள் புரிவாயே

* நெருடி - இணைத்து. † எனது ஒழிவு - நான் என தென்பதற்றவிடம்.

வடகனக சயிலமுத வியசயில மெனநெடிய
வடிவுகொளு நெடியவிறல் மருவாரை

வகிருமொரு திகிரியென மதிமுதிய பணிலமென
மகரசல நிதிமுழுகி விளையாடிக்

கடலுலகை அளவுசெய வளருமுகி லெனவகில
ககனமுக டுறநிமிரு முழுநீலக்

கலபகக மயில்கடவி நிருதர்கஜ ரததுரக
கடகமுட னமர்பொருத பெருமாளே. (உங)

976. வதைபழக மறலிவிறல் மதனன்வழி படுதுமென
வயிரமா கதமாகம் அளவாக

வரிசிதறி விடமளவி வளருமிரு கலகவிழி
வலையிலொரு ருயிர்கவர வருமாய

இதையமள விடவரிய அரிவையர்கள் நெறியொழுகி
எழுபிறவி நெறியொழிய வழிகாணு

இடர்கள்படு குருடனெனை அடிமைகொள மகிழ்வொடுன
திருநயன கருணைசிறி தருள்வாயே

பதயுகள மலர்தொழுது பழுதில்பொரி அவல்துவரை
பயறுபெரு வயிறு*நிறை யவிடாமுப்

பழமுமினி துதவிமுனி பகரவட சிகரிமிசை
பரியதனி †எயிறுகொடு ‡குருநாடர்

கதைமுழுது மெழுதுமொரு களிறுபிளி றிடநெடிய
கடலுலகு நொடியில்வரும் அதிவேகக்

கலபகக மயில்கடவி நிருதர்கஜ ரததுரக
கடகமுட னமர்பொருத பெருமாளே. (உச)

977. விடமளவி யரிபரவு விழிகுவிய மொழிபதற
விதறிவளை கலகலென அநுராகம்

விளையமிருக மதமுகுள முலைபுளக மெழதுதலில்
வியர்வுவர அணிசிதற மதுமாலை

அடாளக மவிழவணி துகிலகல அமுதபொதி
இதழ்பருகி உருகியரி வையரோடே

* நிறைய இடா-நிறைய இட்டு. † எயிறு-கொம்பு. ‡ குருநாடர்கதை-பாரதம்.

அமளிமிசை அமளிபட விரகசல தியில்முழுகி
அவசமுறு கினுமடிகள் மறவேனே
உடலுமுய லகன்முதுகு நெறுநெறென எழுதிமிர
உரகர்பில முடியவொரு பதமோடி
உருவமுது ககனமுக டிடியமதி முடிபெயா
உயாவகி லபுவனம் திரவீசிக்
கடகதா தலமிலக நடனமிடு மிறைவர்மகிழ்
கருதரிய விதமொடமு குடனுடும்
கலபகக மயில்கடவி நிருதர்கஜ ரதஅரக
கடகமுட னமர்பொருத பெருமாளே. (உரு)

தானத்த தானத்த தானத்த தானத்த
தானத்த தானத்த தனதான.

978\. தோடுற்ற காதொக்க நீடுற்ற போருற்ற
தோய்மைக்க ணல்மிக்க நுதலாலே
தோள்வெற்பி னல்விற்கை வேளுக்கு மேன்மக்கள்
சோர்கைக்கு மால்விற்கு மடவார்தம்
ஊடற்கு ளேபுக்கு வாடிக்க லாமிக்க
ஓசைக்கு நேசித்து உழலாதே
ஊர்பெற்ற தாம்சுற்ற மாயுற்ற தாள்பற்றி
ஓதற்கு நீசற்றுள் *உணர்வாயே
†வேடர்க்கும் நீள்சொர்க்கம் வாழ்விக்க வோர்வெற்பின்
மீதுற்ற பேதைக்கொர் மணவாளா
வேழத்தி னுபத்தை மீள்வித்த மாலொக்க
வேதத்தி லேநிற்கும் அயனும்
தேடற்கொ ணுநிற்கும் வேடத்தர் தாம்வைத்த
சேமத்தி னுமத்தை மொழிவோனே
தீதற்ற நீதிக்கு ளேய்பத்தி கூர்பத்தர்
சேவிக்க வாழ்வித்த பெருமாளே. (உசு)

979\. தோலத்தி யாலப்பி னலொப்பி லாதுற்ற
தோளுக்கை காலுற்ற குடிலூடே

* உணர்வாயே-உணர்த்தாயா. † வேடர்க்கும் - வேடரையும்.

சோர்வற்று வாழ்வுற்ற கால்பற்றி பேகைக்கு
வேதித்தன் சூலத்தன் அணுகாமுன்
கோலத்தை வேலைக்கு ளேவிட்ட சூர்கொத்தொ
டேபட்டு வீழ்வித்த கொலைவேலா
கோதற்ற பாதத்தி லேபத்தி கூர்புத்தி
கூர்கைக்கு நீகொற்ற அருள்தாராய்
ஆலத்தை ஞாலத்து ளோர்திக்கு வானத்த
ராவிக்கள் மாள்வித்து மடியாதே
ஆலித்து மூலத்தொ டேயுட்கொ ளாதிக்கு
மாம்வித்தை யாமத்தை அருள்வோனே
சேலொத்த வேலொத்த நீலத்து மேலிட்ட
தோதக்கண் மானுக்கு மணவாளா
தீதற்ற நீதிக்கு ளேய்பத்தி கூர்பத்தர்
சேவிக்க வாழ்வித்த பெருமாளே. (உஎ,

---

தானனா தத்தனத் தானனா தத்தனத்
தானனா தத்தனத் தனதான.

980. கோலகா லத்தைவிட் டாசுபா டக்கொடிக்
கோவைபா டக்கொடிக் கொடிவாதிற்
கோடிகூ ளக்கவிச் சேனைசா டக்கெடிக்
கூறுகா ளக்கவிப் புலவோன்யான்
சீலகா லப்புயற் பாரிசா தத்தருத்
யாகமே ருப்பொருப் பெனவோதும்
சீதரா சித்ரவித் தாரமே செப்பிடக்
கேளனா நிற்பதைத் தவிர்வேனோ
ஆலகா லப்பணிப் பாயல்நீ ளப்படுத்
தாரவா ரக்கடற் கிடைசாயும்
ஆழிமா லுக்குநற் சாமவே தற்குமெட்
டாதரூ பத்தினிற் கிடாய
கால்கா லப்புச் சாலுமா லுற்றுமைக்
காகவே ளைப்புகக் கழுநீராற்
காதும்வே ழச்சிலைப் பாரமீ னக்கொடிக்
காமவேள் மைத்துனப் பெருமாளே. (உஅ)

981. ஞாலமோ டொப்பமக் காளெனு நற்சொலைத்
திதெனு நற்றவத் தணைவோர்தம்
நாதமோ டுட்கருத் தோடவே தர்க்கமிட்
டோயுநா யொப்பவர்க் கிளையாதே
நீலமே னிக்குலத் தோகைமே லுற்றுநிட்
டூரசூர் கெட்டுகப் பொரும்வேலா
நேசமாய் நித்தநிற் றுளைநீ ளச்சமற்
றேதநீ திப்பொருட் டாவேணும்
கோலவா ரிக்கிடைக் கோபரா விற்படுத்
தானும்வே தக்குலத் தயனும்
கூறும்*வா னப்புவிக் கூறுதி ரக்குறிப்
போதுறு நிற்பவக் கொடிதான
காலன்மார் புற்றுதைத் தானுமோர் கற்புடைக்
கோதைகா மக்கடற் கிடைமூழ்கக்
காவிசேர் கொத்தலர்ப் பாண†மேய் வித்தகக்
காமவேள் மைத்துனப் பெருமாளே. (உக)

---

தனதாத்த தைய தனதாத்த தைய
தனதாத்த தைய தனதான.

982. கலைகோட்டு வல்லி விலைகாட்டு வில்ல
ரிவைமார்க்கு மெய்யி லவநூலின்
கலைகாட்டு பொய்ய மலைமாக்கள் சொல்ல
கடுகாட்டி வெய்ய அதிபாரக்
கொலைகோட்டு கள்ளி டறிவோர்க்கு முள்ள
முகையாக்கை நையு முயிர்வாழக்
கொடிகோட்டு மல்லி குரவார்க்கொள் தொல்லை
மறைவாழ்த்து செய்ய கழல்தாராய்
சிலைகோட்டு மள்ளர் தினைகாத்த கிள்ளை
முகைவேட்ட பிள்ளை முருகோனே
திணிகோட்டு ‡வெள்ளி பவனுட்டி னுள்ள
சிறைமீட்ட§தில்ல மயில்வீரா

* வானப்புவிக்கு - வானத்துக்கும் புவிக்கும் † ஏய் எய். ‡ வெள் இபவன்-வெள்ளை யானையையுடைய தேவேந்திரன். § தில்லம் - காடு.

அலைகோட்டு வெள்ள மலைமாக்கள் விள்ள
மலைவீழ்த்த வல்ல அயில்மோகா
அடிபோற்றி அல்லி முடிசூட்ட வல்ல
அடியோர்க்கு நல்ல பெருமாளே. (௩௰)

983. குடிவாழ்க்கை அன்னை மனையாட்டி பிள்ளை
குயில்போற்ப்ர சன்ன மொழியார்கள்
குலம்வாய்த்த நல்ல தனம்வாய்த்த தென்ன
குருவார்த்தை தன்னை உணராதே
இடநாட்கள் வெய்ய நமனீட்டி தொய்ய
இடர்கூட்ட இன்னல் கொடுபோகி
இடுகாட்டி லென்னை எரியூட்டு முன்னு
னிருதாட்கள் தம்மை உணர்வேனோ
வடநாட்டில் வெள்ளி மலைகாத்து புள்ளி
மயிலூக்கவல்ல குமரேசா
வடிவாட்டி வள்ளி அடிபோற்றி வள்ளி
மலைகாத்த நல்ல மணவாளா
அடிநாட்கள் செய்த பிழைநீக்கி என்னை
அருள்போற்றும் வண்மை தருவாழ்வே
அடிபோற்றி அல்லி முடிசூட்ட வல்ல
அடியோர்க்கு நல்ல பெருமாளே. (௩௧)

தத்தா னத்தா தத்தா னத்தா தத்தா னத்தத் தனதான.

984. உற்பா தப்பூ தக்கா யத்தே யொத்தோ டித்தத் தியல்காலே
உட்பூ ரித்தே சற்றே சற்றே யுக்கா ரித்*தற் புதனேரும்
†அற்பா யிற்றுய் நிற்பா ரைப்போ லப்பா வித்துத் திரிவேனுக்
கப்பா சத்தா லெட்டா அப்பா லைப்போ தத்தைப் புரிவாயே
‡பொற்பார் பொற்பார் புத்தே ளிர்க்கா கப்போய் முட்டிக் கிரிசாடிப்
புக்கா ழிச்சூழ் கிட்டா கிச்சூர் பொட்டா கக்குத் தியவேலா
முற்பா டப்பா டற்று ருக்கோர் §முட்பா டற்கப் பொருளீவாய்
முத்தா முத்தீ யத்தா சுத்தா முத்தா முத்திப் பெருமாளே. ()

---

* அற்புதன்-கடவுள். † அற்பாய் இல் தாய் - அன்பாய் இல்லறத்தைத் தழுவி. ‡ பொற்பு ஆர் பொன் பார் - அழகு நிறைந்த பொன்னுலகம். § முட்பாடு அற்க-முட்டுப்பாடு நீங்க.

985. எற்று வற்று மட்டா கத்தி யிற்கால் செக்கட் பிறைவாளே
இற்றார் கைப்பா சத்தே கட்டா டிக்கோ பித்துக் கொடுபோமுன்
உற்றார் பெற்றார் கற்று நிற்பா ரொட்டோம் விட்டுக் கழியீரென்
றற்றே துற்றே பற்று நிற்பா ரக்கா லத்துக் குறவார்தான்
பற்றார் மற்று டைக்கே குத்தா பற்று னப்பிற் களைவோனே
பச்சே னற்கா னத்தே நிற்பாள் பொற்பா தத்திற் பணிவோனே
முற்று வற்று மெய்ப்போ தத்தே உற்றார் சித்தத் துறைவோனே
முத்தா முத்தி யத்தா சுத்தா முத்தா முத்திப் பெருமாளே.

---

986. பட்டா டைக்கே பச்சோ லைக்கா துக்கே பத்தித் தனமா*கும்
பக்கே நிட்டூ ரப்பார் வைக்கே பட்டா சைப்பட் டுறவாடி
ஒட்டார் நட்டார் †வட்டா ரத்தே சுற்றே முற்றத் தடுமாறும்
ஒட்டா ரப்பா விக்கே மிக்கா‡முற்றாள் கிட்டத் தகுமோதான்
கட்டா விப்போ துட்டா விப்பூ கக்கா விற்புக் களிபாடும்
கற்பூர் நற்சா ரக்கா ழித்தோய் கத்தா சத்தித் தகவோடே
முட்டா கக்கூ ரிட்டே னற்றாள் முற்று மற்கொட் குமரேசா
முத்தா முத்தி யத்தா சுத்தா முத்தா முத்திப் பெருமாளே.

---

987. §பத்தே ழெட்டெ ரெட்டேழ் ரட்டால் வைத்தே பத்திப் படவேயும்
பைப்பீ றற்கூ ரைப்பா சத்தா சற்கா ரத்துக் கிரைதேடி
எத்தே சத்தோ டித்தே சத்தோ டொத்தேய் ‖சப்தத் திலுமோடி
எய்த்தே நத்தா பற்று மற்று திற்றே முக்கக் கடவேனோ
சத்தே முற்று யத்தா னைச்சூர் கற்சா டிக்கற் பணிதேசா
சட்சோ திப்பூ திப்பா லத்தா அக்¶கோ டற்செச் சையமார்பா
$முத்தா பத்தா ரொட்டா வைப்பா வித்தா முத்தர்க் கிறையோனே
முத்தா முத்தி யத்தா சுத்தா முத்தா முத்திப் பெருமாளே. ()

---

988. பொற்கோ வைக்கே பற்கோ வைக்கே பொய்ப்போகத்தைப் பகர்வார்தம்
பொய்க்கே மெய்க்கே பித்தா கிப்போ கித்தா கைக்குப் பொருள்தேடி
தெற்கோ டிக்கா சிக்கோ டிக்கீழ் திக்கோ டிப்பச் சிமமான
திக்கோ டிப்பா ணிக்கோ டித்தீ வுக்கோ டிக்கெட் டிடலாமோ

---

* கும்பக்கே-கும்பத்துக்கே † வட்டாரத்து எசு உற்றே எனப்பிரிக்க. ‡ உற்றாள்-உன் தாள். § பத்து ஏழு எட்டுபதிறுறு ஏழு-சஅ, இதன் இரட்டை 96 தத்துவம். ‖ சப்தத்திலும்-சப்த தீவிலும். ¶ கோடல்-காந்தல் மலர். $ முத் தாபத்தார்-தாபத் திரயமுடையவர்கள். () பாணி-நீர், கடல்.

தற்கோ லிப்பா விப்பார் நற்சி ரைச்சா ரத்தற் பரமானுய்
தப்பா முப்பா லைத்தே டித்தே சத்தோர் நிற்கத் தகையோடே
முற்கா னப்பே தைக்கா கப்போய் முற்பால் வெற்பிற் *கணியானுய்
முத்தா முத்தி யத்தா சுத்தா முத்தா முத்திப் பெருமாளே. ()

---

989. பொற்பூவைச்சிரைப்போலப்போதப்பேசிப்பொற் கனிவாயின்
பொய்க்காமத்தேமெய்க்காமப்பூணைப்பூண்வெற்பிற் றுகில்சாயக்
கற்பா லெக்கா வுட்கோ லிக்கா சுக்கே கைக்குத் திடுமாதர்
கட்கே பட்டே நெட்டா சைப்பா டுற்றே கட்டப் படுவேனே
சொற்கோ லத்தே நற்காலைச்சே விப்பார் சித்தத் துறைவோனே
தொக்கே கொக்கா சிச்சூ ழச்சூர் விக்கா முக்கத் தொடும்வேலா
முற்கா லத்தே வெற்பேய் வுற்றூர் முத்தாள் முத்தச் சிறியோனே
முத்தா முத்தி யத்தா சுத்தா முத்தா முத்திப் பெருமாளே. ()

---

990. மெய்க்கூ ணைத்தே டிப்†பூ மிக்கே வித்தா ரத்திற் பலகாலும்
வெட்கா மற்சே ரிச்சோ ரர்க்கே வித்தா சைச்சொற் கலையோதிக்
கைக்கா ணிக்கோ ணற்போ தத்தா ரைப்போ லக்கற் பழியாதுன்
கற்பூ டுற்றே நற்று ளைப்பா டற்கே நற்சொற் றருவாயே
பொய்க்கோணத்தாழ்மெய்க்கோ ணிப்போய் முற்பால்வெற்பிற் புனமானைப்
பொற்றூ ளிற்சேர் கைக்கா கப்பா தத்தாள் பற்றிப் புகல்வோனே
முக்கோ ணத்தா னத்தா ளைப்பால் வைத்தார் முத்தச் சிறியோனே
முத்தா முத்தி யத்தா சுத்தா முத்தா முத்திப் பெருமாளே. ()

---

991. மெய்ச்சார் வற்றே பொய்ச்சார் வுற்றே நிச்சார்‡துற்பப் பவவேலை
விட்டே றிப்போ கொட்டா மற்றே மட்டே யத்தத் தையர்மேலே
பிச்சா யுச்சா கிப்போ ரெய்த்தார் பத்தார் விற்பொற் கழல்பேணிப்
பிற்பால் பட்டே நற்பால் பெற்றூர் முற்பா லைக்கற் பகமேதான்
§செச்சா லிச்சா லத்தே றிச்சே லுற்று ணித்துப் பொழிலேறும்
‖செக்கோ டைக்கோ டுக்கே நிற்பாய் நித்தா செக்கர்க் கதிரோனல்
முச்சா லிச்சா லித்தாள் வெற்பாள் முத்தார் வெட்கிப் புயவேளே
முத்தா முத்தி யத்தா சுத்தா முத்தா முத்திப் பெருமாளே. ()

---

* கணி - வேங்கைமரம். † பூமிக்கே - பூமியினிடத்தில் ‡துற்ப-துன்ப. § செச்சாலிச் சாலம்-செந்நெற் கூட்டம். ‖ செக்கோடைக் கோடுக்கே-திருச்செங்கோட்டு மலையி னுச்சி ஸ்தானத்திலேயே.

தனன தான தானன தனன தான தானன
தனன தான தானன தனதான.

992. அகல நீளம் யாதாலு மொருவ ராலு மாராய
அரிய மோன மேகோயில் எனமேவி
அசைய வேக்ரி யாபீட மிசைபு காம காஞான
அறிவி னுத ராமோத மலர்தூவிச்
சகல வேத னுதீத சகல வாச காதீத
சகல மாக்ரி யாதீத சிவரூப
சகல சாத காதீத சகல வாச னுதீத
தனுவை நாடி மாபூசை புரிவேனோ
விகட தார சூதான நிகள பாத போதாள
*விரக ராக போதார சுரர்கால
விபுத மாலி காநீல முகப டாக மாயூர
விமல வ்யாப காசீல கவிநோத
ககன கூட பாடீர தவள சோபி தாளான
கவன பூத ராரூட சதகோடி
களப காம †வீர்‡வீசு காமு கார வேல்வீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே. (௬௰)

993. அடைப டாது நாடோறும் இடைவி டாது போம்வாயு
அடையவானில் வீடாகும் எனநாடி
அருள்பெ றுவ னுசார கரும யோகி யாகாமல்
அவனி மீதி லோயாது தடுமாறும்
உடலம் வேறு யான்வேறு காணம் வேறு வேறாக
உதறி வாச காதீத அடியூடே
உருகி ஆரி யாசார §பரம யோகி யாமாறன்
உபய பாத ராசீகம் அருள்வாயே
வடப ராரை மாமேரு கிரியெ டாக டாமோது
மகர வாரி யோரேழும் அமுதாக
மகுடவாள ராநோவ மதிய நோவ வாரிச
வனிதை மேவு தோளாயி ரமுநோவக்

* விரகர் ராக போதார் அசுரர் எனப்பிரிக்க. † வீர் - வீர. ‡ வீசு காம்; காம் வீசு - கிரணம்வீசுகின்ற. § பரமயோகி - புண்ணியபாவத் தொடக்கற்றவன்.

கடையு மாதி கோபாலன் மருக ருலி காபாலி
புதல்வ கான வேல்வேடர்                    கொடிகோவே

கனக லோக பூபால சகல லோக ஆதார
கருணை மேரு வேதேவர்                    பெருமாளே. (சக)

---

994. அமல வாயு வோடாத கமல நாபி மேல்மூல
அமுத பான மேமூல                    அனல்மூள

அசைவு ருது போராத விதமு மேவி யோவாது
அரிச தான சோபான                    மதனாலே

எமனை மோதி யாகாச கமன மாம னோபாவ
மெளிதுசால மேலாக                    உரையாடும்

எனதி யானும் வேறாகி எவரும் யாதும் யானாகும்
இதயபாவ னாதீதம்                    அருள்வாயே

விமலைமாகை மீதோடும் யமுனைபோல வோரேழு
விபுதமேக மேபோல                    உலகேழும்

விரிவுகாணு மாமாயன் முடியனீளு மாபோல
வெகுவிதாமு காகாய                    பதமோடிக்

கமலயோனி வீடான ககனகோள மீதோடு
கலபநீல மாயூர                    இளையோனே

கருணைமேக மேதூய கருணைவாரி யேயீறில்
கருணைமேரு வேதேவர்                    பெருமாளே. (சஉ)

---

995. அயிலின் வாளி வேல்வாளி அளவு கூர தா*யீச
ரமுத ளாவு மாவேசம்                    அதுபோல

அரவு நீளி தாய்மீள அகலி தாய் வார்காதி
னளவு மோடி மீடோதி                    நிழலாதித்

துயில்கொ ளாத வானேரு மயல்கொ ளாத†ஆவேத
துறவ ரான பேர்யாரு                    மடலேறத்

* ஈசர் அமுது - ஆலகால விஷம். † ஆவேதம் - வேடம்.

துணியு மாறு லாசில நயன மாத ராரோடு
துவளு வேனை ஈடேற நெறிபாராய்
பயிலு மேக *நீகார சயில ராசன் வாழ்வான
பவதி யாம ளாவாமை அபிராமி
பரிபு ராரர பாதார சரணி சாம ளாகார
பரம யோகி னிமோகி மகமாயி
கயிலை யாள ரோர்பாதி கடவு ளாளி லோகாயி
கனத னுச லாபார அமுதூறல்
கமழு மார னுகித கவிதை வாண வேல்வீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே. (சநு)

996. இரத மான வாயூறல் பருகி டாவி டாய்மோக
இனிய போக வாராழி அதில்மூழ்கி
இதயம் வேறு போகாம லுருகி யேக மாய்நாளு
மினிய மாதர் தோள்கூடி விளையாடும்
சரச மோக மாவேத சரியை யோக்ரி யாஞான
சமுக மோத ராபூத முதலான
சகள மோச டாதார முகுள மோநி ராதார
தாணி கோநி ராகார வடிவேயோ
பரத நீல மாயூர வரத நாக கேயூர
மரம யோகி மாதேசி மிகுஞான
பரமர் தேசி காவேட பதிவ்ரு தாசு சீபாத
பதும சேக ராவேலை மறவாத
காதலாவி சாகாச கலக லாத ராபோத
கமுக மூஷி காவீட மததாரைக்
கடவுள் தாதை சூழ்போதி லுலக மேழு சூழ்போது
கருணை மேரு வேதேவர் பெருமாளே. (சச)

997. குருதி தோலி னல்வேவு †குடிலி லேத மாமாவி
குலைய ஏம னுலேவி விடு‡காலன்
கொடிய பாச மோர்சூல படையி னோடு கூசாத
கொடுமை நோய்கொ டேகோலி எதிராமுன்

* நீகாரம் - கூட்டம் † குடில்-சரீரம். ‡ காலன் - இயமனது மந்திரி.

*பருதி சோமன் வானூடர் படியு ளோர்கள் பாலாழி
பயமு றாமல் வேலேவும் இளையோனே
பழுது றாத பாவாண ரெழுதொ ணாத தோள்வீர
பரிவி னோடு தாள்பாட அருள்தாராய்
மருது நீற தாய்வீழ வலிசெய் மாயன் வேயூதி
மடுவி லானை தான்மூலம் எனவோடி
வருமு ராரி கோபாலர் மகளிர் கேள்வன் மாதாவின்
வசன மோம றாமாயன் மருகோனே
கருதொ ணாத ஞானாதி எருதி லேறு காபாலி
கடிய பேயி னோடாடி கருதார்வெங்
கனலில் மூழ்க வேநாடி புதல்வ கார ணாதீத
கருணை மேரு வேதேவர் பெருமாளே. (௬௫)

---

998. சுருதி யூடு கேளாது சரியை யாளர் காணாது
துரிய மீது சாராது எவராலும்
தொடரொ ணாது மாமாயை இடைபு காது ஆனாத
சுகம கோத தீயாகி ஒழியாது
பருதி காயில் வாடாது வடவை மூளில் வேகாது
பவனம் வீசில் வீழாது சலியாது
பரவை சூழி லாழாது படைகள் மோதில் மாயாது
பரம ஞான வீடேது புகல்வாயே
நிருதர் பூமி பாழாக மகர பூமி தீமூள
‡ நிபிட தாரு காபூமி குடியேற
†நிகர பார §சீகார சிகர மீது வேலேவு
நிருப வேத ஆசாரி யனுமாலும்
கருது மாக மாசாரி கனக கார்மு காசாரி
ககன சாரி பூசாரி வெகுசாரி
கயிலை நாட காசாரி சகல சாரி வாழ்வான
கருணை மேரு வேதேவர் பெருமாளே. (௬௬)

---

999. தொடவ டாது நோாக வடிவு காண வாராது
சுருதி கூறு வாராலும் எதிர்கூறத்

---

* பரிதிசோமன்-சூரியசந்திரர். †நிபிட தாருகா பூமி-நெருங்கிய கற்பக தருக்களுள்ள தேவ லோகம். ‡ நிகரம் - கூட்டம். § சீகாரம் - பனி.

துறையி லாத தோராசை இறைவனுகி யோரேக
  துரிய மாகி வேருகி அறிவாகி
நெடிய கால்கை யோடாடு முடலின் மேவி நீரானு
  மெனவு நேர்மை நூல்கூறி நிறைமாயம்
நிகரில் கால னுேவ முகரி யான தூதாளி
  நினைவொ டேகு மோர்நீதி ஒழியாயோ
அடல்கெ டாத சூர்கோடி மடிய வாகை வேலேவி
  அமர்செய் வீர வீராறு புயவேளே
அழகி ளேடு மானீனு மரிவை காத லாவேதன்
  அரியும் வாழ வானுளும் * அதிரேகா
கடுவி டாக † ளாரூப நடவி ரோத ‡ தாடாளர்
  கருதி டார்கள் தீமூள முதல்நாடும்
கடவு ளேறு மீதேறி புதல்வ கார ணுவேத
  கருணை மேரு வேதேவர் பெருமாளே. (௬௭)

1000. நிலவில் மார னேறாதை அசைய வீசு மாராம
  நிழலில் மாட மாமாளி கையின்மேலாம்
நிலையில் வாச மாருத அணையில் மாத ராரோடு
  நியதி யாக வாயார வயிறுர
இலவி லூறு தேனூறல் பருகி யார வாமீறி
  இளகி ஏறு பாடீர தனபாரம்
எனது மார்பி லேமூழ்க இறுக மேவி மால்கூரு
  கினுமு னீப சீபாத மறவேனே
குலவி யோம பாகீர திமிலை நாதர் மாதேவர்
  குழைய மாலி காநாக மொடுதாவிக்
குடில கோம ளாகார சடில மௌலி மீதேறு
  குமர வேட மாதோடு பிரியாது
கலவி கூரு மீராறு கனக வாகு வேசூர்
  கடகவாரி தூளாக அமராடுங்
கடக போல மால்யானை வனிதை பாக வேல்வீர
  கருணைமேரு வேதேவர் பெருமாளே. (௬௮)

---

* அதிரேகம்-அதிசியம். † களாரூப - களரூப, கண்டத்தோடு கூடிய ரூபத்தையுடைய. ‡ தாடாளர் - விடா முயற்சியுடையார்.

1001. மனக பாட பாடீர தனத ராதராரூப
மதன ராச ராசீப சரகோட

வருண பாத காலோக தருண சோபி தாகார
மகளி ரோடு சீராடி இதமாடிக்

குனகு வேனை நாணுது தனகு வேனை வீணுன
குறைய னேனை நாயேனை வினையேனைக்

கொடிய னேனை ஓதாத குதலை யேனை நாடாத
கொடிய னேனை நீயாள்வ தொருநாளே

அநக தாம ஞகார முனிவ ராக மால்தேட
அரிய தாதை தானேவ மதுரேசன்

அரிய சார தாபீட மதனி லேறி *யீடேற
அகில நாலு மாராயும் இளையோனே

கனக பாவ ஞகார பவள கோம ளாகார
கலப சாம ளாகார மயிலேறும்

கடவு ளேக்ரு பாகார † கமல வேத ஞகார
கருணை மேரு வேதேவர் பெருமாளே. (௪௯)

---

1002. அதல சேட ஞாட அகில மேரு மீதாட
அபின காளி தாளுட அவளோடன்

றதிர வீசி வாதாடும் விடையி லேறு வாராட
அருகு பூத வேதாளம் அவையாட

மதுர வாணி தானுட மலரில் வேத ஞாட
மயிலு மாடி நீயாடி வரவேணும்

கதைவி டாத தோள்வீம னெதிர்கொள் வாளி யால்நீடு
கருத லார்கள் மாசேனை பொடியாகக்

கதறு காலி போய்மீள விஜயனேறு தேர்மீது
கனக வேத கோடூதி அலைமோதும்

உததி மீதி லேசாரி உலக மூடு சீபாத
‡ உவண மூர்த்தி மாமாயன் மருகோனே

---

* ஈடேற - (உலகத்தார்) உய்ய. † கமல வேதன் ஆகாரம் - இதய கமலத்திற் பொருந்திய ஞான சொரூபம். ‡ உவணமூர்த்தி - கருடவாகனர்.

உதய தாம மார்பான ப்ரபுட தேவ மாராஜ
ளுளமு நாட வாழ்தேவர் பெருமாளே. (௫௰)

---

1003. குருதிமூளை ஊனுறு மலமருத தோல்மூடு
குடிசைகோழை மாகூறு குழிநீர்மேற்

குமிழிபோல நோாகி அழியுமாயை ஆதார
குறடு*பாறு நாய்கூளி பலகாகம்

பருகுகாய மேபேணி அறிவிலாம வேவீணில்
படியின்மூழ்கி யேபோது தளிர்வீசிப்

பாவுநாட காசார கிரியையாளர் காணுத
பாமஞான வீடேது புகல்வாயே

எரியின்மேனி நீறுடு பாமர் பாலில் வாழ்வான
இமயமாது மாசூலி தருபாலா

†எழுமை யீறு காணுதர் முனிவரோடு வானுட
ரிசைகளோடு ‡பாராட மகிழ்வோனே

அரவினோடு மாமேரு மகரவாரி பூலோக
மதிரநாக மோரேழு பொடியாக

அலகைபூத மாகாளி சமரபூமி மீதாட
அசுரர்மாள வேலேவு பெருமாளே. (௫க)

---

தனதனு தத்த தனதனு தத்த
தனதனு தத்த தனதான.

1004. கருதியே மெத்த விடமெலாம் வைத்த
கலகவா ளொத்த விழிமாணுர்

கடினபோ கத்த புளகவா ருற்ற
களபமார் செப்பு முகைமீதே

உருகியான் மெத்த அவசமே உற்ற
உரைகளே செப்பி அழியாதுன்

உபயபா தத்தி னருளையே செப்பு
முதயஞா னத்தை அருள்வாயே

---

*பாறு-பருந்து. †எழுமை ஈறு காண் நாதர்-எழுவகைத் தோற்றத்தின் முடிவையுங் கண்டுணர்ந்த உகத்தியாதி எண்மர். ‡ பாராட - பாராட்ட.

பருவா லுற்று மடுவின்மீ துற்ற
பகடுவாய் விட்ட மொழியாலே
பரிவினோ டுற்ற இகிரியே விட்ட
பழையபா கற்கு மருகோனே
முருகுலா வுற்ற குழலிவே டிச்சி
முகையின்மே வுற்ற க்ருபைவேளே
முருகனே பத்த ருகனே வெற்பு
முரியவேல் தொட்ட பெருமாளே. (நஉ)

---

1005. கொலையிலே மெத்த விரகிலே கற்ற
குவளையோர் மைக்கண் விழிமாதர்
குழையிலே எய்த்த நடையிலே நெய்த்த
குழலிலே பற்கள் தனிலேமா
முலையிலே அற்ப இடையிலே பத்ம
முகநிலா வட்ட மதின்மீதே
முதுகிலே பொட்டு நுதலிலே தத்தை
மொழியிலே சித்தம் விடலாமோ
கலையனே உக்ர முருகனே துட்டர்
கலகனே மெத்த இளையோனே
கனகனே பித்தர் புதல்வனே மெச்சு
கடவுளே பச்சை மயிலோனே
உலகனே முத்தி புதல்வனே சித்தி
உடையனே விட்ணு மருகோனே
ஒருவனே செச்சை மருவுநேர் சித்ர
உருவனே மிக்க பெருமாளே. (நங)

---

தனன தாத்தன தனன தாத்தன
தனன தாத்தன தந்ததான.

1006. குடரு நீர்க்கொழு மலமு மூத்தொரு
குறைவி லாப்பல என்பினாலும்
கொடிய நோய்க்கிட மெனவு நாட்டிய
குடிலி லேற்றுயி ரென்றுகூறும்

வடிவி லாப்புல மதனை நோக்கிய
மறலி யாட்பொர வந்திடாமுன்

மதியு மூத்துன தடிக ளேத்திட
மறுவி லாப்பொருள் தந்திடாயோ

கடிய காட்டக முறையும் வேட்டுவர்
கருதொ ணுப்பரு *வெங்கையாகிக்

கழைசெய் தோட்குற மயிலைவேட்டுயர்
களவி னுற்புணர் கந்தவேளே

முடுகி மேற்பொரு மசுர ரார்ப்பெழ
முடிய வேற்கொடு வென்றவீரா

முடிவி லாத்திரு வடிவை நோக்கிய
முதிய மூர்த்திகள் தம்பிரானே. (ருச)

---

1007. பொதுவ தாய்த்தனி முதல தாய்ப்பக
லிரவு போய்ப்புகல் கின்றவேதப்

பொருள தாய்ப்பொருள் முடிவ தாய்ப்பெரு
வெளிய தாய்ப்புதை வின்றியீறில்

கதிய தாய்க்கரு தரிய தாய்ப்பரு
கமுத மாய்ப்புலன் ஐந்துமாயக்

காண மாய்த்தெனை †மரண மாற்றிய
கருணை வார்த்தையி ருந்தவாறென்

உததி கூப்பிட நிருத ரார்ப்பெழ
உலகு போற்றிட ‡வெங்கலாப

ஒருப ராக்ரம துரக மோட்டிய
உரவ §கோக்கிரி நண்பவானோர்

முதல்வ பார்ப்பதி புதல்வ கார்த்திகை
முலைகள் தேக்கிட உண்டவாழ்வே

முளரி பாற்கடல் சயில மேற்பயில்
முதிய மூர்த்திகள் தம்பிரானே. (ருரு)

---

* வெங்கை - வேங்கை மரம். † மரணமாற்றிய - பிறப்பிறப்பு மாற்றிய.
‡ வெம் - விருப்பத்தைத் தருகின்ற. § கோக்கிரிநண்ப-மலையிலுள்ளவனே.

தனதனனந் தான தனதனனந் தான
தனதனனந் தான தனதான.

1008. அகிலநறுஞ் சேறு ம்ருகமதமுந் தோயு
மசலமிரண் டாலும் இடைபோமென்
றடியில்விழுந் தாடு பரிபுரசெஞ் சீர
தபயமிடுங் கீதம் அமையாதே
நகைமிசைசென் றூடி வனசரர்சந் தான
நவையறநின் றேனல் *விளைவான்தன்
நளிதவிர்சிங் கார தனமுறுசிந் தூர
நமசரணென் றோத அருள்வாயே
†பகலிரவுண் டான இருவரும்வண் டாடு
பரிமளபங் கேரு கனுமாலும்
படிகநெடும் பார கடதடகெம் பீர
பணைமுகசெய் பால மணிமாலை
முகபடசிந் தூர கரியில்வருந் தேவு
முடியவரான் தேவி உடனுடன்
முழுதுலகுந் தாவி எழுகடல்மண் டூழி
முடிவினுமஞ் சாத பெருமாளே. (நிசு)

---

தனதனனந் தானந் தனதனனந் தானந்
தனதனனந் தானந் தனதான.

1009. கலகமதன் காலுங் கனமலரம் பாலுங்
களிமதுவண் டேதும் பயிலாலும்
கடலலையங் காலுங் கன‡இரையொன் றாலுங்
கலைமதியங் காயும் வெயிலாலும்
இலகியசங் காலும் இனியவளன் பீனும்
எனதருமின் தானின் றிளையாதே
இருள்கெடமுன் தானின் றினமணிசெந் தார்தங்
கிருகனமுந் தோள்கொண் டணைவாயே

* விளைவான் - விளைப்பான். † பகலிரவுண்டான இருவர்-பகலிரவு உண்டாதற்குக் காரணமான சூரிய சந்திர ரிருவர். ‡இரை - பேரிரைச்சல்.

உலகைவளைந் தோடுங் கதிரவன்விண் பால்நின்
றுனதபயங் காவென் றுனைநாட

உரவியவெஞ் சூரன் சுரமுடன்வன் தோளும்
உருவியுடன் போதும் ஒளிவேலா

அலகையுடன் பூதம் பலகவியும் பாடும்
அடைவுடனின் றாடும் பெரியோர்முன்

அறமுமறந் தோயும் அறிவுநிரம் போடென்
றழகுடனன் றோதும் பெருமாளே. (ருஎ)

---

1010. குருநிசலந் தோலுங் குடலுடனென் பாலுங்
குலவியெழுங் கோலந் தனில்பாயக்

கொடுமையுடன் கோபங் கடுவிரகஞ் சேருங்
குணவுயிர்கொண் டேகும் படிகாலன்

கருதிநெடும் பாசங் கொடுவரநின் றாயுங்
கதறமறந் தேனென் றகலாமுன்

கமலமலர்ந் தேறுங் குகனெனவும் போதுன்
கருணைமகிழ்ந் தோதுங் கலைதாராய்

நிருதர்தளஞ் சூழும் பெரியநெடுஞ் சூரன்
நினைவுமழிந் தோடும் படிவேலால்

நிகரிலதம் பாரொன் றிமையவர்நெஞ் சால்நின்
நிலைதொழுநின் றேமுன் பொருவீரா

பருதியுடன் சோமன் படியையிடந் தானும்
பரவவிடந் தானுண் டெழுபாரும்

பயமறநின் றாடும் பரமருளுங் கூறும்
பழமறையன் றோதும் பெருமாளே. (ருஅ)

---

தனனு தனத்த தன்னு தனத்த
தனனு தனத்த தனதான.

1011. கருவாய் வயிற்றி லுருவா யுதித்து
கருதா மனக்க வலையோடே

கலைநூல் பிதற்றி நடுவே கறுத்த
தலைபோய் வெளுத்தும் அறியாதே

இருபோது மற்றை ஒருபோது மிட்ட
கனல்மூழ்கி மிக்க புனல்மூழ்கி

*இறவாத சுத்த மறையோர் துதிக்கு
மியல்போத கத்தை மொழிவாயே

அரு†மாத பத்த அமரா பதிக்கு
வழிமூட விட்ட தனைமீள

அயிரா வதத்து விழியா யிரத்த
னுடனேபி டித்து முடியாதே

திருவான கற்ப தருநா டழித்து
விபுதேசர் சுற்றம் அவைகோலித்

திடமோ டாக்கர் கொடுபோ யடைத்த
சிறைமீள விட்ட பெருமாளே. (௱கூ)

---

தனதனன தாத்த தனதனன தாத்த
தனதனன தாத்த தனதான.

1012. இருவினைக ளீட்டு மிழிவுபடு கூட்டை
எடுமெடென வீட்டில் அனைவோரும்

இறுதியிடு காட்டி லழுதுதலை மாட்டி
லெரியவெரி மூட்டி இடுமாறு

கரியவிரு கோட்டு முரணெருமை‡மோட்டர்
கயிறிறுக மாட்டி அழையாமுன்

கனகமணி வாட்ட மருவுகழல் பூட்டு
கழலிணைகள் காட்டி அருள்வாயே

பருவமலை நாட்டு மருவுகிளி யோட்டு
பழையகுற வாட்டி மணவாளா

பகைஞர்படை வீட்டில் முதியகன லூட்டு
பகருநுதல் நாட்ட குமரேசா

---

*இறவாத சுத்த மறையோர்-நித்யத்துவம் பெற்ற அகஸ்திய ராதியர்.
† ஆதபம்-ஒளி. ‡ மோட்டர் நடுநிலைமை பிசகாத முரடர்.

அருமறைகள் கூட்டி உரைசெய்தமிழ் பாட்டை
*அடைவடைவு கேட்ட முருகோனே
அலைகடலி லீட்ட அவுணர்தமை யோட்டி
அமரர்சிறை மீட்ட பெருமாளே. (சுய)

---

1013. உறவின்முறை யோர்க்கு முறுதுயரம் வாய்த்தும்
உளமுருகு தீர்த்த உடலூடே
உடலைமுடி வாக்கு நொடியதொரு காட்டி
லுயர்கனலை மூட்டி விடவாவி
மறலிமற மார்த்த கயிறுதனை நீக்கி
வலியினொடு தாக்கி வளையாமுன்
மனமுமுனி வேட்கை மிகவுமுன தாட்கள்
மகிழ்வியல்கொ டேத்த மதிதாராய்
பிறைநுதலி சேற்க ணமையரிவை வேட்கும்
வரையில்மற வோர்க்கு மகவாகப்
†பிறிதுருவில் வாய்த்து நிறைதினைகள் காத்த
பிடியினடி போற்று மணவாளா
அறுகுபிறை யாத்தி அலைசலமு மார்த்த
அடர்சடையி னூர்க்கும் அறிவீவாய்
அடாவரு போர்க்கை அசுரகிளை மாய்த்தும்
அமரர்சிறை மீட்ட பெருமாளே. (சுக)

---

தனன தாத்தன தனன தாத்தன
தானா தானா தானா தானா தனதான.

1014. கவடு கோத்தெழு முவரி மாத்திறல்
காய்வேல் பாடே னுடேன் வீடா னதுகூடக்
கருணை கூர்ப்பன கழல்க ளார்ப்பன
கால்மேல் வீழேன் வீழ்வார் கால்மீ தினும்வீழேன்
தவடி னூர்ப்பத மெனினு மேற்பவர்
தாழா தீயேன் வாழா தேசா வதுசாலத்

---

* அடைவடைவு - முறைமுறையாய். † பிறிதுருவில் - மான் வயிற்றில்.

தாமு மோட்சமு மினியெ ளுக்கைச
தாவா மாறே நீதா ளுதா புரிவாயே
சுவடுபார்த்தட வருக ராத்தலை
தூளா மாறே தாளு நாரா யணனேநற்
றுணைவ பாற்கடல் வனிதை சேர்ப்பது
மூாய்மார் பாகோ பாலா காவா எனவேகைக்
குவடு கூப்பிட உவண மேற்கன
கோடூ தாவா னேபோ லாள்வான் மருகோனே
குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே வேளே வானோர் பெருமாளே. (௲உ)

---

1015. பருதி யாய்ப்பனி மதிய மாய்ப்படர்
பாராய் வானாய் நீர்தீ காலா யுடுசாலம்
பலவு மாய்ப்பல கிழமை யாய்ப்*பதி
னலா றேழா மேனா ளாயேழ் உலகாகிச்
சுருதி யாய்ச்சுரு திகளின் மேற்சுட
ராய்வே தாவாய் மாலாய் மேலே சிவமான
தொலைவி லாப்பொரு ளிருள்பு காக்கழல்
சூடா நாடா ஈடே றுதே சுழல்வேனோ
திருத ராட்டிர னுதவு நூற்றவர்
சேனை டாள்வா னுளோர் மூவா றினில்வீழத்
திலக பார்த்தனு முலகு காத்தருள்
சீரா மாறே தேரூர் கோமான் மருகோனே
குருதி வேற்கா நிருத ராட்சத
கோபா நீபா கூதா ளாமா மயில்வீரா
குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே வேளே வானோர் பெருமாளே. (௲ரு)

---

1016. முதலி யாக்கையு மிளமை நீத்தற
மூவா தாரா காவா தாரா எனஞாலம்

* பதினல் ஆறு ஏழ் ஆம் மேல் நாள்-உஎ-நட்சத்திரம்.

முறையி டாப்படு பறைக ளார்த்தெழ
மூடா வீடு டேகேள் கோகோ எனநோவ
மதலை கூப்பிட மனைவி கூப்பிட
மாதா மோதா வீழா வாழ்வே எனமாய
மறலி யூர்ப்புகு மாண யாத்திரை
வாரா வானுள் போநாம் நீமீள் எனவேணும்
புதல ருப்புன எயினர் கூக்குரல்
போகா நாடார் பாரா வாரார் அசுரோடப்
பொருது தாக்கிய வயப ராக்ரம
பூபா வாநீ பாபா லாதா தையுமோதும்
குதலை வாய்க்குரு பரச டாட்சர
கோடா ரூபா ரூபா பாரீ சதவேள்விக்
குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே தேவே வானோர் பெருமாளே. (கூச)



1017. வருக வூட்டெனும் விரகர் நேத்திரம்
வாளோ வேலோ சேலோ மானோ எனுமாதர்
மனது போற்கரு கினகு வாற்குழல்
வானோ கானோ மாயா மாயோன் வடிவேயோ
பருகு பாற்கடல் முருகு தேக்கிய
பாலோ தேனோ பாகோ வானோர் அமுதேயோ
பவள வாய்ப்பனி மொழியெ னுக்கவி
பாடா நாயே னீடே றுதே ஒழிவேனோ
அருகு பார்ப்பதி உருகி நோக்கவொ
ரால்கீழ் வாழ்வார் வாழ்வே கோகோ எனவேகி
அவுணர் கூப்பிட உததி தீப்பட
ஆகா சூரா போகா தேமீள் எனவோடிக்
குருகு மாக்கிரி உருக வோச்சிய
கூர்வே லாலே யோர்வே லாலே அமராடிக்
குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே வேளே வானோர் பெருமாளே. (கூரு)

1018. மறலி போற்சில நயன வேற்கொடு
மாயா தோயா வேயார் தோளார் மறையோதும்
வகையு மார்க்கமு மறமு மாய்த்திடு
மாறு ராயா தேபோ மாறு திடதீர
விரது மேற்பொலி அறிவு மார்க்கமும்
வேறாய் நீரே றூதோர் மேடாய் வினையூடே
விழுவி னூற்களை எழும தாற்பெரு
வீரா பாராய் வீணே மேவா தெனையாளாய்
மறலி சாய்த்தவ ரிறைப ராக்ரம
மால்கா ணாதே மாதோ டேவாழ் பவர்சேயே
மறுவி லாத்திரு வருக*நாட்டொறும்
வாயார் நாவால் மாறா தேயோ தினர்வாழ்வே
குறவர் காற்புன அரிவை தோட்கன
கோடார் மார்பா கூர்வே லாலே அசுரேசர்
குலைய மாக்கட லதனி லோட்டிய
கோவே தேவே வேளே வானோர் பெருமாளே. (கூகூ)

---

தானந் தனதன தானந் தனதன
தானந் தனதன தனதான.

1019. ஊனுந் தசையுடல் தானொன் பதுவழி
ஊறுங் கருவழி ஒருகோடி
ஓதும் பலகலை கீதஞ் சகலமு
மோரும் படியுன தருள்பாடி
நானுன் திருவடி பேணும் படியிரு
போதுங் கருணையில் மறவாதுன்
நாமம் புகழ்பவர் பாதந் தொழவினி
நாடும் படியருள் புரிவாயே
காணுந் திகழ்கதி ரோனுஞ் சசியொடு
காலங் களு †நடை உடையோனும்
காருங் கடல்வரை நீருந் தருகயி
லாயன் கழல்தொழும் இமையோரும்

* நாட்டொறும்-நாடோறும். † நடையுடையோன்-காற்று.

வானிந் திரனெடு மாலும் பிரமனும்
வாழும் படிவிடும் வடிவேலா
மாயம் பலபுரி சூரன் பொடிபட
வாள்கொண் டமர்செய்த பெருமாளே. (கூஎ)

---

1020. தீயும் பவனமும் நீருந் தரணியும்
வானுஞ் செறிதரு பசுபாசத்
தேகந் தனைநிலை யேயென் றிருவினை
தீருந் திறல்வினை அறியாதே
ஓயும் படியறு நூறும் பதினுறழ்
நூறும் பதினிரு பதுநூறும்
ஓடுஞ் சிறுவுயிர் மீளும் படிநல
யோகம் புரிவது கிடையாதோ
வேயுங் கணியும்விளாவும் படுபுன
மேவுஞ் *சிறுமிதன் மனவாளா
மீனம் படுகட லேழுந் தழல்பட
†வேதங் கதறிய ஒருநாலு
வாயுங் குலகிரி பாலுந் தளைபட
மாகந் தரமதில் மறைசூரன்
மார்புந் துணையுறு தோளுந் துணிபட
வாள்கொண் டமர்செய்த பெருமாளே. (கூஅ)

---

1021. வாதந் தலைவலி சூலம் பெருவயி
றுருகும் பிணியிவை அணுகாதே
மாயம் பொதிதரு காயந் தனின்மிசை
வாழுங் கருவழி மருவாதே
ஓதம் பெறுகடல் மோதுந் திரையது
போலும் பிறவியில் உழலாதே
ஓதும் பலவடி யாருங் கதிபெற
யானுன் கழலிணை பெறுவேனோ
கீதம் புகழிசை நாதங் கனிவொடு
வேதங் கிளர்தர மொழிவார்தம்

* சிறுமி - வள்ளி. † வேதங் கதறிய ஒருநாலுவாய் - பிரமனதுவாய்.

கேடின் பெருவலி மாளும் படியவ
ரோடுங் கெழுமுதல் உடையோனே
வேதந் தொழுதிரு மாலும் பிரமனு
மேவும் பதமுடை விறல்வீரா
வேல்வந் தெதிர்பொரு சூரன் பொடிபட
வேல்கொண் டமர்செய்த பெருமாளே. (சுசு)

---

தனதன தானத் தனதன தானத்
தனதன தானத் தனதான.

1022. கருமய லேறிப் பெருகிய காமக்
கடலினில் மூழ்கித் துயராலே
கயல்விழி யாரைப் பொருளென நாடிக்
கழியும நாளிற் கடைநாளே
எருமையி லேறித் தருமனும் வாதுற்
றிறுகிய பாசக் கயிறாலே
எனைவளை யாமற் றுனைநினை வேனுக்
கியலிசை பாடத் தரவேணும்
திருமயில் சேர்பொற் புயனென வாடத்
தெரியல னோடப் பொரும்வீரா
செகதல மீதிற் பகர்தமிழ் பாடற்
செழுமறை சேர்பொற் புயநாதா
பொருமயி லேறிக் கிரிபொடி யாகப்
புவியது சூழத் திரிவோனே
புனமக ளாரைக் கனதன மார்பிற்
புணரும்வி நோதப் பெருமாளே. (எம)

---

1023. குடலிடை தீதுற் றிடையிடை பீறிக்
குலவிய தோலத் தியிலூடே
குருதியி லேசுக் கிலமது கூடிக்
குவலயம் வானப் பெரிகாலாய்
உடலெழு மாயப் பிறவியி லாவித்
துறுபிணி நோயுற் றுழலாதே

உறையடி யேனுக் கொளிமிகு நீபத்
துனதிரு தாளைத் தாவேணும்

கடலிடை சூரப் படைபொடி யாகக்
கருதல ரோடப் பொரும்வேலா

கதிர்விடு வேலைக் கதிரினில் மேவிக்
கலைபல தேர்முத் தமிழ்நாடா

சடையினர் நாடப் படர்மலை யோடித்
தனிவிளை யாடித் திரிவோனே

தனிமட மானைப் பரிவுட னூரத்
தழுவும்வி நோதப் பெருமாளே. (௭௧)

---

தனதன தனதனந் தனதன தனதனந்
தனதன தனதனந் தனதான.

1024. காவுசேர் மகளிர்குங் குமபயோ தாதனங்
களினரு துயில்வதுஞ் சரிபேசுங்

காசகோ ருகநகம் படவிடாய் தணிவதுங்
கமலநா பியின்முயங் கியவாழ்வும்

அரவுபோ லிடைபடிந் திரவெலா குழுகுமின்
பநல்மகோ ததிநலம் பெருமாறும்

அதரபா னமுதமுந் தவிரவே மவுனபஞ்
சரமஞே லயசுகந் தருவாயே

பாவுமா யிரமுகங் கொடுதிசா முகதலம்
படர்பகீ ரதிவிதம் பெறஆடல்

பயில்பணா வனமுகந் தகுணமா சுணகணம்
பனிநிலா வுமிழுமம் புலிதாளி

கூவுகூ விளமரும் பிதழிதா தகிநெடுங்
குடிலவே ணியிலணிந் தவராகங்

குழையவா தாவுடன் தழுவுநா யகிதருங்
குமரனே யமரர்தம் பெருமாளே. (௭௨)

---

1025. வடிவவேல் தனைவெகுண் டிளைஞா விழைவனொந்
தமர் செய்வாள் விழியர்நெஞ் சினில்மாயம்
வளரமால் தனைமிகுந் தவர்கள்போ லளவிவந்
தணுகுமா நிதிகவர்ந் திடுமாதர்
துடியைநே ரிடைதனந் துவளவே துயில்பொருந்
தமளிதோய் பவர்வசஞ் சுழலாதே
தொலைவிலா இயல்தெரிந் தவலமா னதுகடந்
துனதுதாள் தொழுமனந் தருவாயே
படியெலா முடியநின் றருளுமா லுதவுபங்
கயனுநான் மறையுமும் பரும்வாழப்
பரவையூ டெழுவிடம் பருகிநீள் பவுரிகொண்
டலகையோ டெரிபயின் றெருதேறிக்
கொடியவா ளரவிளம் பிறையினோ டலைசலங்
குவளைசேர் சடையர்தந் திருமேனி
குழையவா தரவுடன் தழுவுநா யகிதருங்
குமரனே யமரர்தம் பெருமாளே. (எங)

---

தன்ன தனன தனன தனன தனன தனன தனதான.

1026. துயா மறுநின் வறுமை தொலையு மொழியு மமிர்த சுரபானம்
சுரபி குளிகை யினிது பெறுக துவளு மெமது பசிதீரத்
தயிரு மமுது மமைய மிடுக சவடி கடக நெளிகாறை
தருக தகடொ டுறுக எனுமி விரகு தவிர்வ தொருநாளே
உயரு நிகரில் சிகரி முடடு முடலு மவுணர் நெடுமார்பும்
உருவ மகர முகர திமிர உததி உதரம் அதுபீற
அயரு மமரர் சரண நிகள முறிய எறியும் அயில்வீரா
அறிவு முரமு மறமு நிறமு மழகு முடைய பெருமாளே. (எச)

---

1027. பணிகள் பணமு மணிகொள் துகில்கள் பழைய அடிமை யொடுமாதும்
பகரி லொருவர் வருக அரிய பயண மதனில் உயிர்போகக்
குணமு மனமு முடைய கிளைஞர் குறுகி விறகில் உடல்போடக்
கொடுமைஇடுமு னடிமை அடிகள் குளிர மொழிவ தருள்வாயே

இணையி லருணை பழநி கிழவ இளைய இறைவ முருகோனே
எயினர் வயினின் முயலு மயிலை இருகை தொழுது புணர்மார்பா
அணியொ டமரர் பணிய அசுரர் அடைய மடிய விடும்வேலா
அறிவு முரமு மறமு நிறமு மழகு முடைய பெருமாளே. (எரு)

1028. குருதி ஒழுகி அழுகு மவல குடிலை இனிது புகலாலே
குலவு மினிய கலவி மகளிர் கொடிய கடிய விழியாலே
கருது மெனது விரக முழுது கலக மறலி அழியாமுன்
கனக மயிலி னழகு பொழிய கருணை மருவி வரவேணும்
பரிதி சுழல மருவு கிரியை பகிர எரிசெய் பணிவேலா
பணில உததி அதனி லசுரர் பதியை முடுக வரும்வீரா
இரதி பதியை எரிசெய் தருளு மிறைவர் குமர முருகோனே
இலகு கமல முகமு மழகு மெழுத அரிய பெருமாளே. (எசு)

தந்த தனன தந்த தனன தந்த தனன தனதான.

1029. மைந்த ரினிய தந்தை மனைவி மண்டி அலறி மதிமாய
வஞ்ச விழிகள் விஞ்ச மறலி வன்கை யதனில் உறுபாசம்
தந்து வளைய புந்தி அறிவு தங்கல் குலைய உயிர்போமுன்
தம்ப முனது செம்பொ னடிகள் தந்து கருணை புரிவாயே
மந்தி குதிகொ ளந்தண் வரையில் மங்கை மருவு மணவாளா
மண்டு மசுரர் தண்ட மடைய அண்டர் பரவ மலைவோனே
இந்து நுதலு மந்த முகமு மென்று மினிய *மடவார்தம்
இன்பம் விளைய அன்பி னணையு மென்று மிளைய பெருமாளே. ()

தனதன தனதன தத்தத் தத்தத் தாந்தாந் தனதான.

1030. சுடரொளி கதிரவ னுற்றுப் பற்றிச் சூழ்ந்தோங் கிடுபாரில்
துயரிரு வினைபல சுற்றப்பட்டுச் சோர்ந்தோய்ந் திடநாளும்
கடுகென எடுகென டற்பற் றற்றுக் கான்போந் துறவோரும்
கனவிடை விதியிடு தத்துக் கத்தைக் காய்ந்தாண் டருளாயோ
தடமுடை வயிரவர் தற்கித் தொக்கத் தாந்தோய்ந் திருபாலும்
தமருக வொலிசெவு நத்திற் றத்தத் தாழ்ந்தூர்ந் திடநாகம்
படிநெடி யவர்கர மொத்தக் கெத்துப் பாய்ந்தாய்ந் துயர்கானம்
பயில்பவர் புதல்வகு றத்தத் தைக்குப் பாங்காம் பெருமாளே. ()

* மடவார் - தெய்வானையும் வள்ளிநாயகியும்.

தானா தானா தானா தானா தானா தானத் தனதான.

1031. ஊனே தானா யோயா நோயா லூசா டேசற் குடில்பேணா
ஓதா மோதா வாதா காதே லோகா சாரத் துளம்வேறாய்

நானே நீயாய் நீயே நானாய் நானா வேதப் பொருளாலும்
நாடா வீடா யீடே றாதே நாயேன் மாயக் கடவேனோ

வானே காலே தீயே நீரே பாரே பாருக் குரியோனே
மாயா மானே கோனே மானார் வாழ்வே கோழிக் கொடியோனே

தேனே தேனீள் கானா றாய்வீழ் தேசார் சாரற் கிரியோனே
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப் பெருமாளே. ()

1032. சாவா மூவா வேளே போல்வாய் தாளா வேனுக் கருள்கூரும்
தாதா வேநா தாவே கோவே சார்பா னார்கட் குயிர்போல்வாய்

ஏவால் மாலே போல்வாய் காரே போல்வா யீதற் கெனையாள்கென்
றேயா பாடா வாழ்வோர் பாலே யான்வீ ணேகத் திடலாமோ

பாவாய் நாவாய் வாணீ சார்வார் பாரா வாரத் தாகேசப்
பாய்மீ தேசாய் வார்கா னாதே பாதா ளாழத் துறுபாதச்

சேவா மாவூர் கோமான் வாழ்வே சீமா னேசெச் சையமார்பா
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப் பெருமாளே. (௮)

1033. *தாமா †தாமா லாபா லோகா தாரா தாரத் தாணீகா
தானா சாரோ பாவா பாவோ நாசா பாசத் தயாராத

‡யாமா யாமா தேசா ரூடா யாரா யாபத் தெனதாவி
யாமா காவாய் தீயே னீர்வா யாதே ஈமத் துகளாமோ

§காமா ‖காமா தீனா ¶நீணா காவாய் காளக் கிரியாய்கங்
காளா லீலா பாலா நீபா $காமா மோதக் குறமானின்

**தேமார் தேமா காமீ பாகீ தேசா தேசத் தவரோதுஞ்
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப் பெருமாளே. ()

---

* தாமா - மாலையை யுடையவனே. † தாம ஆலாபா - சுகசம்பாஷணை யுள்ளோனே. தாமம்-சுகம், ஆலாபம்-சம்பாஷணை. ‡ யாமா யாமா தேசார் - தெற்கிலுள்ள யமபுரியோர். யாமம் - தெற்கு. § காமா-அன்பனே. ‖ காம ஆதீனா - அன்பர்கள் இச்சிப்பதை அளிப்பவனே. ¶ நீள் நாகவாய் காளக் கிரியாய் - நாகாசலத்தில் வீற்றிருப்பவனே. $ காம ஆமோத - மிகுந்த விருப்பமுள்ள. ** தேம்ஆர் தேமா காமீ - தேன்கலந்த தினைமாவிருப்பனே.

1034. ஈரா வேதோல் நீரா லேயாம் நாறு வாசற் குடிலூடே
ஞாதா வாயே வாழ்கா லேகாய் நாய்பேய் சூழ்கைக் கிடமாமுன்
தாரா ரார்தோ ளீரா றுனே சாவா னோர்நற் பெருவாள்வே
தாழா தேநா யேனோ வாலே தாள்பா டாண்மைத் திறல்தாராய்
பாரே ழோர்தா ளாலே யாள்வோர் பாவார் வேதத் தயனாரும்
பாழே டேவா னூடே பாரூ டேயூர் பாதத் தினைநாடாச்
சீரார் யாதோ டேவாழ் வார்நீள் சேவூர் வார்பொற் சடைஈசர்
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப் பெருமாளே. (அஉ)

---

1035. மாதா வோடே மாமா னோனோர் மாதோடேமைத் துனமாரும்
மாறா னோர்போ னீள்தீ யூடே மாயா மோகக் குடிபோடாப்
போதா நீரூ டேபோய் மூழ்கா வீழ்கா வேதைக் குயிர்போமுன்
போதா காரா பாராய் சீரார் போதார் பாதத் தருள்தாராய்
வேதா வோடே மாலா னோர்வேல் வானோர் மேனிப் பயமீள
வே*தா னோர்மே லாகா தேயோர் வேலால் வேதித் திடும்வீரா
தீதார் தீயார் தீயூ டேமூள் சேரா சேதித் திடுவோர்தம்
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப் பெருமாளே. (அங)

---

1036. வாராய் பேதாய் கேளாய் நீ†தாய் மானோர்மோகத் துடனாசை
மாசூ டாடா ‡தூடே பாராய் மாறா னானச் சுடர்தா§னின்
‖றூரா யாதே டாராய் பேறும் ஆறு வேதப் பொருள்காணென்
றுள்வாய் நீதா னுதா பார்மீ தார்வே றுள்கைக் குரியார்தாம்
¶தோரா வானோர் சேனு தாரா சூரா சாரற் புனமாது
தோள்தோய் தோளீ ராறு மாசூர் தூளாய் வீழச் சிறுதாரைச்
சீரா வாலே வாளா லேவே லாலே சேதித் திடும்வீரா
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப் பெருமாளே. (அச)

---

தான தான தானான தானத் தனதான.

1037. காதி மோதி வாதாடு நூல்கற் றிடுவோரும்
காசு தேடி ஈயாமல் வாழப் பெறுவோரும்

---

* தானோர் - தானவர், அசுரர். † தாய் - தாவி. ‡ ஊடே - உள்ளே. § நின்று- மனம் நிலைத்து. ‖ ஆராயாதே ஆராய் - மற்றப்பொருள்களை ஆராய் வதுபோல் ஆராயாது அறிவால் ஆராய் ¶ தோரா-தோல்வியில்லா.

மாது பாகர் வாழ்வேயெ னநெக் குருகாரும்
மாறி லாத மாகால னூர்புக் கலேவாரே
நாத ரூப மாநாத ராகத் துறைவோனே
நாக லோக மீரேழு பாருக் குரியோனே
நீதி லாத வேல்வீர சேவற் கொடியோனே
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே. (௮௫)

---

1038. கூறு மார வேளார வாரக் கடலாலே
கோப மீது மாருத கானக் குயிலாலே
மாறு போலு மாதாவின் வாய்வைப் பகையாலே
மாது போத மாலாகி வாடத் தகுமோதான்
ஏறு தோகை மீதேறி யாலித் திடும்வீரா
ஏழு லோகம் வாழ்வான சேவற் கொடியோனே
சீறு சூரர் நீறாக மோதிப் பொரும்வேலா
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே. (௮௬)

---

1039. பேர வாவ றுவாய்மை பேசற் கறியாமை
பேதை மாத ராரோடு கூடிப் பிணிமேவா
ஆர வார மாருத நூல்கற் றடிநாயேன்
ஆவி சாவி யாகாமல் நீசற் றருள்வாயே
சூர சூர சூராதி சூரர்க் கரியோனே
தோகை யாகு மாரா கிராதக் கொடிகேள்வா
தீர தீர தீராதி தீரப் பெரியோனே
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே. (௮௭)

---

தானதன தத்த தானதன தத்த தானதன தத்த தனதான.

1040. ஏடுமலருற்ற ஆடல்மதனுக்கு மேவதுபழிக்கும் விழியாலே
ஏதையும ழிக்கு மாதர்தம யக்கி லேமருவி மெத்த மருளாகி
நாடுநகர் மிக்க வீடுதன மக்கள் நாரியர்கள் சுற்றம் இவைபேணு
ஞானவுணர் வற்று நானெழுபிறப்பும் நாடி நரகத்தில் விழலாமோ
ஆடுமர வத்தை யோடிஉடல் குத்தி யாடுமொருபச்சை மயில்வீரா
ஆரணமு ரைக்கு மோனகவி டத்தில்ஆருமுயநிற்கு முருகோனே
வேடுவர்பு னத்தில் நீடுமித ணத்தில் மேவியகு றத்தி மணவாளா
மேலசுர ரிட்ட தேவர்சிறை வெட்டி மீளவிடுவித்த பெருமாளே.

தத்தத்தன தத்தத் தனதன தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன தனதான.

1103. பத்தித்திர ளக்கொத் தொளிர்வரி பட்டப்புள கச்செப் பிளமுலை
பட்டிட்டெதிர் கட்டுப் பரதவர் உயர்தாளப்

பத்மத்திய * ரற்புக் கடுகடு கட்சத்தியர் மெத்தத் திரவிய
பட்சத்திய ரிக்குச் சிலையுரு விலிசேருஞ்

சித்தத்தரு ணர்க்குக் கனியத ரப்புத்தமு தத்தைத் தருமவர்
சித்ரக்கிர ணப்பொட் டிடுபிறை நுதலால்தந்

தெட்டிற்படு கட்டக் கனவிய பட்சத்தரு ளற்றுற் றுனதடி
சிக்கிட்டிடை புக்கிட் டலைவது தவிராதோ

மத்தப்பிர மத்தக் கயமுக னைக்குத்திமி தித்துக் கழுதுகள்
மட்டிட்டவி ரத்தக் குருதியில் விளையாட

மற்றைப்பதி னெட்டுக் கணவகை சத்திக்கந டிக்கப் பலபல
வர்க்கத்தலை தத்தப் பொருபடை உடையோனே

முத்திப்பர மத்தைக் கருதிய சித்தத்தினில் முற்றத் தவமுனி
முற்பட்டுழை பெற்றுத் தருகுற மகள்மேல்மால்

முற்றித்திரி வெற்றிக் குருபர முற்பட்டமு ரட்டுப்புலவனை
†முட்டைப்பெயர் செப்பிக் கவிபெறு பெருமாளே. (கருக)

---

தனதனன தந்ததன தானத் தாத்தன
தனதனன தந்ததன தானத் தாத்தன
தனதனன தந்ததன தானத் தாத்தன தனதான.

1104. பரதவித புண்டரிக பாதத் தாட்டிகள்
அமுதுபொழி யுங்குமுத கீதப் பாட்டிகள்
பலர்பொருள்கவர்ந்திடைகலாமிட்டோட்டிகள் கொடிதாய

---

* அற்பு - அன்பு. † இங்கே, முருகக்கடவுள் பொய்யாமொழிப் புலவன் எதிர்தோன்றித் தம் பெயர் 'முட்டை' எனச் சொல்லித் தம்மேல் அவரைப் பாடும்படி சொல்ல, அவர் நற்று யிரங்கற் றுறையாக,

"பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே
என்பேதை செல்லற் கியைந்தனளே—மின்போலு
மானவேல் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங்
கானவேல் முட்டைக்குங்,காடு" எனப் பாடின சரித்திரம் குறித்தது.

பழுதொழிய அன்புமுடை யாரைப் போற்சிறி
தழுதழுது கண்பிசையு மாசைக் கூத்திகள்
பகழியென வந்துபடு பார்வைக் கூற்றினர் ஒருகாம

விரகம்விளை கின்றகழு நீரைச் சேர்த்தகில்
ம்ருகமதமி குந்தபனி நீரைத் தேக்கியெ
விபுதர்பதி அங்கதல மேவிச் சாற்றிய தமிழ்நூலின்

*விதவிகமழ் தென்றல்வா வீசிக் கோட்டிகள்
முகைகளில்வி ழுந்துபரி தாபத் தாற்றினில்
விடியளவு நைந்துருகு வேளைக் காப்பதும் ஒருநாளே

உரகபண பந்தி†யபி ஷேகத் தாற்றிய
சகலவுல குந்தரும மோகப் பார்ப்பதி
உடனுருவு பங்குடைய நாகக் காப்பனும் உறிதாவும்

ஒருகளவு கண்டுதனி கோபத் தாய்க்குல
மகளிர்சிறு தும்பிகொடு மோதிச் சேர்த்திடும்
உரலொடுத வழ்ந்தநவ நீதக் கூற்றனும் அதிகோபக்

காவிகட வெங்கடக போலப் ‡போர்க்கிரி
கடவியபு ரந்தரனும் வேளைப் போற்றுகை
கருமமென வந்துதொழ வேதத் தாற்பர்யம் அறியாத

கடவுளைமு னிந்தமர ரூரைக் காத்துயர்
காவடக்ர வுஞ்சகிரி சாயத் தோற்றெழு
கடலென உடைந்தவுண ரோடத்தாக்கிய பெருமாளே. ()

தனதன தனதன தாந்த தானன
தனதன தனதன தாந்த தானன
தனதன தனதன தாந்த தானன தனதான.

1105. பரிமள மிகவுள சாந்து மாமத
முருகவிழ் வகைமலர் சேர்ந்து கூடிய
பலவரி அளிதுயில் கூர்ந்து வானுறு முகில்போலே

பரவிய இருள்செறி கூந்தல் மாதர்கள்
பரிபுர மலரடி வேண்டி ஏவிய
பணிவிடை களிலுறு மாந்த கூளனை நெறிபேணு

---

* விதவி - கூட்டம். † அபிஷேகம் - முடி. ‡ போர்க்கிரி - போராடுமலை.

விரகனை அசடனை வீம்பு பேசிய
விழலனை உறுகலை யாய்ந்தி டாமுழு
வெகுளியை அறிவது போங்க பாடனை மலடாரு

வினையனை உரைமொழி சோர்ந்த பாவியை
*விளிவுறு நரகிடை வீழ்ந்த மோடனை
வினவிமு னருள்செய்து பாங்கி னுள்வதும் ஒருநாளே

கருதலர் திரிபுர மாண்டு நீறெழ
மலைசிலை ஒருகையில் வாங்கு நாரணி
கழலணி மலைமகள் காஞ்சி மாநகர் உறைபேதை

களிமயில் சிவனுடன் வாழ்ந்த மோகினி
கடலுடை உலகினை ஈன்ற தாயுமை
கரிவன முறையகி லாண்ட நாயகி அருள்பாலா

முரணிய சமரினில் மூண்ட ராவண
னிடியென அலறிமு னேங்கி வாய்விட
முடிபல திருகிய நீண்ட மாயவன் மருகோனே

முதலொரு குறமகள் நேர்ந்த நூலிடை
இருதன கிரிமிசை தோய்ந்த காமுக
முதுபழ மறைமொழி ஆய்ந்த தேவர்கள் பெருமாளே

---

தனதன தானத் தனந்த தனதன தானத் தனந்த
தனதன தானத் தனந்த தனதான.

1106. பழுதற ஓதிக் கடந்து பகைவினை தீரத் துறந்து
பலபல யோகத் திருந்து மதராசன்

பரிமள பாணத் தயர்ந்து பனிமட லூர்தற் கிசைந்து
பரிதவி யாமெத் தநொந்து மயல்கூர

அழுதழு தாசைப் படுங்க ணபிநய மாதர்க் கிரங்கி
அவர்விழி பாணத் துநெஞ்சம் அறைபோய்நின்

றழிவது யான்முற் பயந்த விதிவச மோமற் றையுன்ற
னருள்வச மோவிப் †ரமங்தெ ரிகிலேனே

எழுதரு வேதத் துமன்றி முழுதினு மாய்நிற் குமெந்தை
எனவொரு ‡ஞானக் குழந்தை உளமேவி

---

* விளிவு - சாக்காடு. † பிரமம் - சூழ்ச்சி. ‡ ஞானக்குழந்தை - பிரகலாதன்.

இருவுரு வாகித் துலங்கி ஒருகன தூணிற் பிறந்து
இரணியன் மார்பைப் பிளந்த தனியாண்மை

பொழுதுகொள் மாவிக் ரமன்தன் மருகபு ராரிக் குமைந்த
புளகப டீரக் குரும்பை உடன்மேவும்

புயல்கரி வாழச் சிலம்பின் வனசர மானுக் குகந்து
புனமிசை ஓடிப் புகுந்த பெருமாளே. (கருச)

---

தானத்தத் தனன தானன தானத்தத் தனன தானன
தானத்தத் தனன தானன தந்ததான.

1107. பாணிக்குட் படாது சாதகர் காணச்சற் றொணுது வாதிகள்
பாஷிக்கத் தகாது பாதக பஞ்சபூத

பாசத்திற் படாது வேறொரு பாயத்திற் புகாது பாவனை
பாவிக்கப் பெறாது வாதனை நெஞ்சமான

ஏணிக்கெட் டொணுது மீதுயர் சேணுக்குச் சமான நூல்வழி
ஏறிப்பற் றொணுது நாடினர் தங்களாலும்

ஏதுச்செப் பொணுத தோர்பொருள் சேரத் துக்கமா மகோததி
ஏறச்செச் சைநாறு தாளைவ ணங்குவேனோ

ஆணிப்பொற் ப்ரதாப மேருவை வேலிட்டுக் கடாவி வாசவன்
ஆபத்தைக் கெடாநி சாசரர் தம்ப்ரகாசம்

ஆழிச்சத் ரசாயை நீழலி லாதித்தப் ரகாச னோர்தர
ஆழிச்சக் ரவாள மாள்தரும் எம்பிரானே

மாணிக்கப் ரவாள நீலம தாணிப்பொற் கிராதை நூபுர
வாசப்பத் மபாத சேகர சம்புவேதா

வாசிக்கப் படாத வாசகம் ஈசர்க்குச் சுவாமி யாய்முதல்
வாசிப்பித் ததேசி காசுரர் தம்பிரானே. (கருரு)

---

தானன தான தாத்த தானன தான தாத்த
தானன தான தாத்த தனதான.

1108. பாதக மான யாக்கை வாதுசெய் பாவி கோத்த
பாணமும் வாளு மேற்ற இருபார்வை

பாரப டீர மாப்ப யோதர மாதர் வாய்த்த
பாயலின் மீத ணைப்பி இதமாடும்

தோதக மாய வார்த்தை போதக மாக நோக்கு
தூய்மையில் நாயி னேற்கும் வினைதீரச்

சூழும ஞதி நீத்த யாஞெரு தானி லாச்சு
கோதய ஞான வார்த்தை அருள்வாயே

சாதன வேத நூற்பு ராதன பூண நூற்ப்ர
ஜாபதி ஆண்மை தோற்க வரைநாடிச்

சாகர சூர வேட்டை யாடிய வீர வேற்ப்ர
தாபம கீப போற்றி எனநேமி

மாதவன் மாது பூத்த பாகர னேக நாட்ட
வாசவ ஞேதி மீட்க மறைநீப

மாமலர் தூவி வாழ்த்த யானையை மாலை சூட்டி
வானவர் சேனை காத்த பெருமாளே. (கடுகூ)

---

தானன தனத்தத் தாத்த தானன தனத்தத் தாத்த
தானன தனத்தத் தாத்த தனதான.

1109. பால்மொழி படித்துக் காட்டி ஆடையை நெகிழ்த்துக் காட்டி
பாயலி லிருத்திக் காட்டி அநுராகம்

பாகிதழ் கொடுத்துக் காட்டி நூல்களை விரித்துக் காட்டி
பார்வைகள் புரட்டிக் காட்டி உறவாகி

மேல்நக மழுத்திக் காட்டி தோதக விதத்தைக் காட்டி
மேல்விழு நலத்தைக் காட்டு மடவார்பால்

மேவிடு மயக்கைத் தீர்த்து சீபத நினைப்பைக் கூட்டு
மேன்மையை எனக்குக் காட்டி அருள்வாயே

காலனை உதைத்துக் காட்டி ஆவியை வதைத்துக் காட்டி
காரணம் விளைத்துக் காட்டி ஒருகாலம்

கானினில் நடித்துக் காட்டி ஆலமு மிடற்றிற் காட்டி
காமனை எரித்துக் காட்டி கருபாலா

மாலுற நிறத்தைக் காட்டி வேடுவர் புனத்திற் காட்டில்
வாலிப மிளைத்துக் காட்டி அயர்வாகி

மான்மகள் தனத்தைச் சூட்டி ஏனென அழைத்துக் கேட்டு
வாழ்வுறு சமத்தைக் காட்டு பெருமாளே. (கடுஎ)

தனதத்த தனத்த தனத்தன
தனதத்த தனத்த தனத்தன
தனதத்த தனத்த தனத்தன தனதான.

1110. புருவத்தை நெறித்து விழிக்கயல்
புயலிட்டு வெருட்டி மதிக்திரு
புதுவட்டை மினுக்கி அளிக்குலம் இசைபாடும்

புயல்சற்று விரித்து நிரைத்தொளி
வளையிட்ட கரத்தை அசைத்தகில்
புனைமெத்தை படுத்த பளிக்கறை தனிலேறிச்

சரசத்தை விளைத்து முலைக்கிரி
புளகிக்க அணைத்து நகக்குறி
தனைவைத்து முகத்தை முகத்துடன் உறமேவித்

தழுவித்தி ரதத்த தரத்துமிழ்
அமுதத்தை அளித்து உருக்கிகள்
தருபித்தை அகற்றி உனைத்தொழ முயல்வேனோ

பரதத்தை அடக்கி நடிப்பவர்
த்ரிபுரத்தை எரிக்க நகைப்பவர்
பரவைக்குள் விடத்தை மிடற்றிடு பவர்நேர்கப்

பரையுற்ற கரத்தர் மிகப்பகி
ரதியுற்ற சிரத்தர் நிறத்துயர்
பரவத்தர் பொருப்பி விருப்பவர் உமையாளர்

சுரர்சுத்தர் பனத்து றைவித்தகர்
பணிபத்தர் பவத்தை அறுப்பவர்
சுடலைப்பொ டியைப்ப ரிசிப்பவர் விடையேறும்

துணையொத்த பதத்த ரெதிர்த்திடு
மதனைக்க டிமுத்தர் கருத்தமர்
தொலைவற்ற க்ருபைக்கு ளுதித்தருள் பெருமாளே ()

---

தனத்தந் தான தனதன தனத்தந் தான தனதன
தனத்தந் தான தனதன தனதான.

1111. புலிக்குன் பாத மதைநினை பவர்க்குங் கால தரிசனை
புலக்கண் கூடு மதுதனை அறியாதே

புரட்டும் பாவ சமயிகள் நெறிக்கண் *பூது படிறரை
　புழுக்கண் பாவ மதுகொளல்　　　பிழையாதே
கவிக்கொண் டாடு புகழினை படிக்கும் பாடு திறமிலி
　கலைக்கும் பாவ சுழல்படு　　　மடிநாயேன்
கலக்குண் டாகு புவிதனி லெனக்குண் டாகு பணிவிடை
　கணக்குண் டாதல் திருவுளம்　　　அறியாதோ
சிவத்தின் சாமி மயில்மிசை நடிக்குஞ் சாமி எமதுளே
　சிறக்குஞ் சாமி சொருபமி　　　தெளிகாணச்
செழிக்குஞ் சாமி பிறவியை ஒழுக்குஞ் சாமி பவமதை
　தெறிக்குஞ் சாமி முனிவர்கள்　　　இடமேவும்
தவத்தின் சாமி புரிபிழை பொறுக்குஞ் சாமி குடிநிலை
　தரிக்குஞ் சாமி அசுரர்கள்　　　பொடியாகச்
சதைக்குஞ் சாமி எமைபணி விதிக்குஞ் சாமி சரவண
　தகப்பன் சாமி எனவரு　　　பெருமாளே. (கறுகூ)

---

தானன தந்தன தந்த தந்தன
தானன தந்தன தந்த தந்தன
தானன தந்தன தந்த தந்தன　　　தனதான.

1112. பூசல்த ருங்கய லும்பொ ருந்திய
　வாசந றுங்குழ லுந்து லங்கிய
　பூரண கும்பமெ னுந்த னங்களு　　　மடமாதர்
போகம டங்கலை யும்பு ணர்ந்தநு
　ராகம்வி ளைந்துவ ரும்பெ ரும்பிழை
　போயக லும்படி ஒன்றை அன்புற　　　நினையாதே
ஆசையெ னும்படி யுந்த னங்களு
　மோகைந டந்திட வுந்தி னங்களும்
　ஆருட னும்பகை கொண்டு நின்றுற　　　நடமாடி
ஆடிய பம்பர முன்சு ழன்றெதி
　ரோடிவி ழும்படி கண்ட தொன்றுற
　ஆவிய கன்றுவி டும்ப யங்கெட　　　அருள்வாயே

---

* பூது - புகுது.

வாசவ னன்புவி ளங்க நின்றசு
ரேசர்கு லங்கள டங்க லுங்கெட
வானவர் நின்றுதி யங்கு கின்றதொர் குறைதீர

வாரிய திர்ந்துப யந்து நின்றிட
மேருவ டங்கவி டிந்து சென்றிட
வாகைபுனைந்தொருவென்றிகொண்டருள் இளையோனே

வீசிய தென்றலொ டந்தி யும்பகை
யாகமு யங்கவ நங்க னும்பொர
வேடையெ னும்படி சிந்தை நொந்திட அடைவாக

வேடர்செ ழும்புன வஞ்சி அஞ்சன
வேலினு ளங்கள்க லங்கி இன்புற
வேளையெ னும்படி சென்றி றைஞ்சிய பெருமாளே. ()

தான தந்தன தானு தானன
தான தந்தன தானு தானன
தான தந்தன தானு தானன தனதான.

1113. பூசல் வந்திரு தோடார் காதொடு
மோதி டுங்கயல் மானுர் மானமில்
போக மங்கையர் கோடா கோடிய மனதானுர்

பூர குங்கும தூளா மோதப
டீர சண்பக மாலா லாளித
பூத ரங்களின் மீதே மூழ்கிய அநுராக

ஆசை என்கிற பாரா வாரமு
மேறு கின்றில னுறு பேதவ
நேக தந்த்ரக்ரி யாவே தாகம கலையாய

ஆழி யுங்கரை காணே னூபுர
பாத பங்கய மோதே *னேசுள
னுயி னுங்குரு நாதா நீயருள் புரிவாயே

வாச வன்பதி பாழா காமல்நி
சாச ரன்குலம் வாழா தேயடி
மாள வன்கிரி கூறுய் நீறெழ நெடுநேமி

* ஏசு - குற்றம்.

மாத வன்தரு மேதா வோடலை
மோது தென்கடல் கோகோ கோவென
மாமு றிர்கிட நீள்வே லேவிய இளையோனே

வீசு தென்றலும் வேள்பூ வாளியு
மீறு கின்றமை யாமோ காமவி
டாய்கெ டும்படி காவா ஆவியை எனவேனல்

மீது சென்றுற வாடா வேடுவர்
பேதை கொங்கையின் மீதே மால்கொடு
வேடை கொண்டபி ரானே வானவர் பெருமாளே. (கஉக)

---

தனன தனதன தனத்தத் தாத்தன
தனன தனதன தனத்தத் தாத்தன
தனன தனதன தனத்தத் தாத்தன தனதான.

1114. பொருத கயல்விழி புரட்டிக் காட்டுவர்
புளக தனவட மசைத்துக் காட்டுவர்
புயலி னளகமும் விரித்துக் காட்டுவர் பொதுமாதர்

புனித இதழ்மது நகைத்துக் காட்டுவர்
பொலிவி னிடைதுகில் குலைத்துக் காட்டுவர்
புதிய பரிபுர நடித்துக் காட்டுவர் இளைஞோரை

உருக அணைதனி லணைத்துக் காட்டுவர்
உடைமை அடையவெ பறித்துத் தாழ்க்கவெ
உததி அமுதென நிகழ்த்திக் கேட்பவர் பொடிமாயம்

உதர மெரிதர மருத்திட் டாட்டிக
ளுயிரி னிலைகளை விரித்துச் சேர்ப்பவ
ருறவு கலவியை எடுத்திட் டாட்கொள நினையாயோ

மருது பொடிபட உதைத்திட் டாய்ச்சியர்
மகளி ருறிகளை உடைத்துப் போட்டவர்
மறுக வொருகயி றடித்திட் டார்ப்புற அழுதாரும்

வளரு நெடுமுகி லெதிர்த்துக் காட்டென
வசட னிரணிய னுரத்தைப் பேர்த்தவன்
மழையி னிரைமலை எடுத்துக் காத்தவன் மருகோனே

விருது பலபல பிடித்துச் சூர்க்கிளை
விகட தடமுடி பறித்துத் தோட்களை
விழவு முறியவு மடித்துத் தாக்கிய அயில்வீரா
*விபுல சலதியை எரித்துத் தூட்பட
விணைசெ யசுரர்கள் பதிக்குட் பாய்ச்சிய
விபுத மலரடி விரித்துப் போற்றினர் பெருமாளே. ()

---

தான தத்தன தானு தனுதன தான தத்தன தானு தனுதன
தான தத்தன தானு தனுதன தனதான.

1115. போத நிர்க்குண போதா நமோநம நாத நிஷ்கள நாதா நமோநம
பூர ணக்கலை சாரா நமோநம பஞ்சபாண
பூபன் மைத்துன பூபா நமோநம நீப புஷ்பக தாளா நமோநம
போக சொர்க்கபு பாலா நமோநம சங்கமேறும்
மாத மிழ்த்ரய சேயே நமோநம வேத னத்ரய வேளே நமோநம
வாழ்ஜ கத்ரய வாழ்வே நமோநம என்றுபாத
வாரி ஜத்தில்வி ழாதேமகோததி ஏழ்பிறப்பினில் மூழ்கா மனுேபவ
மாயை யிற்சுழி ஊடேவிடாதுக லங்கலாமோ
கீத நிர்த்தவெ தாளா டவீநட நாத புத்திர பாகீ ரதிகிரு
பாச முத்திர சீமூ தவாகனர் தந்திபாகா
கேக யப்பிர தாபா மூலாதிப மாலி கைக்கும ரேசா விசாகக்ரு
பாலு வித்ரும சாரா ஷடானன புண்டரீகா
வேத வித்தக வேதா விநோதகி ராத லக்ஷ்மிகி ரீடா மகாசல
வீர விக்ரம பாரா வதானவ கண்டசூரா
வீர நிட்டுர வீராதி காரண தீர நிர்ப்பய தீராபி ராமவி
நாய கப்ரிய வேலாயு தாசுரர் தம்பிரானே. (கஙஙரு)

---

தானன தந்தன தாத்தன தானன தந்தன தாத்தன
தானன தந்தன தாத்தன தனதான.

1116. போதிலிருந்துவி டாச்சதுர் வேதமொ ழிந்தவ னுற்†புளி
னுகமு கந்தவ னுற்றெரி வரிதான

* விபுலம் = விரிவு. † புளின் ஆகம உகந்தவன் = கருடவாகன விஷ்ணு.

போதுயர் செந்தழ லாப்பெரு வானாிறைந்தவி டாப்புக
ழாளன ருஞ்சிவ கீர்த்தியன் நெறிகாண

ஆதர வின்பருள் மாக்குரு நாதனெ னும்படி போற்றிட
ஆனப தங்களை நாக்கரு திடவேயென்

ஆசையெ னும்படி மேற்கவி பாடுமி தம்பல பார்த்தடி
யேனும றிந்துனை ஏத்துவ தொருநாளே

காதட ரும்படி போய்ப்பல பூசலி டுங்கய லாற்கனி
வாயித ழின்சுவை யாற்பயில் குறமாதின்

காரட ருங்குழ லாற்கிரி ஆனத னங்களி னுற்கலை
மேவும ருங்கத னுற்செறி குழையோலை

சாதன மென்றுரை யாப்பரி தாபமெ னும்படி வாய்த்தடு
மாறிம னந்தள ராத்தனி திரிவோனே

சாகர மன்றெரி யாக்கொடு சூரரு கும்படி யாத்திணி
வேலையு ரம்பெற ஓட்டிய பெருமாளே. (௧௧௧௬)

---

தந்தானந் தாத்தந் தனதன தந்தானந் தாத்தந் தனதன
தந்தானந் தாத்தந் தனதன தனதான.

1117. மங்காதிங்காக்குஞ் சிறுவரு முண்டேயிங் காற்றுந் துணைவியும்
வம்பாருந் தேக்குண் டிடவறி தெனும்வாதை

வந்தேபொன் தேட்டங் கொடுமன தொந்தேயிங் காட்டம்பெரிதெழ
வண்போதன் றீட்டுந் தொடாது படியேமன்

சங்காரம்போர்ச்சங்கையிலுடல் வெங்கானம்போய்த்தங்குயிர்கொள
சந்தேகந் தீர்க்குந் தனுவுடன் அணுகாமுன்

*சந்தாரஞ் சாத்தும் புயவியல் கந்தாவென் றேத்தும் படியென
†சந்தாபந் தீர்த்தென் றடியிணை தருவாயே

கங்காளன் பார்த்தன் கையில்வடி உண்டேதிண் டாட்டங் கொளுமன
கன் ‡சாபஞ் சார்த்துங் காதலன் எருதேறி

கந்தாவஞ்சேர்த்தண் புது§மல ரம்பான்வெந் தாரப்பொன் றிடவிழி
கண்டான்வெங் காட்டங் கனலுற நடமாடி

*சந்து ஆரம் - சந்தனமும் ஆரமும் † சந்தாபம் - கொடுமை ‡ சாபம் சார்த்தும் - (மலையாகிய) வில்லைத் தரித்த. § மலரம்பான் - மன்மதன்.

அங்காலங் கோத்தெண் டிசைபுவி மங்காதுண் டாற்கொன் றதிபதி
அந்தாபந் தீர்த்தும் பொருளினை அருள்வோனே

அன்பாலந் தாட்கும் பிடுமவர் தம்பாவந் தீர்த்தம் புவியிடை
அஞ்சாநெஞ் சாக்கந் தரவல பெருமாளே. (௧௱௰)

தனன் தனதன தனத்தானன தனன தனதன தனத்தானன
தனன தனதன தனத்தானன தனதான.

1118.*மதன தனுநிக ரிடைக்கேமன முருக வருபிடி நடைக்கேயிரு
வனச பரிபுர மலர்க்கேமது கரம்வாழும்

வகுள ம்ருகமத மழைக்கேமணி மகர மணிவன குழைக்கேமணி
மகளிர் முகுளித முகைக்கேகடல் அமுதூறும்

அதர மதுரித மொழிக்கேகுழை அளவு மளவிய விழிக்கேதள
வணியவொருசிறு நகைக்கேபணி மதிபோலும்

அழகு திகழ்தரு நுதற்கேயந வரத மவயவ மனைத்தூடினு
மவச முறுமயல் தவிர்த்தாள்வதும் ஒருநாளே

உததி புதைபட அடைத்தாதவ னிகரி விரதமும் விடுக்காநக
ரொருகொ டியில்வெயி லெழச்சானகி துயர்தீர

உபய ஒருபது வரைத்தோள்களு நிசிச ரர்கள்பதி தசக்ரீவமு
முருள ஒருகணை தெரித்தானும . வுனஞான

திதமி லவுணர்த மிருப்பாகிய புரமு மெரியெழ முதற்பூதர
திலத திலகிரி வளைத்தானும கிழவானோர்

திருவ நகர்குடி புகச்சீகர மகர சலமுறை இடச்சூரொடு
சிகர கிரிபொடி படச்சாடிய பெருமாளே. (௧௱௱)

தன்தானன தனதானன தனதானன தனதானன
தனதானன தனதானன தனதான.

1119. மதனேவிய கணையாலிரு வினையால்புவி கடல்சாரமும்
வடிவாயுடல் நடமாடுக முடியாதேன்

மனமாயையொ டிருகாழ்வினை அறமூதுடை மலம்வேரற
மகிழ்ஞானக அநுபூதியின் அருள்மேவிப்

---

*மதன தனுநிகர் - மன்மதசரீரத்துக்கொப்பாய், உருவமில்லாத.

பதமேவுமு னடியாருடன் விளையாடுக அடியேன்முனெ
பரிபூரண கிருபாகரம் உடன்ஞான
பரிமேலழ குடனேறிவி ணவர்பூமழை அடிமேல்விட
பலகோடிவெண் மதிபோலவெ வருவாயே
சதகோடிவெண் மடவார்கட லெனசாமரை அசையாமுழு
சசிசூரியர் சுடராமெனெ ஒருகோடி
சடைமாமுடி முனிவோர்சர ணெனவேதியர் மறையோதுக
சதிநாடக மருள்வேணியன் அருள்பாலா
விதியானவ னிளையாளென துளமேவிய வளிநாயகி
வெகுமாலுற தனமேலணை முருகோனே
வெளியாசையொ டடை*பூவணர் மருகாமணி முதிராடக
வெயில்வீசிய அழகாதமிழ் பெருமாளே. (௧௱௭)

---

தனதனன தானனந் தனந்த தனதனன தானனந் தனந்த
தனதனன தானனந் தனந்த தனதான.

1120. மழையளக பாரமுங் குலைந்து வரிபரவு நீலமுஞ் சிவந்து
மதிமுகமும் வேர்வுவந் தரும்ப அணைமீதே
மகுடதன பாரமுங் குலுங்க மணிகலைக ளோறவுந் திரைந்து
வசமழிய வேபுணர்ந் தணைந்து மகிழ்வாகிக்
குழையவித ழூறலுண் டருந்தி குருகுமொழி வாய்மலர்ந் துகொஞ்ச
குமுதபதி போகபொங் குகங்கை குதிபாயக்
குழியிவிழி யாமனந் தியங்கு மதனகலை ஆகமங் கள்விஞ்சி
குமரியர்க ளோடுழன் றுழைந்து விடலாமோ
எழுபடைகள் சூரவஞ் சரஞ்ச இரணகள மாகவன் றுசென்று
எழுசிகர மாநிலங் குலுங்க விசையூடே
எழுகடலுமேருவுங்கலங்க விழிபடர்வுதோகைகொண்டதுங்க
இயல்மயிலின் மாறுகொண் டமர்ந்த வடிவேலா
பொழுதளவு நீடுகுன் றுசென்று குறவர்மகள் காலினும் பணிந்து
புளிஞரறி யாமலுந் திரிந்து புனமீதே
புதியமட லேறவுந் துணிந்த அரியபரி தாபமுந் தணிந்து
புளகிதப யோதரம் புணர்ந்த பெருமாளே. (௧௱௮)

---

* பூவணர் - காயாம்பு வண்ணராகிய விஷ்ணு.

தானதனத்தத் தனத்த தத்தன
தானதனத்தத் தனத்த தத்தன
தானதனத்தத் தனத்த தத்தன தனதான.

1121. மாடமதிட்சுற் றுமொக்க வைத்திட
வீடுகனக்கத் தனத்தி லச்சுறு
மாலிபமொத்துப் ரபுத்த னத்தினில் அடைவாக

மாதர்பெருக்கத் தருக்க மற்றவர்
சூழவிருக்கத் தரிக்க விப்படி
வாழ்க்கையில்மத்தப் ரமத்த சித்திகொள் கடைநாளிற்

பாடையினிற்கட் டிவிட்டு நட்டவர்
கூடவாற்றிப் புடைத்து றப்புள
பாவையெடுத்துத் தழற்கி ரைப்பட விடலாய

பாடுதொலைத்துக் கழிக்க அக்ருபை
தேடுமெனைத்தற் புரக்க உற்றிரு
பாதுகையைப்பற் றிநிற்க வைத்தெனை அருளாயோ

ஆடகவெற்பைப் பெருத்த மத்தென
நாகவடத்தைப் பிணித்து ரத்தம
ரார்கள்பிடித்துத் திரித்தி டப்புகை அனலாக

ஆழிகொதித்துக் கதற்றி விட்டிமை
யோர்களொளிக்கக் களித்த உக்கிர
ஆலவிடத்தைத் தரித்த அற்புதர் குமரேசா

வேடர்சிறுக்கிக் கிலச்சை அற்றெழு
பாரும்வெறுத்துச் சிரிப்ப நட்பொடு
வேளையெனப்புக் குநிற்கும் வித்தக இளையோனே

வேகமிகுத்துக் கதிக்கும் விக்ரம
சூரர்சிரத்தைத் துணித்த டக்குதல்
வீரமெனத்தத் துவத்து மெச்சிய பெருமாளே. (கசாகூ)

---

தாந்தான தந்தன தந்தன தாந்தான தந்தன தந்தன
தாந்தான தந்தன தந்தன தனதான.

1122. மாண்டாரெ லும்பணியுஞ்சடை ஆண்டாரி றைஞ்ச மொழிந்ததை
வான்பூத லம்பவு னங்கனல் புனலான

வான்பூத முங்கர ணங்களு நான்போயொ டுங்கவ டங்கலு
மாய்ந்தால்வி ளங்கும தொன்றினை அருளாயேல்

வேண்டாமை யொன்றைய டைந்துள மீண்டாறி நின்சரணங்களில்
வீழ்ந்தாவல் கொண்டுரு கன்பினை உடையோனாய்

வேந்தாக டம்புபு னைந்தருள் சேந்தாச ரண்சர ணென்பது
வீண்போம தொன்றல வென்பதை உணராயோ

ஆண்டார்த லங்கள ளந்திட நீண்டார்மு குந்தர்த டந்தனில்
ஆண்டாவி துஞ்சிய தென்றுமு தலைவாயுற்

றாங்கோர்*சி லம்புபு லம்பிட ஞான்றாது துங்கச லஞ்சலம்
ஆம்†பூமு ழுங்கிய டங்கும ளவில்நேசம்

பூண்டாழி கொண்டுவ னங்களி லேய்ந்தாள வென்று வெறுந்தனி
போங்தோல மென்றுத வும்புயல் மருகோனே

பூம்பாளை யெங்கும ணங்கமழ் தேங்காவில் நின்றதொர் குன்றவர்
பூந்தோகை கொங்கைவி ரும்பிய பெருமாளே. (௧௭0)

---

தானதன தனத்தனந்த தானதன தனத்தனந்த
தானதன தனத்தனந்த தனதான.

1123. மாதர்மயல் தனிற்கலந்து காமபனி யெனப்புகுந்து
‡மாடவிய லெனச்சுழன்று கருவூறி

மாறிபல எனச்சுமந்து தேனுகுட மெனத்திரண்டு
மாதமிது வெனத்தளர்ந்து வெளியாகி

வேதபுவி தனிற்கழன்று ஏனமென எனத்தவழ்ந்து
வீறுமணி களைப்புனைந்து நடைமேலாய்

வேணவித மெனத்திரிந்து நாறுபுழு கூடற்றிமிர்ந்து
வேசிவலை தனிற்கலந்து மடிவேனோ

ஆதிசர ணெனக்கயங்கு லாவமுத லையைக்கிடங்கி
லாரவுடல் தனைப்பிளந்த அரிநேமி

ஆமைகய லெனச்செயங்கொள் கோலகுற ளரித்தடங்கை
ஆனவர னெணச்சயந்தன் மருகோனே

---

* சிலம்பு - மலையை யொத்த யானை. † பூ முழுங்கி - பூவை யொத்தவா யினிடத்து வைத்து முழக்கி. ‡ மாட இயலென-உளுந்து சுழல்வதுபோல.

சோதியுரு வெனத்திரண்டு கோலவரு ணையிற்கலந்த
சோமனணி குடிற்சிலம்பன் அருள்பாலா
தோகைமயி லெனச்சிறந்த ரூபிகுற மகட்கிரங்கி
தோள்களிறு கிடப்புணர்ந்த பெருமாளே. (௧௧௪)

தன்னன தனத்த தத்த தன்னன தனத்த தத்த
தன்னன தனத்த தத்த தனதான.

1124. மின்னினில் நடுக்கமுற்ற நுண்ணிய நுசுப்பில் முத்த
வெண்ணகை யில்வட்ட மொத்து அழகார
விம்பியி ளகிக்க தித்த கொம்மைமு கையிற்கு னித்த
வின்னுத லிலிட்ட பொட்டில் விலைமாதர்
கன்னல்மொ ழியிற்சி றக்கு மன்னந டையிற்க றுத்த
கண்ணினி ணையிற்சி வத்த கனிவாயே
கண்ணழி வுவைத்த புத்தி சண்முக நினைக்க வைத்த
கன்மவ சமெப்ப டிக்கு மறவேனே
அன்னந டையைப்ப ருத்த மஞ்ஞைம லையிற்கு றத்தி
அம்மைய டவிப்பு னத்தில் விளையாடும்
அன்னையி றுகப்பி ணித்த பன்னிரு திருப்பு யத்தி
லன்னிய அரக்க ரத்த னையுமாளப்
பொன்னுல கினைப்பு ரக்கு மன்னநல்வ ரத்தை விட்ட
புன்மையர் புரத்ர யத்தர் பொடியாகப்
பொன்மலை வளைத்தெ ரித்த கண்ணுத லிடத்தி லுற்ற
புண்ணிய ஒருத்திபெற்ற பெருமாளே. (௧௧௨)

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தனதான.

1125. முகமுமி னுக்கிப் பெருங்க ருங்குழல்
முகிலைய விழ்த்துச் செருந்தி சண்பக
முடியநி றைத்துத் ததும்பி வந்தடி முன்பிணக
முகையைய சைத்துத் திருந்த முன்தரி
கலையைநெ கிழ்த்துப் புனைந்து வஞ்சக
முறுவல்வி ளைத்துத் துணிந்து தந்தெரு முன்றிலூடே

மகளிர்வ ரப்பிற் பிறந்த பந்தியின்
மதனனு நிற்கக் கொழுந்து வெண்பிறை
வடவையெ ரிக்கத் திரண்டு பண்தனை வண்டுபாட

மலயநி லத்துப் பிறந்த தென்றலு
நிலைகுலை யத்தொட் டுடம்பு புண்செய
மயலைய ளிக்கக் குழைந்து சிந்தைம லங்கலாமோ

பகலவன் மட்கப் புகுந்து கந்தர
ககனமு கட்டைப் பிளந்து மந்தர
பருவரை யொக்கச் சுழன்று பின்புப றந்துபோகப்

பணிமணி பட்சத் துறங்க முந்தனி
முடுகிந டத்திக் கிழிந்து விந்தெழு
பரவைய ரற்றப் ரபஞ்ச நின்றுப யந்துவாடக்

குகனென முக்கட் சயம்பு வும்ப்ரிய
மிகவசு ரர்க்குக் குரம்பை வந்தரு
குறவமர் குத்திப் பொருங் கொடும்படை வென்றவேளே

குமரிகள் ஒப்பற் றிருந்த சங்கரி
கவுரியெ டுத்துப் பரிந்து கொங்கையில்
குணவமு தூய்க்கத் தெளிந்து கொண்டருள் தம்பிரானே.

---

தத்தன தான தனத்தன தத்தன தான தனத்தன
தத்தன தான தனத்தன தனதான.

1126. முத்தமு லாவு தனத்தியர் சித்தச னூணை செலுத்திகள்
முத்தமி டாம லுருக்கிகள் இளைஞோர்பால்
முட்டவு லாவி மருட்டிகள் நெட்டிலை வேலின் விழிச்சியர்
முப்பது கோடி மனத்தியர் அநுராகத்
தத்தைக ளாசை விதத்தியர் கற்புர தோளின் மினுக்கிகள்
தப்புறு மாற கமெத்திகள் அளவேநான்
தட்டழி யாது திருப்புகழ் கற்கவு மோத வுமுத்தமிழ்
தத்துவ ஞான மெனக்கருள் புரிவாயே
மத்தக யானை உரித்தவர் பெற்றகு மார இலக்குமி
மைத்துன னாகி யவிக்ரமன் மருகோனே

வற்றிட வாரி திமுற்றிய வெற்றிகொள் சூரர் பதைப்புற
வற்புறு வேலை விடுத்தருள் இளையோனே

சித்திர மான குறத்தியை உற்றொரு போது புனத்திடை
சிக்கென வேத மூவிப்புணர் மணவாளா

செச்சையு லாவு பதத்தின மெய்த்தவர் வாழ்வு பெறத்தரு
சித்தவி சாக வியற்சூரர் பெருமாளே. (கஎச)

தத்த தனதனன தானத் தான
தத்த தனதனன தானத் தான
தத்த தனதனன தானத் தான தனதான.

1127. முத்து மணிபணிக ளாரத் தாறு
மொய்த்த மலைமுகைகொ டேவித் தார
முற்று மிளைஞருயிர் மோகித் தேகப் பொருமாதர்

முற்று மதிமுகமும் வானிற் காரு
மொத்த குழல்விழியும் வேய்நற் றோளு
முத்தி தருமெனும்வி னுவிற் பாயற் கிடைமூழ்கிப்

புத்தி காமடமு லாவிச் சால
மெத்த மிகவறிவி லாரைத் தேறிப்
பொற்கை புகழ்பெரிய ராகப் பாடிப் புவியூடே

பொய்க்கு ளொழுகியய ராமற் போது
மொய்த்த கமலவிரு தாளைப் பூணப்
பொற்பு மியல்புதுமை யாகப் பாடப் புகல்வாயே

பத்து முடியுமத ளுேடத் தோ*ளிர்
பத்து மிறையவொரு வாளிக் கேசெய்
பச்சை முகில்சதுர வேதத் தோடுற் றயனும்

பற்ற அரியநட மாடத் தாளில்
பத்தி மிகவினிய ஞானப் பாடல்
பற்று மாபுநிலை யாகப் பாடித் திரிவோனே

மெத்த அலைகடலும் வாய்விட் டோட
வெற்றி மயில்மிசைகொ டேகிச் சூரர்
மெய்க்கு ளுறவிலகு வேலைப் போகக் கெறிவோனே

* இர் பத்தும் - ஈர் பத்தும், இரு பதும்.

வெற்றி மிகுசிலையி னல்மிக் கோர்தம்
வித்து விளைபுனமும் வேய்முத் தீனும்
வெற்பு முறையுமயில் வேளைக் காரப் பெருமாளே. ()

தனதானத் தனந்த தந்தன
தனதானத் தனந்த தந்தன
தனதானத் தனந்த தந்தன தனதான.

1128. மூலமேவிற் கலிங்க மொன்றிட
நுதல்வானிற் பிறந்த மின்பிறை
முனைமேல்முத் தரும்ப புந்தியில் இதமார

முகநேசித் திலங்க வும்பல
விளைமூசிப் புரண்ட வண்கடல்
முரணேசைக் கமைந்த வன்சரம் எனமூவா

மலர்போலச் சிவந்த செங்கணில்
மருள்கூர்கைக் கிருண்ட அஞ்சனம்
வழுவாமற் புனைந்து திண்கயம் எனநாடி

வருமாதர்க் கிரங்கி நெஞ்சமு
மயலாகிப் பரந்து நின்செயல்
மருவாமற் கலங்கும் வஞ்சகம் ஒழியாதோ

தொலையாநற் றவங்க ணின்றனை
நிலையாகப் புகழ்ந்து கொண்டுள
அடியாருட் டுலங்கி நின்றருள் துணைவேளே

துடிநேராத் திலங்கு மென்கொடி
இடைதோகைக் கிசைந்த ஒண்டொடி
சுரர்வாழப் பிறந்த சுந்தரி மணவாளா

மலைமாளப் பிளந்த செங்கையில்
வடிவேலைக் கொடுந்த வஞ்சக
வடிவாகக் கரந்து வந்தமர் பொருசூரன்

வலிமாளத் துரந்த வன்திறல்
முருகாமற் பொருந்து திண்புய
வடிவாமற் றநந்த மிந்திரர் பெருமாளே. (௩௭௬)

தனன தந்தன தாத்தன தந்தன
தனன தந்தன தாத்தன தந்தன
தனன தந்தன தாத்தன தந்தன தனதான.

1129. முனைய ழிந்தது மேட்டிகு லைந்தது
வயது சென்றது வாய்ப்ப லுதிர்ந்தது
முதுகு வெஞ்சிலை காட்டிவ ளைந்தது பிரபையான

முகமி ழிந்தது நோக்குமி ருண்டது
இருமல் வந்தது தூக்கமொழிந்தது
மொழி தளர்ந்தது நாக்குவி ழுந்தது அறிவேபோய்

நினைவ யர்ந்தது நீட்டல் முடங்கலு
மவச மும்பல ஏக்கமு மூந்தின
நெறிம றந்தது மூப்பு முதிர்ந்தது பலநோயும்

நிலுவை கொண்டது பாய்க்கிடை கண்டது
சலம லங்களி னூற்றமெ ழுந்தது
நிமிடமிங்கினி யாச்சுதென் மூண்பிணி தருள்வாயே

இனைய இந்திர னேற்றமு மண்டர்கள்
தலமு மங்கிட வோட்டியி ருஞ்சிறை
இடுமி டும்புள ராக்கதர் தங்களில் வெகுகோடி

எதிர்பொ ரும்படி போர்க்குளெ திர்ந்தவர்
தசை சிரங்களு நாற்றிசை சிந்திட
இடிமு ழங்கிய வேற்படை ஒன்றனை எறிவோனே

தினைவ னங்கிளி காத்தசவுந்தரி
அருகு சென்றடி போற்றும ணஞ்செய்து
செகம றிந்திட வாழ்க்கைபு ரிந்திடு மிலையோனே

திரிபு ரம்பொடி யாக்கிய சங்கரர்
குமர கந்தப ராக்ரம செந்தமிழ்
தெளிவு கொண்டடி யார்க்குவி ளம்பிய பெருமாளே. ()

---

தானன தனத்தத் தாத்த தானன தனத்தத் தாத்த
தானன தனத்தத் தாத்த தனதான.

1130. மேகலை நெகிழ்த்துக் காட்டி வார்குழல் விரித்துக் காட்டி
வேல்விழி புரட்டிக் காட்டி அழகாக

மேனியை மினுக்கிக் காட்டி நாடக நடித்துக் காட்டி
வீடுக ளழைத்துக் காட்டி மதராசன்
ஆகம முரைத்துக் காட்டி வாரணி தனத்தைக் காட்டி
யாரொடு நகைத்துக் காட்டி விரகாலே
ஆதர மனத்தைக் காட்டி வேசைகள் மயக்கைக் காட்டி
ஆசையை அவர்க்குக் காட்டி அழிவேனோ
மோகன விருப்பைக் காட்டி ஞானமு மெடுத்துக் காட்டி
மூதமிழ் முனிக்குக் காட்டு குருநாதா
மூவுல களித்துக் காட்டி சேவலை உயர்த்திக் காட்டி
மோதலை அடித்துக் காட்டு வயலூரா
வாகையை முடித்துக் காட்டி கானவர் சமர்த்தைக் காட்டி
வாழ்மயில் நடத்திக் காட்டும் இளையோனே
மாமலை வெதுப்பிக் காட்டி தானவர் திறத்தைக் காட்டி
வானவர் சிரத்தைக் காத்த பெருமாளே. (௧௧அ)

---

தத்தத்தத் தத்தத் தனதன தத்தத்தத் தத்தத் தனதன
தத்தத்தத் தத்தத் தனதன தனதான.

1131. மைக்குக்கைப் பக்கக் கயல்விழி எற்றிக்கொட் டிட்டுச் சிலைமதன்
வர்க்கத்தைக் கற்பித் திடுகிற மொழியாலே
மட்டிட்டுத் துட்டக் கெருவித மிட்டிட்டுச் சுற்றிப் பரிமள
மச்சப்பொற் கட்டில் செறிமலர் அணைமீதே
புக்குக்கைக் கொக்கப் புகுமொரு அற்பச்சிற் றிற்பத் தெரிவையர்
பொய்க்குற்றுச் சுற்றித் திரிகிற புலையேனைப்
பொற்பித்துக் கற்பித் தனதடி அர்ச்சிக்கச் சற்றுக் ருபைசெய
புத்திக்குச் சித்தித் தருளுவ தொருநாளே
திக்குக்குத் திக்குத் திகுதிகு டுட்டுட்டுட் டுட்டுட் டுடுடுடு
தித்தித்தித் தித்தித் திதியென நடமாடும்
சித்தர்க்குச் சுத்தப் பரமசல் முத்தர்க்குச் சித்தக் ருபையுள
சித்தர்க்குப் பத்தர்க் கருளிய குருநாதா
ஒக்கத்தக் கிட்டுத் திரியசுர் முட்டக்கொட் டற்றுத் திரிபுர
மொக்கக்கெட் டிட்டுத் திகுதிகு வெனவேக

உற்பித்துக் கற்பித் தமரரை முற்பட்டக் கட்டச் சிறைவிடும்
*ஒட்குக்டக் கொற்றக் கொடியுள பெருமாளே. (கஎகூ)

தான தனனதன தான தாத்தன
தான தனனதன தான தாத்தன
தான தனனதன தான தாத்தன தனதான.

1132. மோது மறலியொரு †கோடி வேற்படை
கூடி முடுகியெம தாவி பாழ்த்திட
மோக முடையவெகு மாதர் கூட்டமும் அயலாரும்

மூளு மளவில்விசை மேல்வி ழூப்பரி
தாப முடனும்விழி நீர்கொ ளாக்கொடு
மோக வினையில்நெடு நாளின் மூத்தவர் இளையோர்கள்

ஏது கருமமிவர் சா‡வெ னுச்சிலர்
கூடி நடவுமிடு காடெ னுக்கடி
தேழு நரகினிடை வீழ்மெ னுப்பொறி அறுபாவி

ஏழு புவனமிகு வான நாட்டவர்
சூழு முனிவர்கிளை தாழு மேத்திட
ஈச னருள்குமர வேத மார்த்தெழ வருவாயே

சூது பொருதரும னுடு தோற்றிரு
ஆறு வருஷவன வாச மேற்றியல்
தோகை உடனுமெவி ராட ராச்சியம் உறைநாளிற்

சூறை நிரைகொடவ ரேக மீட்டெதி
ராளு முரிமைதரு மாறு கேட்டொரு
தூது செலவடுவ லாண்மை தாக்குவன் எனமீள

வாது சமர்திருத ரான ராட்டிர
ராஜ குமரர்துரி யோத னுற்பிறர்
மாள நிருபரொடு சேனை தூட்பட வரிசாப

வாகை விஜயனடல் வாசி பூட்டிய
தேரை முடுகுநெடு மால்ப ராக்ரம
மாயன் மருகவமர் நாடர்பார்த்திப பெருமாளே. (கஅ௦)

* ஒட்குக்ட - ஒள் குக்குட. † கோடி - கூர்மை. ‡ எனு - என்னுமல்.

தத்த தனத்தத் தனத்த தத்தன
தத்த தனத்தத் தனத்த தத்தன
தத்த தனத்தத் தனத்த தத்தன தனதான.

1133. வட்ட முலைக்கச் சவிழ்த்து வைத்துள
முத்து வடத்தைக் கழுத்தி லிட்டிரு
மைக்கு வளைக்கட் குறிப்ப மூத்திய பொதுமாதர்

மட்ட மலிக்குட் டிருத்தி முத்தணி
மெத்தை தனக்குட் செருக்கி வெற்றிலை
வைத்த பழுப்பச் சிலைச்சு ருட்கடி இகழ்கோதிக்

கட்டி அணைத்திட் டெடுத்து டுத்திடு
பட்டை அவிழ்த்துக் கருத்தி தத்தொடு
கற்ற கலைச்சொற் களிற்ப யிற்றுள முயல்போதும்

கைக்கு ளிசைத்துப் பிடித்த கட்கமும்
வெட்சி மலர்ப்பொற் பதத்தி ரட்சணை
கட்டு மணிச்சித் திரத்தி றத்தையு மறவேனே

கொட்ட மிகுத்திட் டரக்கர் பட்டணம்
இட்டு நெருப்புக் கொளுத்தி அத்தலை
கொட்டை பரப்பச் செருக்க ளத்திடை அசுரோரைக்

குத்தி முறித்துக் குடிப்ப ரத்தமும்
வெட்டி அழித்துக் கனக்க ளிப்பொடு
கொக்க ரியிட்டுத் தெரித்த டுப்பன ஒருகோடி

பட்ட பிணத்தைப் பிடித்தி ழுப்பன
கச்ச ரிகொட்டிட் டடுக்கெ டுப்பன
பற்கள் விரித்துச் சிரித்தி ருப்பன வெகுபூதம்

பட்சி பறக்கத் திசைக்குள் மத்தளம்
வெற்றி முழக்கிக் கொடிப்பி டித்தயில்
பட்ட றவிட்டுத் துரத்தி வெட்டிய பெருமாளே. (கஅக)

---

தனதன தாத்த தாத்த தனதன தாத்த தாத்த
தனதன தாத்த தாத்த தனதான.

1134. வளைகர மாட்டி வேட்டி னிடைதுயில் வாட்டி ஈட்டி
வரிவிழி தீட்டி எட்டின் மணம்வீசும்

மழைகுழல் காட்டி வேட்கை வளர்முகை காட்டி நோக்கின்
மயில்நடை காட்டி மூட்டி மயலாகப்
புளகித வார்த்தை ஏற்றி வரிகலை வாழ்த்தி ஈழ்த்து
புணர்முகை சேர்த்து வீக்கி விளையாடும்
பொதுமட வார்க்கு ஏற்ற வழியுறு வாழ்க்கை வேட்கை
புலைகுண மோட்டி மாற்றி அருள்வாயே
துளையொழு கேற்ற நோக்கி பலவகை வாச்சி தூர்த்து
சுடாடி *நீத்த வேத்தும் அடியார்கள்
துணைவன்மை நோக்கி நோக்கி னிடைமுறையாய்ச்சிமாய்ச்சொல்
சொலியமு தூட்டி ஆட்டு முருகோனே
இளநகை ஓட்டி மூட்டர் குலம்விழ வாட்டி †எட்டை
இமையவர் பாட்டை மீட்ட குருநாதா
இயல்புவி வாழ்த்தி ஏத்த எனதிடர் நோக்கி நோக்க
மிருவினை காட்டி மீட்ட பெருமாளே. (௧௮௨)

தானன தனதன தத்தத்த தானன தனதன தத்தத்த
தானன தனதன தத்தத்த தனதான.

1135. வாடையில்மதனையழைத்துற்று வால்வளை கலகலெனக்கற்றை
வார்குழல் சரியமு டித்திட்டு துகிலாரும்
மால்கொள நெகிழவு டுத்திட்டு நூபுர மிணையடி யைப்பற்று
வாய்விட நுதல்மிசை பொட்டிட்டு வருமாய
நாடக மகளிர்ந டிப்புற்ற தோதக வலையில கப்பட்டு
ஞாலமு முழுதுமி கப்பித்தன் எனுமாறு
நாணமு மாபுமொ ழுக்கற்று நீதியு மறிவும றக்கெட்டு
நாயடி மையுமடி மைப்பட்டு விடலாமோ
ஆடிய மயிலினை ஒப்புற்று பீலியு மிலையுமு டுத்திட்டு
ஆரினு மழகுமி கப்பெற்று ‡யவனுளும்
ஆகிய §இதண்மிசை உற்றிட்டு மானின மருளவி ழித்திட்டு
ஆயுத கவணொரு கைச்சுற்றி விளையாடும்
வேடுவர் சிறுமியொ ருத்திக்கு யான்வழி அடிமையெ னச்செப்பி
வீறுள அடியிணை பைப்பற்றி பலகாலும்
வேதமு மமரரு ||மெய்ச்சக்ர வாளமு மறியவி லைப்பட்டு
மேருவில் மிகவுமெ ழுத்திட்ட பெருமாளே. (௧௮௩)

---

* நீத்தல்-நித்தல், நாடோறும். † எட்டை-தளர்ச்சி. ‡ யவனுள் - யௌவனத்தையுடையவள் § இதண்-பரண். || மெய்ச்சக்ரவாளம்-சத்திய எல்லை.

தனதன தனதன தனதன தனதன தனதன தனதன
தத்தத் தத்தன தத்தத் தத்தன தந்ததான.

1136. விடமென அயிலென அடுவன நடுவன மிளிர்வன சுழல்விழி
வித்தைக் குப்பக ரொப்புச் சற்றிலை என்றுபேசும்

விரகுடை வனிதைய ரணைமிசை உருகிய வெகுமுக கலவியி
லிச்சைப் பட்டுயிர் தட்டுப் பட்டுமு ழன்றுவாடும்

நடலையில் வழிமிக அழிபடு தமியனை நமன்விடு திரளது
கட்டிச் சிக்கென ஒத்திக் கைக்கொடு கொண்டுபோயே

நரகதில் விடுமெனு மளவினி லிலகிய நறைகமழ் திருவடி
முத்திக் குட்படு நித்யத் தத்துவம் வந்திடாதோ

இடியென அதிர்குரல் நிசிசரர் குலபதி இருபது திரள்புய
மற்றுப் பொற்றலை தத்தக் கொத்தொடு நஞ்சுவாளி

எரியெழ முடுகிய சிலையின ரழகொழு கியல்சிறு வினைமகள்
பச்சைப் பட்சித னைக்கைப் பற்றிடு மிந்த்ரலோகா

வடவரை இடிபட அலைகடல் சுவறிட மகவரை பொடிபட
மைக்கட் பெற்றிடு முக்ரக் கட்செவி அஞ்சசூரன்

மணிமுடி சிதறிட அலகைகள் பலவுடன் வயிரவர் நடமிட
முட்டிப் பொட்டெழ வெட்டிக்குத்திய தம்பிரானே. ()

---

தத்த தனதனன தானத் தான
தத்த தனதனன தானத் தான
தத்த தனதனன தானத் தானத் தனதான.

1137. விட்ட புழுகுபனி நீர்கத் தூரி
மொய்த்த பரிமளப டாச்சே று
மிக்க முகையைவிலை கூறிக் காசுக் களவேதான்

மெத்த விரியுமலர் சேர்கற் பூர
மெத்தை மிசைகலவி யாசைப் பாடு
விற்கு மகளிர்சுரு ளோலைக் கோலக் குழையோடே

முட்டி இலகுகுமிழ் தாவிக் காமன்
விட்ட பகழிதனை யோடிச் சாடி
மொய்க்கு மளியதனை வேலைச் சேலைக் கயல்மீனை

முக்கி யமனையட மீறிச் சீறு
மைக்கண் விழிவலையி லேபட் டோடி
முட்ட வினையன்மரு ளாகிப் போகக் கடவேனோ

செட்டி எனுமொர்திரு நாமக் கார
வெற்றி அயில்தொடுப்ர தாபக் கார
திக்கை உலகைவல மாகப் போகிக் கணமீளும்

சித்ர குலகலப வாசிக் கார
தத்து மகரசல கோபக் கார
செச்சை புனையுமண வாளக் கோலத் திருமார்பா

துட்ட நிருதர்பதி சூறைக் கார
செப்பு மமரர்பதி காவற் கார
துப்பு முகபடக போலத் தானக் களிறாரும்

சொர்க்க கனதனவி நோதக் கார
முத்தி விதரணவு தாரக் கார
சுத்தி மறவர்மகள் வேலைக் காரப் பெருமாளே. (கஅரு)

---

தனதனன தனதனன தனன தாத்தனன
தனதனன தனதனன தனன தாத்தனன
தனதனன தனதனன தனன தாத்தனன தனதான.

1138. விரைசொரியு ம்ருகமதமு மலரும் வாய்த்திலகு
விரிகுழலு மவிழநறு மெழுகு கோட்டுமுகை
மிசையில்வரு பகலொளியை வெருவ வோட்டுவணி வகையாரம்

விடுதொடைகள் நகநுதியி லறவும் வாய்த்தொளிர
விழிசெருக மொழிபதற அமுது தேக்கியகை
விதறிவளை கலகலென அழகு மேற்பொழிய அலர்மேவும்

இருசரண பரிபுரசு ருதிக ளார்க்கவச
மிலகுகடல் கரைபுரள இனிமை கூட்டியுள
மிதம்விளைய இருவரொரு மளவு காட்டரிய அநுராகத்

திடைமுழுகி எனதுமன தழியு நாட்களினு
மிருசரண இயலும்வினை எறியும் வேற்காமு
மெழுதரியதிருமுகமு மருளு மேத்தும்வகை தரவேணும்

அரிபிரம ரடிவருட உததி கோத்தலற
அடல்வடவை அனலுமிழ அலகை கூட்டமிட
அணிநிணமு மலைபெருக அறையும் வாச்சியமும் அகலாது

அடல்கழுகு கொடிகெருட னிடைவி டாக்கணமு
மறுகுறளு மெறிகுருதி நதியின் மேற்பரவ
அருணரண முகவயிர வர்களு மார்ப்பரவம் இடநாளும்

பாவுநிசி சரர்முடிகள் படியின் மேற்குவிய
பவுரிகொடு திரியவரை பலவும் வேர்ப்பறிய
பகர்வரிய ககனமுக டிடிய வேட்டைவரு மயில்வீரா

படருநெறி சடையுடைய இறைவர் கேட்குரிய
பழையமறை தருமவுன வழியை ஆர்க்குமொரு
பரமகுருபரனெனவுமறிவுகாட்டவல பெருமாளே (கஅசு)

---

தனனதன தனனதன தனனதன தனனதன
தத்தத்த னந்தனந் தத்தத்த னந்தனந் தந்ததான.

1139. விழையுமனி தரையுமுனி வரையுமவ ருயிர்துணிய
வெட்டிப்பி ளந்துளம் பிட்டுப்ப றிந்திடுஞ் செங்கண்வேலும்

விரையளக முகிலுமிள நகையுமிரு கமதகனவி
சித்ரத்த னங்களுந் தித்தித்த தொண்டையும் புண்டரீகச்

சுழிமடுவு மிடையுமழ கியமகளிர் தருகலவி
சுட்டித்தி ரிந்தினந் தட்டுப்ப டுங்கொடும் பங்கவாழ்வும்

தொலைவில்பிற வியுமகல ஒருமவுன பரமசுக
சுத்தப்பெ ரும்பதஞ் சித்தித்த அன்புடன் சிந்தியாயோ

எழுதரிய அறுமுகமு மணிநுதலும் வயிரமிடை
இட்டுச்ச மைந்தசெஞ் சுட்டிக் கலன்களுந் தூங்குநீள்பன்

னிருகருணை விழிமலரு மிலகுபதி னிருகுழையும்
ரத்நக்கு தம்பையும் பத்மக் கரங்களுஞ் செம்பொனூலும்

மொழிபுகழு முடைமணியு மரைவடமு மடியிணையு
முத்தச்சதங்கையுஞ் சித்ரச்சிகண்டியுஞ் செங்கைவேலும்

முழுதுமழ கியகுமர கிரிகுமரி உடனுருகு
முக்கட்சி வன்பெறுஞ் சற்புத்ர வும்பர்தந் தம்பிரானே()

---

தந்தனந் தந்தனந் தந்தனந் தந்தனந்
தந்தனந் தந்தனந் தனதான.

1140 அங்கதன் கண்டகன் * பங்கிலன் பொங்குநெஞ்
சன்பிலன் துன்பவன் புகள்மேவும்
அஞ்சொடுங் கும்பொதும் பொன்றையென் றுஞ்சமந்
தங்குமிங் குந்திரிந் திரைதேடும்
சங்கடங் கொண்டவெஞ் சண்டிபண் டன்பெருஞ்
சஞ்சலன் கிஞ்சுகந் தருவாயார்
தந்தொழும் பன்தழும் பன்பணிந் தென்றுநின்
தண்டையம் பங்கயம் புகழ்வேனோ
சங்கையும் பொங்குநஞ் சம்பொருந் தும்புயங்
கங்களுந் திங்களுங் கழுநீரும்
கஞ்சமுந் தும்பையுங் கொன்றையுஞ் சந்ததங்
கந்தமுந் துன்றுசெஞ் சடையாளர்
பங்குதங் கும்பசுங் கொம்புதந் தின்புறும்
பந்தவெங் குண்டர்தங் குலகாலா
பண்டிதன் கந்தனென் றண்டரண் டந்தொழும்
பண்புநண் பும்பெறும் பெருமாளே. (கஅஅ)

---

தனதான தந்தனத்த தனதான தந்தனத்த
தனதான தந்தனத்த தனதான.

1141. அடியார்ம னஞ்சலிக்க எவரா கினும்பழிக்க
அபராதம் வந்துகெட்ட பிணிமூடி
அனைவோரும் வந்துசிச்சி எனநால்வ ருஞ்சிரிக்க
அனலோட முன்றுசெத்து விடுமாபோற்
கடையேன்ம லங்கள்முற்று மிருநோயு டன்பிடித்த
கலியோடி றந்துசுத்த வெளியாகிக்
களிகூர என்றனுக்கு மயிலேறி வந்துமுத்தி
கதியேற அன்புவைத்துன் அருள்தாராய்
சடைமீது கங்கைவைத்து விடையேறு மெந்தைசுத்த
தழல்மேனி யன்சிரித்தொர் புர†மூணும்

---

* பங்கிலன் - பாங்கில்லாதான் † மூணும் - மூன்றும்; உலகவழக்கு.

தவிடாக வந்தெதிர்த்த மதனுக முஞ்சிதைத்த
தழல்பார்வை அன்றளித்த குருநாதா
மிடிதீர அண்டருக்கு மயிலேறி வஞ்சர்கொட்டம்
வெளியாக வந்துநிர்த்தம் அருள்வோனே
மினனூல்ம ருங்குல்பொற்பு முகைமாதி ளங்குறத்தி
மிகுமாலொ டன்புவைத்த பெருமாளே. (கஅகூ)

---

தனதன தாத்தன தனதன தாத்தன
தனதன தாத்தன தனதான.

1142. அடியில்வி டாப்பிணை மடையவி டாச்சிறி
தழியுமுன் வீட்டுமுன் உயர்பாடை
அழகொடு கூட்டுமி னழையுமின் வார்ப்பறை
அழுகையை மாற்றுமின் *ஓதியாமுன்
எடுமினி யாக்கையை எனவிடு காட்டெரி
இடர்கொடு போய்த்தமர் சுடுநாளில்
எயினர்கு லோத்தமி உடன்மயில் மேற்கடி
தெனதுயிர் காத்திட வரவேணும்
மடுவிடை போய்ப்பரு முதலையின் வாய்ப்படு
மதகரி கூப்பிட வளையூதி
மழைமுகில் போற்கக பதிமிசை தோற்றிய
மகிபதி போற்றிடு மருகோனே
படர்சடை யாத்திகர் பரிவுற ராட்சதர்
பரவையி லார்ப்பெழ விடும்வேலால்
படமுனி யாப்பணி †தமனிய நாட்டவர்
பதிகுடி ஏற்றிய பெருமாளே. (ககஎ0)

---

தத்த தன்ன தைய தத்த தன்ன தைய
தத்த தன்ன தைய தனதான.

1143. அத்த னன்னை இல்லம் வைத்த சொன்னம் வெள்ளி
அத்தை நண்ணு செல்வர் உடனுகி
அற்பு பண்ணு கல்வி சுற்ற மென்னு மல்ல
லற்று நின்னை வல்ல படிபாடி

---

* ஓதியாமுன் - ஊதிப் போகா முன்னம். † தமனியநாடு-தேவநாடு.

முத்த னென்ன வல்லை அத்த னென்ன வள்ளி
முத்த னென்ன உள்ளம் உணராதே
முட்ட வெண்மை உள்ள பட்ட னென்மை கொள்ளு
முட்ட னிங்ங னேவ தொழியாதோ
தித்தி மன்னு தில்லை நிர்த்தர் கண்ணி னுள்ளு
தித்து மன்னு பிள்ளை முருகோனே
சித்தி மன்னு செய்ய சத்தி துன்னு கைய
சித்ர வண்ண வல்லி அலர்சூடும்
பத்த ருண்மை சொல்லு ளூற்ற செம்மல் * வெள்ளி
பத்தர் கன்னி புல்லு மணிமார்பா
பச்சை வன்னி அல்லி செச்சை சென்னி உள்ள
பச்சை மஞ்ஞை வல்ல பெருமாளே. (கக௪௩)

---

தத்தன தான தானன தத்தன தான தானன
தத்தன தான தானன தனதான.

1144. அப்படி ஏழு மேழும்வ குத்துவ ழாது போதினி
னக்ரம்வி யோம கோளகை மிசைவாழும்
அட்சர தேவி கோவின்வி திப்படி மாறி மாறிய
னேத்துரு வாய காயம தடைவேகொண்
டிப்படி யோனி வாய்தொறு முற்பவி யாவி ழாவுல
கிற்றடு மாறி யேதிரி தருகாலம்
எத்தனை யூழி காலமெ னத்தெரி யாது வாழியி
னிப்பிற வாது நீயருள் புரிவாயே
கற்பக வேழ மேய்வன பச்சிள ஏனல் மீதுறை
கற்புடை மாது தோய்தரும் அபிராம
கற்புர தூளி லேபன மற்புய பாக சாதன
கற்பக லோக தாரண கிரிசால
விப்ரச மூக வேதன பச்சிம பூமி காவல
வெட்சியு நீப மாலையும் அணிவோனே
மெத்திய ஆழி சேறெழ வெற்பொடு சூர னீறெழ
விக்ரம வேலை ஏவிய பெருமாளே. (கக௪௪)

* வெள் இபத்தர் - வெள்ளை யானையை உடைய தேவேந்திரன்.

தனன தானனந் தனன தானனந்
தனன தானனந் தனதான.

1145. அயில்வி லோசனங் குவிய வாசகம்
பதற ஆனனங் குறுவேர்வுற்
றளக பாரமுங் குலைய மேல்விழுந்
ததர பானமுண் டியல்மாதர்
சயில பாரகுங் கும்ப யோதரந்
தழுவு மாதரந் தமியேனால்
தவிரொ ணாதுநின் கருணை கூர்தருந்
தருண பாதமுந் தரவேணும்
கயிலை யாளியுங் குலிச பாணியுங்
கமல யோனியும் *புயகேசன்
கணப ணாமுகங் கிழிய மோதுவெங்
கருட வாகனந் தனிலேறும்
புயலின் ரூபரும் பரவ வானினும்
†புணரி மீதினுங் கிரிமீதும்
பொருநி சாசரன் தனது மார்பினும்
புதைய வேல்விடும் பெருமாளே. (௧௧௪௫)

---

தனத்த தத்தன தனத்த தத்தன
தனத்த தத்தன தனதான.

1146. அருக்கி மெத்தகோள் திருத்தி உற்றமார்
பசைத்து வக்குமால் இளைஞோரை
அழைத்து மிக்ககா சிழைத்து மெத்தைமீ
தணைத்து மெத்தமால் அதுகூர
உருக்கி உட்கொள்மா தருக்கு ளெய்த்துநா
யுற்றி உட்குநா னுடன்மேவி
உழைக்கு மத்தைநீ ஒளித்து முத்திபா
லுறக்கு ணத்ததாள் அருள்வாயே
‡சுருக்க முற்றமால் தனக்கு மெட்டிடா
தொருத்தர் மிக்கமா நடமாடும்

---

* புயகேசன்-புயங்க ராஜன். † புணரி - கடல். ‡ சுருக்கம்-வாமனம்.

சுகத்தி லத்தர்தா மிகுத்த பத்திகூர்
சுரக்க வித்தைதான் அருள்வோனே
பெருக்க வெற்றிகூர் திருக்கை கொற்றவேல்
பிடித்து குற்றமார் ஒருசூரன்
பெலத்தை முட்டிமார் துளைத்து நட்டுளோர்
பிழைக்க விட்டவோர் பெருமாளே. (௧௧௪௬)

---

தனந்த தாத்தனத் தனந்த தாத்தனத்
தனந்த தாத்தனத் தனதான.

1147. அரும்பி னுற்றனிக் கரும்பி னுற்றெழுத்
தடர்ந்து மேற்றெறித் தமராடும்
அநங்க னார்க்கிளைத் தயர்ந்த னுப்பியெத்
தரம்பை மார்க்கடைக் கலமாகிக்
குரும்பை போற்பணைத் தரும்பு ருக்கொதித்
தெழுந்து கூற்றெனக் கொலைசூழும்
குயங்கள் வேட்டறத் தியங்கு தூர்த்தனைக்
குணங்க ளாக்கிநற் கழல்சேராய்
சொருந்தி டார்ப்புரத் திலங்கை தீப்படக்
குரங்கி னுற்படைத் தொருதேரிற்
புகுந்து நூற்றுவர்க் கொழிந்து பார்த்தனுக்
கிரங்கி ஆற்புறத் தலைமேவிப்
பெருங்*கு றேட்டைவிட் டுறங்கு காற்றெனப்
பிறங்க வேத்தியக் குறுமாசூர்
பிறங்க லார்ப்பெழச் சலங்கள் கூப்பிடப்
பிளந்த வேற்காப் பெருமாளே. (௧௧௫)

---

தனதன தத்தனத் தனதன தத்தனத்
தனதன தத்தனத் தனதான.

1148. அலமலம் இப்புலாற் புலையுடல் கட்டனேற்
கறுமுக நித்தர்போற் றியநாதா
அறிவிலி இட்டுணைப் பொறியிலி சித்தமாய்த்
தணிதரு முத்திவீட் டணுகாதே

* குறேட்டை - குறட்டை, நித்திரையில் விடும் பெருமூச்சு.

பலபல புத்தியாய்க் கலவியி லெய்த்திடாப்
பரிவொடு தத்தைமார்க் கிதமாடும்
பகடிது டுக்கன்வாய்க் கறையனெ னத்தாரப்
படியில்ம னித்தர்தூற் றிடலாமோ
குலகிரி பொற்றலாய்க் குரைகடல் வற்றலாய்க்
கொடியவ ரக்கரார்ப் பெழுவேதக்
குயவனை வெற்றியேற் றவனெதிர் குட்டினுற்
குடுமியை நெட்டைபோக் கியவீரா
கலைதலை கெட்டபாய்ச் சமணரை நட்டகூர்க்
கழுநிரை முட்டவேற் றியதாளக்
கவிதையும் வெற்றிவேற் கரமுடன் வற்றிடாக்
கருணையு மொப்பிலாப் பெருமாளே. (கசுசு)

தனனதான தந்ததந்த தனனதான தந்ததந்த
தனனதான தந்ததந்த தனதான.

1149. அளகபார முங்குலைந்து அரியபார்வை யுஞ்சிவந்து
அணுகியாக முங்கலந்து அமுதூறல்
அதரபான முண்டுகந்து அறிவுசோர வும்பகர்ந்து
அவசமாக வும்புணர்ந்து மடவாரை
*பளகனுவி யுந்தளர்ந்து பதறுமாக மும்பயந்து
பகலுராவை யுந்துறந்து திரியாமல்
பரமஞான முந்தெளிந்து பரிவுநேச முங்கிளர்ந்து
பகருமாறு செம்பதங்கள் தரவேணும்
துளபமாய னுஞ்சிறந்த கமலவேத னும்புகழ்ந்து
தொழுதுதேட ரும்ப்ரசண்டன் அருள்பாலா
சுரர்கள் நாய கன்பயந்த திருவைமாம ணம்புணர்ந்து
சுடருமோக னஞ்சிறந்த மயில்பாகா
களபமார்பு டன்தயங்கு குறவர்மாது டன்செறிந்து
கலவிநாட கம்பொருந்தி மகிழ்வோனே
கடியபாத கந்தவிர்ந்து கழலைநாடொ றுங்கிளர்ந்து
கருதுவார்ம னம்புகுந்த பெருமாளே. (கசுஎ)

* பளகன் - குற்ற முள்ளவன், பளகு - குற்றம்.

தானனாதத்த தானனாதத்த தானனாதத்த தனதான.

1150. ஆசைகூர்பத்தனேன்மனோபத்ம மானபூவைத்துநடுவேயன்
பானநூலிட்டு நாவிலேசித்ர மாகவேகட்டி ஒருஞான
வாசம்வீசிப்ர காசியாநிற்ப மாசிலோர்புத்தி அளிபாட
மாக்ருதாபுஷ்ப மாலைகோலப்ர வாளபாதத்தில் அணிவேனோ
மூசுகானத்து மீதுவாழ்முத்த மூரல்வேடிச்சி தனபார
மூழ்குநீபப்ர தாபமார்பத்த மூரிவேழத்தின் மயில்வாழ்வே
வீசுமீனப்ப யோதிவாய்விட்டு வேகவேதித்து வருமாசூர்
வீழமோதிப்ப ராரைநாகத்து வீரவேல்தொட்ட பெருமாளே.

தானத்த தத்ததன தானத்த தத்ததன
தானத்த தத்ததன தனதான.

1151. ஆசைக்கொ ளுத்திவெகு வாகப்ப சப்பிவரும்
ஆடைப்ப ணத்தையெடெ னுறவாடி
ஆரக்க ழுத்துமுலை மார்பைக்கு லுக்கிவிழி
ஆடக்கு லத்துமயில் கிளிபோலப்
பேசிச்சி ரித்துமயிர் கோதிக்கு லைத்துமுடி
பேதைப்ப டுத்திமயல் இடுமாதர்
பீறற்ச லத்துவழி நாறப்ப டுத்தியெனை
பீடைப்ப டுத்துமயல் ஒளியாதோ
தேசத்த டைத்துபிர காசித்தொ லித்துவரி
சேடற்பி டித்துதறு மயில்வீரா
தேடித்து தித்தவடி யார்சித்த முற்றருளு
சீர்பொற்ப தத்தவரி மருகோனே
நேசப்ப டுத்தியிமை யோரைக்கெ டுத்தமுழு
நீசர்க்க ணத்தமுற விடும்வேலா
நேசக்கு றத்திமய லோடுற்ப வித்தபொனி
நீர்பொற்பு விக்குள்மகிழ் பெருமாளே. (கககக)

தான தான தனத்தன தான தான தனத்தன
தான தான தனத்தன தனதான.

1152. ஆசை நேச மயக்கிகள் காசு தேடு மனத்திகள்
ஆவி சோர உருக்கிகள் தெருமீதே

யாவ ரோடு நகைப்பவர் வேறு கூறு விளைப்பவர்
ஆல கால விழிச்சிகள் மலைபோலு
மாசி லாத தனத்தியர் ஆடை சோர நடப்பவர்
வாரி ஓதி முடிப்பவர் ஒழியாமல்
வாயி லூற லளிப்பவர் நாளு நாளு மினுக்கிகள்
வாசல் தேடி நடப்பது தவிர்வேனோ
ஓசை யான திரைக்கடல் ஏழு ஞால முமுற்றருள்
ஈச ரோடு றவுற்றவள் உமையாயி
யோகி ஞானி பராபரி நீலி நார ணியுத்தமி
ஓல மான மறைச்சிசொல் அபிராமி
ஏசி லாத மலைக்கொடி தாயம னோன்மணி சற்குணி
ஈறி லாத மலைக்கொடி அருள்பாலா
ஏறு மேனி ஒருத்தனும் வேத னன சமர்த்தனும்
ஈச னோடு ப்ரியப்படு பெருமாளே. (௨௱)

---

தான தாத்த தனதன தான தாத்த தனதன
தான தாத்த தனதன தனதான.

1153. ஆல மேற்ற விழியினர் சால நீட்டி அழுதழு
தாக மாய்க்க முறைமுறை பறைமோதி
ஆடல் பார்க்க நிலையெழு பாடைகூட்டி விரையம
யான மேற்றி உறவினர் அயலாகக்
கால மாச்சு வருகென ஓலை காட்டி யமபடர்
காவ லாக்கி உயிரது கொடுபோமுன்
காம வாழ்க்கை பொடிபட ஞானம் வாய்த்த கழலிணை
காத லாற்க ருதுமுணர் தருவாயே
வேல கீர்த்தி விதரண சீலர் வாழ்த்து சரவண
வ்யாழ கோத்ர மருவிய முருகோனே
வேடர் நாட்டில் விளைபுன ஏனல் காத்த சிறுமியை
வேட மாற்றி வழிபடும் இளையோனே
ஞால மேத்தி வழிபடு மாறு போக்கு மகவென
நாணல் பூத்த படுகையில் வருவோனே
நாத போற்றி எனமுது தாதை கேட்க அநுபவ
ஞான வார்த்தை அருளிய பெருமாளே. (௨௱௧)

தான தத்தன தத்தன தான தத்தன தத்தன
தான தத்தன தத்தன தனதான.

1154. ஆலா லத்தைய மூத்திய வேல்போல் நற்குழை யைப்பொரு
தாகா ரைத்தொடர் கைக்கெணும் விழியாலே
ஆளா மற்றவர் சுற்றிட மீளா மற்றலை இட்டறி
வார்போ கச்செயல் விச்சைகள் விலைகூறிக்
கோலா லக்கண மிட்டுவ ராதார் நெக்குரு கப்பொருள்
கூறு கப்பெறில் நிற்கவும் இலதானூர்
கூடா நட்புமு ரைத்திடு கேடா விட்டகல் மட்டைகள்
கோமா ளத்துய ருட்பயம் உறலாமோ
பாலா மக்கட லிற்றுயில் மாலோ ரெட்டுத லைக்கிரி
பார்வா னுற்றவர் சொற்கொடு மலரோவப்
பார்மே லிக்கனு டற்பொறி யாய்வீ ழச்சுடும் வித்தகர்
பாலா பத்தரி டத்தியல் பயில்வோனே
மேலா யத்தொடு திக்கடை மேவார் வெற்பொட ரக்கரை
வேர்மா ளப்பொரு திட்டொளி விடும்வேலா
மேனா டர்ச்சிறை விட்டருள் மீளா விக்கிர மத்தொடு
வேதா வைச்சிறை இட்டருள் பெருமாளே. (உாஉ)

தனதத்தன தனதத்தன தனதத்தன தனதான.

1155. இடையித்தனை உளதுத்தைய ரிதழ்துய்த்தவர் அநுபோகம்
இளகிக்கரை புரளப்புள கிதகற்புர தனபாரம்
உடன்மற்கடை படுதற்குண மறநிற்குண உணர்வாலே
ஒருநிட்கள வடிவிற்புக ஒருசற்றருள் புரிவாயே
திடமற்றொளிர் நளினப்ரம சிறைபுக்கனன் எனவேகுந்
* ததிபட்சண † க்ருதபட்சண செகபட்சணன் எனவோதும்
விடபட்சணர் திருமைத்துனன் வெருவச்சுரர் பகைமேல்வேல்
விடுவிக்ரம கிரியெட்டையும் விழவெட்டிய பெருமாளே. (உாங)

தனதன தான தானன தனதன தான தானன
தனதன தான தானன தனதான.

1156. இருகுழை மீது தாவடி இடுவன ஓதி நீழலி
னிடமது தாவி மீள்வன நுதல்தாவி

* ததி-ததி, தயிர். † க்ருதம்-நெய்.

இழிவன காம வேதமு மொழிவன தாரை வேலென
எறிவன காள கூடமும் அழுதாகக்
கருகிய நீல லோசன அபிநய மாத ரார்தரு
கலவியில் மூழ்கி வாடிய தமியேனும்
கதிபெற ஈட ருதன பதிபசு பாச மானவை
கசடற வேறு வேறுசெய் தருள்வாயே
ஒருபது பார மோலியு மிருபது வாகு மேருவு
முததியில் வீழ வானரம் உடனேசென்
றுருகணை ஏவு ராகவன் மருகவி பூதி பூஷணர்
உணருப தேச தேசிக வரையேனற்
பரவிய கான வேடுவர் தருமபி ராம நாயகி
பரிபுர பாத சேகர சுரராஜன்
பதிகுடி ஏற வேல்தொடு முருகம யூர வாகன
பரவச ஞான யோகிகள் பெருமாளே. (உ௱ச)

---

தாஞ தனந்த தாஞ தனந்த தாஞ தனந்த தனதான.

1157. ஊனே றெலும்பு சீசீ மலங்க ளோடே நரம்பு கசுமாலம்
ஊழ்நோ யடைந்து மாசா னமண்டு மூஞேடுழன்ற கடைநாயேன்
நாஞ ரொடுங்க நாஞர் வணங்க நாஞர் மகிழ்ந்து உனையோத
நாஞ ரிரங்க நாஞ ருணங்க நாஞர் நடந்து விழநாஞர்
தானே புணர்ந்து தானே அறிந்து தானே மகிழ்ந்து அருளூறித்
*தாய்போல் பரிந்த தேஞேடுகந்து தானே தழைந்து சிவமாகித்
தானே வளர்ந்து தானே இருந்த தார்வே ணிஎந்தை அருள்பாலா
சாலோகதொண்டர் சாமீபதொண்டர் சாரூபதொண்டர் பெருமாளே.

---

தாத்த தானன தாத்த தானன தாத்த தானன தந்ததான.

1158. எட்டி லேவரை பாட்டிலேசில நீட்டிலேயினி தென்றுபாடி
ஈட்டு மாபொருள் பாத்து ஞதிக லேற்றமானகு லங்கள்பேசிக்
காட்டி லேவியல் நாட்டி லேபயில் வீட்டி லேயுல கங்களேசக்
காக்கைநாய்நரிபேய்க்குழாமுணயாக்கைமாய்வதொ ழிந்திடாதோ
கோட்டு†மாயிர நாட்ட ஞடுறை கோட்டு‡வாலிப மங்கைகோவே
கோத்த வேலயி லார்த்தசூர்பொரு வேற்சிகாவள துங்கவேளே

---

* தாய்போல் பரிந்ததேன்-உமாதேவியார். † ஆயிர நாட்டன் - ஆயிரங் கண்ணஞகிய தேவேந்திரன். ‡வால் இப மங்கை-தெய்வயானை.

பூட்டு வார்சிலை கோட்டு வேடுவர் பூட்கை சேர்குற மங்கைபாகா
பூத்த மாமலர் சாத்தி யேகழல் போற்றுதேவர்கள் தம்பிரானே.

---

தத்தத் தாத்த தத்தத் தாத்த தத்தத் தாத்த தனதான.

1159. கச்சுப் பூட்டு கச்சக் கோட்ட கத்திற் கோட்டு வரியாலம்
கக்கித் தேக்கு செக்கர்ப் போர்க்க யற்கட் கூற்றில் மயலாகி
அச்சக் கூச்ச மற்றுக் கேட்ட வர்க்குத் தூர்த்தன் எனநாளும்
அத்தப் பேற்றி லிச்சிப் பார்க்க றப்பித் தாய்த்தி ரியலாமோ
பச்சைக் கூத்தர் மெச்சிச் சேத்த *பத்மக் கூட்டில் உறைவோரி
பத்திற் சேர்ப்பல் சக்கிற் கூட்டர் பத்தக் கூட்டர் இயல்வானம்
மெச்சிப் போற்ற வெற்புத் தோற்று வெட்கக் கோத்த கடல்மீதே
மெத்தக்காய்த்தகொக்குக்கோட்டைவெட்டிச்சாய்த்த பெருமாளே.

---

தனதனந் தனதனன தனதனந் தனதனன
தனதனந் தனதனன தனதான.

1160. கடலினும் பெரியவிழி மலையினும் பெரியமுலை
கனகசெந் துவரதரம் இருதோள்பைங்
கழையினுங் குழையுமென மொழிபழுங் கிளவிபல
களவுகொண் டொருவர்மிசை கவிபாடி
அடலசஞ் சலனதுல னநுபமன் குணதரன்மெய்
அருள்பரங் குரனபயன் எனஆசித்
தலமரும் பிறவியினி அலமலம் பிறவியற
அருணபங் கயசரணம் அருள்வாயே
வடநெடுங் குலாசத கிரியினின் றிருகலுழி
மகிதலம் புகவழியும் அதுபோல
மதசலஞ் சலசலென முதுசலஞ் சலதிநதி
வழிவிடும் படிபெருகு முது†பாகை
உடையசங்க் ரமகவள தவளசிந் துரதிலக
னுலகுமிந் திரனுநிலை பெறவேல்கொண்
டுததிவெந் தபயமிட மலையொடுங் கொலையவுண
ருடனுடன் றமர்பொருத பெருமாளே. (உ௱அ)

---

* பத்மக் கூட்டி லுறைவோர் இபத்தில் சேர் பல் சக்கின் கூட்டர் எனப் பிரிக்க-பிரமதேவர், இந்திரர். †பாகை-பாகனை,

தத்தத் தனத்ததன தத்தத் தனத்ததன
தத்தத் தனத்த தனதான.

1161. கட்டக் கணப்பறைகள் கொட்டக் குலத்திளைஞர்
கட்டிப் புறத்தில் அணைமீதே
கச்சுக் கிழித்ததுணி சுற்றிக் கிடத்தியெரி
கத்திக் கொளுத்தி அனைவோரும்
சுட்டுக் குளித்துமனை புக்கிட் டிருப்பரிது
சுத்தப் பொயெப்ப துயிர்வாழ்வு
துக்கப் பிறப்பகல மிக்கச் சிவத்ததொரு
சொர்க்கப் பதத்தை அருள்வாயே
எட்டுக் குலச்சயில முட்டத் துளைத்தமரர்
எய்ப்புத் தணித்த கதிர்வேலா
எத்திக் குறத்தியிரு முத்தத் தனக்கிரியை
எற்பொற் புயத்தில் அணைவோனே
வட்டக் கடப்பமலர் மட்டுற்ற செச்சைமலர்
வைத்துப் பணைத்த மணிமார்பா
வட்டத் திரைக்கடலில் மட்டித் தெதிர்த்தவரை
வெட்டித் துணித்த பெருமாளே. (உ௱௬௧)

---

தத்ததன தானன தத்ததன தானன
தத்ததன தானன தனதான.

1162. கட்டமுறு நோய்திமை இட்டகுடில் மாமாய
கட்டுவிடு மோர்காலம் *அளவாவே
கத்தவுற வோர்பாலர் தத்தைசெறி வார்வாழ்வு
கற்புநெறி தான்மாய உயர்காலன்
இட்டவொரு தூதாளு முட்டவினை யால்மூடி
இட்டவிதி யேயாவி இழவாமுன்
†எத்தியுனை நாடோறு முத்தமிழி னாலோத
இட்டமினி தோடார நினைவாயே
துட்டரென ஏழ்பாரு முட்டவினை ஆள்சூரர்
தொக்கில்நெடு மாமார்பு துளையாகத்

*அளவா - அளந்து, ஏ - தேற்றக்குறிப்பு. † எத்தி - ஏத்தி.

தொட்டவடி வேல்வீர நட்டமிடு வார்பால
  சுத்ததமி ழார்ஞான முருகோனே
மட்டுமறை நால்வேத னிட்டமலர் போல்மேவ
  மத்தமயில் மீதேறி வருநாளே
வைத்தநிதி போல்நாடி நித்தமடி யார்வாழ
  வைத்தபடி மாறாத பெருமாளே. (உகஎ)

---

தந்த தானன தந்த தானன
  தந்த தானன தனதான.

1163. கண்டு போல்மொழி வண்டு சேர்குழல்
  கண்கள் சேல்மதி முகம்வேய்தோள்
கண்டு பாவனை கொண்டு தோள்களி
  லொண்டு காதலில் இருகோடு
மண்டி மார்பினில் விண்ட தாமென
  வந்த கூர்முலை மடவார்தம்
வஞ்ச மாலதில் நெஞ்சு போய்மடி
  கின்றமாயம தொழியாதோ
கொண்ட லார்குழல் கெண்டை போல்விழி
  கொண்டு கோகில மொழிகூறும்
கொங்கை யாள்குற மங்கை வாழ்தரு
  குன்றில் மால்கொடு செலும்வேலா
வெண்டி மாமன மண்டு சூர்கடல்
  வெம்ப மேதினி தனில்மீளா
வென்று யாவையு மன்றி வேலையும்
  வென்று மேவிய பெருமாளே. (உகக)

---

தத்தன தத்தன தத்தன தத்தன
  தத்தன தத்தன தனதான.

1164. கப்பரை கைக்கொள வைப்பவர் மைப்பயில்
  கட்பயி லிட்டிள வளவோரைக்
கைக்குள்வ சப்பட பற்கறை இட்டுமு
  கத்தைமி னுக்கிவ ருமுபாயப்

பப்பா மட்டைகள் பொட்டிடு நெற்றியர்
பற்றென உற்றவொர் தமியேனைப்
பத்மப தத்தினில் வைத்தருள் துய்த்திறை
பற்றலெ னக்கினி அமையாதோ
*குப்பா வப்படு பட்சமி குத்துள
முத்தரை யர்க்கொரு மகவாகிக்
குத்திர மற்றுரை பற்றுணர் வற்றவொர்
குற்றம றுத்திடு முதல்வோனே
விப்ரமு னிக்குழை பெற்றகொ டிச்சிவி
சித்ரத னக்கிரி மிசைதோயும்
விக்ரம மற்புய வெற்பினை இட்டெழு
வெற்பைநெ ருக்கிய பெருமாளே. (உகஉ)

---

தையதா னத்தனன தையதா னத்தனன
தையதா னத்தனன தனதான.

1165. கள்ளமீ னச்சுறவு கொள்ளுமீ னற்பெரிய
கல்விவீ றற்கரிய மனமாகும்
†கல்விடா துற்றதிசை சொல்விசா ரத்திசைய
மெய்கள்தோ ணிப்பிறவி அலைவேலை
மெள்ளவே றிக்குரவு வெள்ளிலார் வெட்சிதண
முல்லைவோ ருற்பலமு ளரிநீபம்
வில்லநீள் பொற்கனக வல்லிவே விட்டுனது
சொல்லையோ திப்பணிவ தொருநாளே
துள்ளு‡மா னித்தமுனி புள்ளிமான் வெற்புதவு
வள்ளிமா னுக்குமயல் மொழிவோனே
தொல்வியா ளத்துவளர் செல்வர்யா கத்தரையன்
எல்லைகா ணற்கரியர் குருநாதா
தெள்ளுநா தச்சுருதி வள்ளல்மோ விப்புடைகொள்
செல்வனே முத்தமிழர் பெருவாழ்வே
§தெய்வயா னைக்கிளைய வெள்ளையா னைத்தலைவ
தெய்வயா னைக்கினிய பெருமாளே. (உகங)

---

* கு பரவப்படு - பூமியிலுள்ளோரால் துதிக்கப்படும். † கல் கல்லை.
‡ மா னித்த முனி - மால் நீத்த முனி. § தெய்வ யானை - விநாயகர்.

தன்னன தனதன தன்னன தனதன
தன்னன தனதன தனதான.

1166. கன்னியர் கடுவிட மன்னிய கயலன
கண்ணிலு மிருகன தனமீதும்
கண்மைகள் மருவிய மன்மத னுருவிலி
மென்மைகொ ளுருவிலு மயலாகி
இன்னல்செய் குடிலுட னின்னமு மூலகினி
லிந்நிலை பெறவிவண் உதியாதே
எண்ணமு னடியவர் நண்ணிய பதமிசை
என்னையும் வழிபட விடவேணும்
பொன்னவ மணிபயில் மன்னவ புனமற
மின்மூகை தழுவிய புயவீரா
புண்ணிய முளபல விண்ணவர் தொழுமுத
வெண்மலை யொடுபொரு கதிர்வேலா
தன்னிறை சடையிறை என்முனி பாவரு
மின்னிசை உறுதமிழ் தெரிவோனே
தண்ணளி தருமொரு பன்னிரு விழிபயில்
சண்முக அழகிய பெருமாளே. (உகச)

---

தந்ததன தத்ததத்த தந்ததன தத்ததத்த
தந்ததன தத்ததத்த தனதான.

1167. கிஞ்சுகமெ னச்சிவத்த தொண்டையள்மி கக்கறுத்த
கொண்டையள்பு னக்கொடிச்சி அதிபாரக்
கிம்புரிம ருப்பையொத்த குங்குமமு கைக்குறத்தி
கிங்கரியெ னப்படைத்த பெயர்பேசா
நெஞ்சுருகி நெக்குநெக்கு நின்றுதொழு நிர்க்குணத்தர்
நிந்தனையில் பத்தர்வெட்சி மலர்தூவும்
நின்பதயு கப்ரசித்தி என்பனவ குத்துரைக்க
நின்பணித மிழ்த்ரயத்தை அருள்வாயே
கஞ்சன்வர விட்டதுட்ட குஞ்சரம ருப்பொசித்த
கங்கணும தித்திகைக்க மதம்வீசும்

கங்கெதறிக ளிற்றுரித்து வென்றுதிரு நட்டமிட்ட
கம்பனுமதிக்கவுக்ர வடிவேல்கொண்
டஞ்சியஜ கத்ரயத்தை அஞ்சலென விக்ரமித்து
அன்பர்புக ழுப்பொருப்பொ டமராடி
அன்றவுண ரைக்களத்தில் வென்றுசுதி யைக்கலக்கி
அண்டர்சிறை வெட்டிவிட்ட பெருமாளே. (உகரு)

தனதனன தாத்தன தனதனன தாத்தன
தனதனன தாத்தன தனதான.

1168. குடிமைமனை யாட்டியும் அடிமையொடு கூட்டமும்
குலமுமிறு மாப்புமி குதியான
கொடியபெரு வாழ்க்கையி லினியபொரு ளீட்டியெ
குருடுபடு மோட்டென உடல்வீழில்
அடைவுடைவி டாச்சிறு பழையதுணி போர்த்தியெ
அரியசுடு காட்டிடை இடுகாயம்
அழியுமள வாட்டிலுன் அமலமலர் மாப்பத
அருணசர ணஸ்பதம் அருள்வாயே
அடியிநெடு மாத்தரு மொளமொளமொ ளாச்செனை
அலறிவிழ வேர்க்குல மொடுசாய
அவுணர்படை தோற்பெழ அருவரைக ளார்ப்பெழ
அயிலலகு சேப்பெழ மறைநாலும்
உடையமுனி ஆட்பட முடுகவுணர் கீழ்ப்பட
உயரமரர் மேற்பட வடியாத
உததிகம ராப்பிள முதுகுலிச பார்த்திபன்
உலகுகுடி ஏற்றிய பெருமாளே. (உகசு)

தனதனந்த தத்த தனதனந்த தத்த
தனதனந்த தத்த தனதான.

1169. குறைவதின்றி மிக்க சலமெலும்பு துற்ற
குடிலிலொன்றி நிற்கும் உயிர்மாயம்
குலைகுலைந்து தொப்பை இடைநினைந்து நிற்ப
கொடியகொண்ட லொத்த உருவாகி
மறலிவந்து துட்ட வினைகள்கொண்ட லைத்து
மரணமென்ற துக்க மணுகாமுன்

மனமிடைஞ்ச லற்று னடிநினைந்து நிற்க
மயிலில்வந்து முத்தி தரவேணும்
அறுகுமிந்து மத்த மலையெறிந்த அப்பு
மளிசிறந்த புட்பம் அதுசூடி
அருநடஞ்செ யப்ப ரருளிரங்கு கைக்கு
மரியவின்சொல் செப்பு முருகோனே
சிறுகுலந்த னக்கு ளறிவுவந்து தித்த
சிறுமிதன்த னத்தை அணைமார்பா
திசைமுகன்தி கைக்க அசுரரன்ற டைத்த
சிறைதிறந்து விட்ட பெருமாளே. (உகஎ)

---

தான தன்ன தத்த தான தனன தத்த
தான தனன தத்த தனதான.

1170. கோக னகமு கிழ்த்த போக புளகி தத்த
கோடு தலைகு லைத்த முலையாலே
கூடவரவ ழைக்கு மாடு குழைய டர்த்த
நீடி யகுவ ளைக்கண் மடமாதர்
ஆக முறவ ணைத்து காசை அபக ரித்து
மீள இதழ்க டிப்ப தறியாதே
ஆசை அதுகொ ளுத்து மால மதுகு டித்த
*சேவில் பரித விப்ப தினியேனோ
மாக நதிம திப்ர தாப மவுலி யர்க்கு
சாவி யதுவொ ரர்த்த மொழிவோனே
வாகு வலைய சித்ர ஆறி ருபுய வெற்பில்
வாழ்வு பெறுகு றத்தி மணவாளா
வேக உரக ரத்ந நாக சயன சக்ர
மேவு மரக தத்தின் மருகோனே
வீசு திரைய லைத்த வேலை சுவற வெற்றி
வேலை உருவ விட்ட பெருமாளே. (உகஅ)

---

*சேவில் பரிதவிப்பது - சேல்களை ஒத்த விழியால் பரிதவிப்பது.

தந்தந்தனந்த தந்தந்தனந்த
தந்தந்தனந்த　　தனதான.

1171. சந்தம்புனைந்து சந்தஞ்சிறந்த
தண்கொங்கை வஞ்சி　　　மனையாளும்
தஞ்சம்பயின்று கொஞ்சுஞ்சதங்கை
தங்கும்பதங்கள்　　　இளையோரும்
எந்தந்தனங்க ளென்றென்றுநெஞ்சி
லென்றும்புகழ்ந்து　　　மிகவாழும்
இன்பங்களைந்து துன்பங்கள்மங்க
இன்றுன்பதங்கள்　　　தரவேணும்
கொந்தின்கடம்பு செந்தண்புயங்கள்
கொண்டங்குறிஞ்சி　　　உறைவோனே
கொங்கின்புனஞ்செய் மின்கண்டகந்தி
குன்றம்பிளந்த　　　கதிர்வேலா
ஐந்திந்த்ரியங்கள் வென்றொன்றுமன்ப
ரங்கம்பொருந்தும்　　　அழகோனே
அண்டந்தலங்க ளெங்குங்கலங்க
அன்றஞ்சவென்ற　　　பெருமாளே. (உகசக)

---

தந்தனந் தனந்த தந்த தந்தனந் தனந்த தந்த
தந்தனந் தனந்த தந்த　　தனதான

1172. சந்தனங் கலந்த குங்கு மம்புனைந் தணிந்த கொங்கை
சந்திரந் ததும்ப சைந்து　　　தெருவூடே
சங்கினங் குலுங்க செங்கை எங்கிலும் பணிந்து டம்பு
சந்தனந் துவண்ட சைந்து　　　வருமாபோல்
கொந்தளங் குலுங்க வஞ்சி லம்புபொங் கவின்சு கங்கள்
கொஞ்சிபொன் தொடர்ந்தி டும்பொன்　　　மடவார்தோள்
கொங்கைபைங் கரம்பு ணர்ந்த ழிந்துணங் கலுந்த விர்ந்து
கொஞ்சுநின் சரங்க ளண்ட　　　அருள்தாராய்
தந்தனந் தசெஞ்சி லம்பு கிண்கிணின்கு லங்கள் கொஞ்ச
தண்டையம் பதம்பு லம்ப　　　வருவோனே
சந்தனம் புனைந்த கொங்கை கண்களுஞ் சிவந்து பொங்க
சண்பகம் புனங்கு றம்பொன்　　　அணிமார்பா

வந்தநஞ் சுகந்* தமைந்த கந்தரன் புணர்ந்த வஞ்சி
மந்தரம் பொருந்த கொங்கை உமையீனும்
மைந்தனென் றுகந்து விஞ்சு மன்பணிந்த சிந்தை அன்பர்
மங்கலின் றுளம்பு குந்த பெருமாளே. (உஉ0)

---

தனதன தனத்த தத்த தனதன தனத்த தத்த
தனதன தனத்த தத்த தனதான.

1173. சலமல மசுத்த மிக்க தசைகுரு தியத்தி மொய்த்த
தடியுடல் தனக்கு ளுற்று மிகுமாயம்
சகலமு மியற்றி மத்த மிகுமிரு கடக்கை யத்தி
தனிலுரு மிகுத்து மக்க ளொடுதாரம்
கலனணி துகிற்கள் †கற்பி னெடுகுல மனைத்து முற்றி
சருவழி அவத்தி லுற்று மகிழ்வாகிக்
கலைபல பிடித்து நித்த மலைபடு மசர்த்த மூற்ற
கடுவினை தனக்குள் நிற்ப தொழியாதோ
மலைமக ளிடத்து வைத்து மதிபுனல் சடைக்குள் வைத்து
மழுவனல் கரத்துள் வைத்து மருவார்கள்
மடிவுற நினைத்து வெற்பை வரிசிலை இடக்கை வைத்து
மறைதொழ நகைத்த அத்தர் பெருவாழ்வே
பலதிசை நடுக்கமுற்று நிலைகெட அடற்கை உற்ற
படையது பொருப்பில் விட்ட முருகோனே
பழுதறு தவத்தி லுற்று வழிமொழி உரைத்த பத்தர்
பலருய அருட்கண் வைத்த பெருமாளே. (உஉக

---

தாந்தன தானதன தாந்தன தானதன
தாந்தன தானதன தனதான.

1174. சாங்கரி பாடிவிட வோங்கிய ஞானசுக
தாண்டவ மாடியவர் வடிவான
சாந்தம தீதமுணர் கூர்ந்துறு சாதியவர்
தாங்களு ஞானமுற அடியேனும்
தூங்கிய பார்வையொடு தாங்கிய வாயுவொடு
தோன்றிய சோதியொடு சிவயோகம்

---

* அமைந்த-அமைத்த. † கற்பு-கல்வி. உய-வாழ.

தூண்டிய சிவனொடு வேண்டிய காலமொடு
சோம்பினில் வாழும்வகை அருளாயோ
வாங்கைகை யானையென வீங்குலை வாழைவளர்
வான்பொழில் சூழும்வய லயமேறி
மாங்கனி தேனொழுக வேங்கையின் மேலரிகள்
மாந்திய வாறணிய மலைமீதிற்
பூங்கொடி போலுமிடை ஏங்கிட வாரமணி
பூண்பன பாரியன தனபாரப்
பூங்குற மாதினுட னுங்குற வாடியிருள்
பூம்பொழில் மேவிவளர் பெருமாளே. (௨௨௨)

---

தனதான தந்ததன தனதான தந்ததன
தனதான தந்ததன தனதான.

1175. சிவஞான புண்டரிக மலர்மாது டன்கலவி
சிவபோக மன்பருக அறியாமல்
செகமீது முன்றுமல வடிவாயி ருந்துபொது
திகழ்மாதர் பின்செருமி அறிவேனோ
தவமாத வங்கள்பயில் அடியார்க ணங்களொடு
தயவாய்ம கிழ்ந்துதினம் விளையாடத்
தமியேன்ம லங்களிரு வினைநோயி டிந்தலற
தினாளும் வந்தெதன்முன் வரவேணும்
உவகாரி அன்பர்பணி கலியாணி எந்தையிட
முறைநாய கங்கவுரி சிவகாமி
ஒளிராணி யின்கைமிசை மகிழ்மாது ளங்கனியை
ஒருநாள்ப கிர்ந்தவுமை அருள்பாலா
அவமேபி றந்தவினை இறவாம லன்பர்புகு
மமுதால யம்பதவி அருள்வோனே
அழகாந கம்பொலியு மயிலாகு றிஞ்சிமகிழ்
அயிலாபு கழ்ந்தவர்கள் பெருமாளே. (௨௨௩)

---

தத்ததன தான தத்ததன தான
தத்ததன தான தனதான.

1176. சுட்டதுபோ லாசை விட்டுலகா சார
துக்கமிலா ஞான சுகமேவிச்

சொற்காணா தீத நீர்க்குணமூ டாடு
சுத்தநிரா தார வெளிகாண

மொட்டலர்வா ரீச சக்ரசடா தார
முட்டவுமீ தேறி மதிமீதாய்

மூப்பதுமா றாறு மூப்பதுவே றான
குத்திரையா மோனம் அடைவேனோ

எட்டவொணா வேக னத்தொடுகோ கோவெ
னப்பிரமா ஓட வரைசாய

எற்றியவே ழாழி வற்றிடமா றாய
எத்தனையோ கோடி அசுரேசர்

பட்டொருசூர் மாள விக்ரமவே லேவு
பத்திருதோள் வீர திணைகாவல்

பத்தினிதோள் தோயு முத்தமமா றாது
பத்திசெய்வா ருடர் பெருமாளே. (௨௨௪)

---

தனந்தான தானான தனந்தான தானான
தனந்தான தானான தனதான.

1177. செழுந்தாது பார்மாது மரும்பாதி ரூபோடு
சிறந்த்யாதி னாமாசை ஒழியாத

திறம்பூத வேதாள னரும்பாவ மேகோடி
செயுங்காய நோயாளன் நரகேழில்

விழிந்தாழ வேமூழ்க இடுங்காலன் *மேயாவி
விடுங்கால மேநாயென் வினைபாவம்

விரைந்தேக வேவாசி துரந்தோடி யேஞான
விளம்போசை யேபேசி வரவேணும்

அழுங்கோடி தேவர்க ளமர்ந்தார வானீடி
அழன்றேகி மாகீத நெடுவேலை

அதிர்ந்தோட வேகாலன் விழுந்தோட வேசூர
அலங்கார வேலேவு முருகோனே

கொழுங்காவி லேமாதர் செழுஞ்†சேலை யேகோடு
குருந்தேறு மால்மாயன் மருகோனே

* மேய் - மேவி. † சேலையே கோடு - சேலைகளைக் கொண்டு.

குறம்பாடு வார்சேரி புதுந்தாசை மாதோடு
குணங்கூடியேவாழு பெருமாளே. (௨௨௫)

தத்த தனதனன தத்த தனதனன
தத்த தனதனன தனதான.

1178. தத்த னமுமடிமை சுற்ற மொடுபுதல்வர்
தக்க மனையினமு மனைவாழ்வும்
தப்பு நிலைமையணு கைக்கு வர*விரகு
தைக்கு மயல்நினைவு குறுகாமுன்
பத்தி உடனுருகி நித்த முனதடிகள்
பற்று மருள்நினைவு தருவாயே
பத்து முடியுருளு வித்த பகழியினர்
பச்சை நிறமுகிலின் மருகோனே
அத்தி முகவனழ குற்ற †பெழைவயிற
னப்ப மவரைபொரி அவல்தேனும்
அப்பி அமுதுசெயு ‡ மொய்ப்ப னுதவவட
விக்குள் மறமகளை அணைவோனே
முத்தி தருமுதல்வர் முக்க ணிறைவரொடு
முற்று மறைமொழியை மொழிவோனே
முட்ட வசுரர்கிளை கெட்டு முறியமுதல்
வெட்டி அமர்பொருத பெருமாளே. (௨௨௬)

தத்தனத் தத்ததன தத்தனத் தத்ததன
தத்தனத் தத்ததன தனதான.

1179. தத்துவத் துச்செயலொ §டொட்டில்பட் டக்குருகு
சத்துவிட் டப்படியி வடியேனும்
சச்சிலுற் றுப்படியில் விட்டுவிட் டுக்குளறி
சத்துவத் தைப்பிரிய விடும்வேளை
சுத்தமுத் தப்பதவி பெற்றநற் பத்தரொடு
தொக்குசற் றுக்கடையன் மிடிதீரத்

---

*விரகு உதைக்கும் மயல் நினைவு - அறிவைச் சிதைக்கும் மயக்க நினைவு.
† பெழை - பேழை. ‡ மொய்ப்பன் - மொய்ம்பன். § ஒட்டு - பறவை பிடிப்போர் அதுவந்து படப்பசைதடவி வஞ்சித்து வைத்திருக்கும் கருவி, கண்ணி

துப்புமுத் தச்சரண பச்சைவெற் றிப்புரவி
சுற்றவிட் டெக்கடுகி வாவேணும்
*வித்தகத் திப்பவள தொய்யையப் பற்கிளைய
வெற்றிசத் திக்†கரக முருகோனே
வெற்புமெட் டுத்திசையும் வட்டமிட் டுச்சுழல
விட்டபச் சைச்‡சரண மயில்வீர
கத்தர்கொட் டைச்சடையர் முக்கணக் கக்கடவுள்
கச்சியப் பர்க்கருள்செய் குருநாதா
§கற்பதத் தைக்குருகி உற்பதத் துக்குறவர்
||கற்பினுக் கற்புதவு பெருமாளே. (உஉஎ)

தந்தனந் தந்தனந் தந்தனந் தந்தனந்
தந்தனந் தந்தனந் தனதான.

1180. தந்தமுந் துன்பவெஞ் சிந்தைகொண் டந்தகன்
தண்டவொன் றென்றெடுங் கொடுமாவி
தஞ்சமென் றும்பரிந் தின்சொல்வஞ் சந்தெரிந்
தன்றுமென் றுந்தனந் தனைநாடி
நின்றனன் பென்பதொன் றின்றிநன் றென்றுநெஞ்
சின்கணன் பொன்றில்மங் கையர்நேசம்
நின்றளந் துஞ்சளங் கொண்டிடும் ¶புன்கணந்
தின்பமொன் றின்றியிங் குழல்வேனோ
சுந்தரன் பந்தமுஞ் சிந்தவந் தன்புடன்
தொண்டனென் றன்றுகொண் டிடுமாதி
தும்பைசெம் பொன்சொரிந் துந்தருங் கொன்றைதுன்
பங்கடிந் தென்பொடுந் தொலையாநீர்
அங்கமுந் திந்துவுங் கெந்தமுஞ் சங்கொழுந்
தன்றுமின் றும்புனைந் திடும்வேணி
அன்பர்நெஞ் சின்புறுஞ் செஞ்சொலன் கந்தனென்
றண்டரண் டந்தொழும் பெருமாளே. (உஉஅ)

---

* வித்த கத்தி - வித்தக + அத்தி. † கரக - கர + அக. ‡ சரணம் - தோகை. § கற்ப தத்தை - கற்பக நாட்டுத் தெய்வயானை. || கற்பினிக்கு - கற்பினையுடைய வள்ளிக்கு. ¶ புன்கண் நந்த எனப் பிரிக்க. நந்த - விருத்தியாக.

தனதனன தானனந் தனதனன தானனந்
தனதனன தானனந் தனதான.

1181. தலைவலய போகமுஞ் சலனமிகு மோகமுந்
தவறுதரு காமமுங் கனல்போலுந்
தணிவரிய கோபமுந் துணிவரிய லோபமுஞ்
சமயவெகு ரூபமும் பிறந்தேறும்
அலமலமெ னுமெழுந் தவர்களது பூதிகொண்
டறியுமொரு காரணந் தனைநாடா
ததிமதபு ராணமுஞ் சுருதிகளு மாகிநின்
றபரிமித மாய்விளம் புவதோதான்
கலகவிரு பாணமுந் திலகவொரு சாபமுங்
களபமொழி யாதகொங் கையுமாகிக்
கவருமவ தாரமுங் கொடியபரி தாபமுங்
கருதியிது வேளையென் றகிராத
குலதிலக மானுடன் கலவிபுரி வாய்பொருங்
குலிசகர வாசவன் திருநாடு
குடிபுகநி சாசரன் பொடிபட*ம கீதரன்
குலையநெடு வேல்விடும் பெருமாளே. (௨௨௬)

தனதன தனதன தனதன தனதன தனதன தனதான

1182. தவநெறி தவறிய குருடுகள் தலைபறி கதறிய பரபாதந்
தருமிகள் கருமிகள் வெகுவித சமயிக ளவரொடு சருவாநின்
றவனிவ னுவனுட னவளிவ ளுவளது இதுஉது எனுமாறற்
றருஉரு ஒழிதரு உருவுடை அதுபதி தமியனும் உணர்வேனோ
குவலய முழுவது மதிர்பட வடகுவ டிடிபட உரகேசன்
கொடுமுடி பலநெறி தரநெடு முதுகுரை கடல்புனம் வரிதாகத்
துவல்கொடு முறையிடு சுரர்பதி துயரது கெடநிசி சரர்சேனை
துகளெழ நடநவில் மரகத துரகதம் வரவல பெருமாளே

தனதன தாத்தனத் தனதன தாத்தனத்
தனதன தாத்தனத் தனதான.

1183. இதலையு லாத்துபொற் களபம்வி டாப்புகுத்
த்ரிவிதக டாக்களிற் றுரகோடு

* மகீதரன்-ஆதிசேஷன்.

சிகாம காப்பைக் குவடென வாய்த்துநற்
சுரர்குடி யேற்றிவிட் டிளநீலை
மதனவி டாய்த்தனத் தினுஞா லாட்டுசெப்
பிணைமுலை மாத்தவக் கொடிபோல்வார்
வலையில் ராப்பகற் பொழுதுகள் போக்குமற்
றெனையுனை வாழ்த்தவைத் தருள்வாயே
சததள பார்த்திபற் கரியுரு ஷோத்தமற்
கெரிகண லேற்றவற் குணராதோர்
சகலச மார்த்தசத் தியவன ரூட்சமுக்
கியபர மார்த்தமுற் புகல்வோனே
கதிர்மணி நீர்க்கடற் சுழிபுகு ராட்சதக்
கலகப ராக்ரமக் கதிர்வேலா
கருதிய பாட்டினிற் றலைதெரி மாட்சணக்
கவிஞரு சாத்துணைப் பெருமாளே. (உகஙக)

தனதன தனன தனதன தனன
தனதன தனன தனதான.

1184. திரிபுர மதனை ஒருநொடி யதனி
லெரிசெய்த ருளிய சிவன்வாழ்வே
சினமுடை யசுரர் பனமது வெருவ
மயிலது முடுகி விடுவோனே
பருவரை யதனை உருவிட எறியு
மறுமுக முடைய வடிவேலா
பசலையொ டணையு மிளமுலை மகளை
மதன்விடு பகழி தொடலாமோ
கயதிரு முகமு மிடமுடை வயிறு
முடையவர் பிறகு வருவோனே
கனதன முடைய குறவர்த மகளை
கருணையொ டணையு மணிமார்பா
அரவணை துயிலு மரிதிரு மருக
அவனியு முழுதும் உடையோனே
அடியவர் வினையு மமரர்கள் துயரும்
அறவரு ளுதவு பெருமாளே. (உகஙஉ)

தனதந்த தனதனன தனதந்த தனதனன
தனதந்த தனதனன தனதான.

1185. திரைவஞ்ச இருவினைகள் நரையங்க மலமழிய
சிவகங்கை தனில்முழுகி விளையாடிச்
சிவம்வந்து *குதிகொளக வடிவுன்றன் வடிவமென
திகழண்டர் முனிவர்கணம் அயன்மாலும்
ஆரன்மைந்த னெனகளிறு முகனெம்பி எனமகிழ
அடியென்க ணளிபாவ மயிலேறி
அயில்கொண்டு திருநடன மெனதந்தை உடன்மருவி
அருமந்த பொருளையினி அருள்வாயே
பரியென்ப நரிகள்தமை நடனங்கொ டொருவழுதி
பரிதுஞ்ச வருமதுரை நடராஜன்
பழியஞ்சி எனதருகி லுறைபுண்ட ரிகவடிவ
பவளஞ்செ லுமைகொழுநன் அருள்பாலா
இருள்வஞ்ச கிரியவுண ருடனெங்க ளிருவினையு
மெரியுண்டு பொடியவயில் விடுவோனே
எனதன்பி லுறைசயில மகிழ்வஞ்சி குறமகளொ
டெணுபஞ்ச ணையின்மருவு பெருமாளே. (உஙங)

---

தாஞன தாத்த தாஞன தாத்த
தாஞன தாத்த தனதான.

1186. †தீயுதை தாத்ரி பானீய மேற்ற
வானீதி யாற்றி கழுமாசைச்
சேறாறு தோற்பை யாஞகை நோக்கு
மாமாயை தீர்க்க அறியாதே
பேய்பூத மூத்த பாறோரி காக்கை
‡பீறுவி ழாத்தின் உடல்பேணிப்
பேயோன டாத்து கோமாளி வாழ்க்கை
போமாறு போர்த்துன் அடிதாராய்
வேயூரு சீர்க்கை வேல்வேடர் காட்டி
லேய்வாளை வேட்க உருமாறி

---

* குதிகொளகம் - குதிகொள + அகம் அகம்-யான் அகவடிவு - என்னுடைய வடிவம். † தீயுதைவான்-தீ, கால், மண், நீர், வான். ‡பீறு இழா-பீறிஇழுத்து.

மீளாது வேட்கை மீதூர வாய்த்த
வேலோடு வேய்த்த இளையோனே
மாயூர வேற்றின் மீதேபு காப்பொன்
மாமேரு வேர்ப்ப றியமோதி
மாறான மாக்கள் நீறாக ஓட்டி
வானாடு காத்த பெருமாளே. (உ௬௪)

---

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தனதான.

1187. துடித்தெதிர் வடித்தெழு குதர்க்கச மயத்தவர்
சுழற்கொரு படிப்படி எதிர்கூறித்
துகைப்பன மறத்தலை அறுப்பன வில்விட்டிருள்
துணிப்பன கணிப்பன பலவான
முடித்தலை செழிப்பன முழுக்கவ டிமைப்பட
முறைப்படு மறைத்திரள் அறியாத
முதற்பொருள் புலப்பட உணர்த்துவை எனக்கொரு
மொழிப்பொருள் பழிப்பற அருள்வாயே
குடிப்பன முகப்பன நொடிப்பன நடிப்பன
கொழுத்தகு ருதிக்கடல் இடையூடே
குதிப்பன மதிப்பன குளிப்பன களிப்பன
குவட்டினை இடிப்பன சிலபாடல்
படிப்பன திருப்புக ழெடுப்பன முடிப்பன
பயிற்றிய லகைக்குலம் விளையாடப்
பகைத்தெழு மரக்கரை இமைப்பொழு தினிற்பொடி
படப்பொரு துழக்கிய பெருமாளே. (உ௬௫)

---

தத்த தத்த தானனந் தத்த தத்த தானனந்
தத்த தத்த தானனத் தனதான.

1188. துத்தி நச்ச ராவிளம் பிச்சி நொச்சி கூவிளஞ்
சுக்கி லக்க லாமிர்த்தப் பிறைரூதம்
சுத்த ரத்த பாடலம் பொற்க டுக்கை ஏடலஞ்
சுத்த சொற்ப கீரதித் திரைநீலம்
புத்தெ ருக்கு பாழிகங் கொத்தெ டுத்த தாளிதண்
பொற்பு மத்தை வேணியர்க் கருள்கூரும்

புத்தி சித்தி வாய்கனஞ் சுத்த சத்ய வாசகம்
புற்பு தப்பி ராணனுக் கருள்வாயே
பத்தி உற்ற தோகையம் பச்சை வெற்றி வாகனம்
பக்க மிட்டு லாவியச் சுரர்மாளப்
பக்க விட்டு வாய்நிணங் கக்க வெட்டி வாய்தரும்
பத்ம சிட்ட னோடுமுத் தெறிமீனக்
கைத்த லைப்ர வாகையுந் தத்த ளிக்க மாமுறிந்
துட்க மூத்து வாரணச் சதகோடி
கைக்க ளிற்று வாரணம் புக்கொ ளிக்க வாரணங்
கைப்பி டித்த சேவகப் பெருமாளே. (உ௲சு)

---

தனன தத்த தைய தனன தத்த தைய
தனன தத்த தைய தனதான.

1189. தெரிவை மக்கள் செல்வ முரிமை மிக்க உண்மை
தெரிவ தற்கு முள்ள முணராமுன்
சினமி குத்த திண்ணர் தனிவ ளைத்து வெய்ய
சிலுகு தைத்து வண்மை சிதையாமுன்
பரவை புக்கு தொய்யு மரவ ணைக்குள் வைகு
பாம னுக்கு நல்ல மருகோனே
பழுதில் நிற்சொல் சொல்லி எழுதி நித்த முண்மை
பகர்வ தற்கு நன்மை தருவாயே
இருகி ரிக்க ளுள்ள வரைத டிக்கு மின்னு
மிடியு மொய்த்த தென்ன எழுகுரை
எழுக டற்கு ளுள்ளு முழுகு வித்து விண்ணு
ளிமைய வர்க்கு வன்மை தருவோனே
அரிவை பக்க முய்ய உருகி வைக்கு மைய
ரறிய மிக்க உண்மை அருள்வோனே
அறிவி னுக்கு ளென்னை நெறியில் வைக்க வல்ல
அடிய வர்க்கு நல்ல பெருமாளே. (உ௲எ)

---

தந்தன தந்த தந்தன தந்த
தந்தன தந்த தனதான.

1190. தென்றலு மன்றி இன்றலை பொங்கு
திண்கட லொன்று மிகமோதச்

செந்தழ லென்று வெந்தழல் சிந்து
திங்களும் வந்து துணையேய
அன்றிலு மன்றி துன்றுச ரங்க
ளைந்துமெ னெஞ்சை அழியாதே
அந்தியி லென்றன் வெந்துய ரஞ்சு
அன்பொட லங்கல் தரவேணும்
வென்றிவி ளங்கு குன்றவர் வஞ்சி
விஞ்சிய கொங்கை புணர்மார்பா
வெண்டர ளங்கள் தண்டைச தங்கை
மின்கொடி லங்கு கழலோனே
கொன்றைய ணிந்த சங்கர னன்று
கும்பிட வந்த குமரேசா
குன்றிய அண்ட ரன்றுய வென்று
குன்றமெ றிந்த பெருமாளே. (உ௩அ)

---

தானன தனன தானன தனன
தானன தனன தனதான.

1191. தோரண கனக வாசலில் முழவு தோல்முர சதிர முதிராத
தோகையர் கவரி வீச*வ யிரியர் தோள்வலி புகழ மதகோப
வாரண ரதப தாகினி துரக †மாதிர நிறைய அரசாகி
வாழினும் வறுமை கூரினு நினது வார்கழ லொழிய மொழியேனே
பூரண புவன காரண ‡சவரி பூதர புளக தனபார
பூஷண நிருதர் தூஷண விபுதர் பூபதி நகரி குடியேற
ஆரண வனச ஈரிரு குடுமி ஆரியன் வெருவ மயிலேறும்
ஆரிய பரம ஞானமு மழகு மாண்மையு முடைய பெருமாளே.

---

தத்தன தனத்த தத்தன தனத்த
தத்தன தனத்த தனதான.

1192. நச்சுவாள் விழிக்கொ டெற்றியே தனத்தை
நத்துவார் சுகத்தில் நலமாக
நட்டமா மனத்தை இட்டமே கொடுத்து
நத்துவாழ் கடற்குள் அலைபோலே

---

* வயிரியர்-புகழ்ந்து பாடுவோர். † மாதிரம்-திசை. ‡சவரி-குறத்தி.

கச்சமே செலுத்தி அச்சமே படுத்து
கட்டவேழ் பிறப்பு விடவேதான்
கற்றறா லுகக்க வெட்கமே செறித்த
கட்டனே னினைப்ப தொருநாளே
இச்சையே செலுத்தி உச்சிதாள் பலிக்கு
மிட்டமா லவற்கு மருகோனே
எற்றுவா ரிதிக்குள் முற்றிநீள் பொருப்பை
எக்கிநேர் மடித்த இளையோனே
மெச்சவே புடைத்த முத்தமார் தனத்தி
மிக்கவாள் படைத்த விழியாலே
வெட்டுமா மறத்தி ஒக்கவே இருக்க
வெற்றிவே லெடுத்த பெருமாளே (உ௪0)

தத்ததன தானதத்த தத்ததன தானதத்த
தத்ததன தானதத்த தனதான.

1193. நற்குணமு ளார்தமைப்போல் மைக்குழலி லேசிறக்க
நற்பரிம ளாதிதுற்ற மலர்சூடி
நச்சுவிழி யால்மயக்கி இச்சைபல பேசியுற்று
நற்பொருள லாமனத்தர் வசமாகி
வெற்பனைய மாதனத்தை பொற்புறவு ருவணைத்து
மெத்தமய லாகிநித்த மெலியாதே
வெட்சிகமழ் நீபபுட்ப வெற்றிசிறு பாதபத்ம
மெய்க்கிருபை நீயளிப்ப தொருநாளே
ரத்தினப ணாநிருத்தன் மெச்சுதனு நாடுமிக்க
லட்சணகு மாரசுப்ர மணியோனே
*நற்றிசையு மேறியிட்ட பொய்ச்சமணை வேரறுத்து
நற்றிருநி றேபரப்பி விளையாடும்
நற்சனகு மாரவ்ருத்தி அற்புதசி வாயனுக்கொர்
சற்குருவி நோதசித்ர மயில்வீரா
சக்ரதரன் மார்பகத்தி லுக்ரமுட னேதரித்த
சத்தியடை யாளமிட்ட பெருமாளே. (உ௪௧)

*நற் றிசையும்-நாற் றிசையும்

தனதன தனதனத் தனதன தனதனத்
தனதன தனதனத் தனதான.

1194. பரிமள மலரடுத் தகில்மண முழுகிமைப்
பாவிய ம்ருகமதக் குழல்மாதர்
பருமணி வயிரமுத் திலகிய குழையினிற்
படையொரு வனவிழிக் கயலாலே
எரியுறு மெழுகெனத் தனிமன மடையநெக்
கினிமையொ டுருகவிட் டவமேயான்
இருவினை நலியமெய்த் திறலுட னறிவுகெட்
டிடர்படு வதுகெடுத் தருள்வாயே
சொரிமத அருவிவிட் டொழுகிய புகர்முகத்
தொளைபடு கரமலைக் கிளையோனே
துடியிடை ஒருகுறக் குலமயில் புளகிதத்
துணைமுலை தழுவுபொற் புயவீரா
அரியன பலவிதத் தொடுதிமி லையுமுடுக்
கையுமொகு மொகுவெனச் சதகோடி
அலகையு முடனடித் திடவடி அயிலெடுத்
தமர்செயு மறுமுகப் பெருமாளே. (உசஉ)

தத்தனத் தத்தனத் தத்தனத் தத்தனத்
தத்தனத் தத்தனத் தனதான.

1195. பற்றறெட் டைப்படைத் துட்டிருட் டைத்தயிர்ப்
பத்தைமுட் டிப்படுத் தயில்மாதர்
பக்கமிட் டுப்பொருட் கொட்*குமிட் டப்பாப்
பற்றுகெட் டுப்பயிர்க் களைபோலும்
கற்றகட் டுக்கவிக் கொட்டமொட் டிக்கனைத்
திட்டு†கத் தக்கினுற் றகமாயும்
கட்டமற் றுக்கழற் பற்றிமுத் திக்கருத்
தொக்கவற் பிற்கணித் தருள்வாயே
வற்றவட் டக்கடற் கிட்டிவட் டித்துரத்
திட்டுமட் டுப்படப் பொருமாயன்

*குமிட்ட-குமிட்டிக்க, திரட்ட †கத் தத்தி னுற்று-கத்தி-

மற்றுமொப் புத்தரித் தெட்டவெட் டப்புறத்
துற்றவத் தர்க்கருட் பெருவாழ்வே
செற்றமுற் றச்சினத் திட்டுநெட் டைப்பொருப்
பெட்டைமுட் டிச்செருச் செயும்வேலா
சித்தர்சித் தத்துறப் பற்றிமெத் தப்புகழ்ச்
செப்புமுத் தித்தமிழ்ப் பெருமாளே.

தானத னந்தன தானத னந்தன
தானத னந்தன தனதான.

1196. பாரத னங்குழல் சோரநெ கிழ்ந்துப
டாத னம்புள கிதமாகப்
பாவைய ருந்தியில் மூழ்கிநெ டும்பரி
தாபமு டன்பரி மளவாயின்
ஆரம துண்டணை மீதிலி ருந்தநு
ராகம்வி ளைந்திட விளையாடி
ஆகந கப்பட ஆரமு யங்கிய
ஆசை மறந்துனை உணர்வேனோ
நாரத னன்றுச காயமொழிந்திட
நாயகி பைம்புனம் அதுதேடி
நாணம ழிந்துரு மாறிய வஞ்சக
நாடியெ பங்கய பதம்நோவ
மாரச ரம்பட மோகமு டன்குற
வாணர்கு றிஞ்சியின் மிசையேபோய்
மாமுனி வன்புணர் மானுத வுந்தனி
மானைம ணஞ்செய்த பெருமாளே.

தனதன தனதன தனதன தனதன
தானத் தனத்தந் தனதான.

1197. பிரமனும் விரகொடு பிணிவினை இடர்கொடு
பேணிக் கரங்கொண் டிருகாலும்
பெறநிமிர் குடிலென உறவுயிர் புகமதி
பேதித் தனந்தம் புவியூடே

வாவிட வருமுட லெரியிடை புகுதரு
வாதைத் தாங்கம் பிறவாமுன்
மாகத மயில்மிசை வருமுரு கனுமென
வாழ்கைக்கொ ரன்புந் தருவாயே
அருவரை துளைபட அலைகடல் சுவறிட
ஆவிப் புடன்சென் றசுரேசர்
அனைவரு மடிவுற அமர்பொரு தழகுட
னுண்மைத் தனங்கொண் டெழும்வேலா
இருவினை அகலிட எழிலுமை இடமுடை
ஈசர்க் கிடுஞ்செந் தமிழ்வாயா
இயல்பல கலைகொடு இசைமொழி பவரினும்
ஏழைக் கிரங்கும் பெருமாளே. (உசரு)

தனதன தனன தனதன தனன்
தனதன தனன தனதான.

1198. புழுககில் களப மொளிவிடு தாள
மணிபல செறிய வடமேரும்
பொருமிரு கலச முலைகளை இனிது
புனைதரு பொதுவின் மடமாதர்
அழகிய குவளை விழியினு மமுத
மொழியினு மவச அநுராக
அமளியின் மிசையி லவர்வச முருகி
அழியுநி னடிமை தனையாள்வாய்
குழலிசை அதுகொ டறவெருள் சுரபி
குறுநிரை அருளி அலைமோதும்
குரைசெறி உததி வரைபட நுரைகள்
குமுகுமு குமென உலகோடு
முழுமதி சுழல வரைநெறு நெறென
முடுகிய முகிலின் மருகோனே
மொகுமொகு மொகென ஞிமிறிசை பாவு
முளரியின் முதல்வர் பெருமாளே. (உசசு)

தானன தானன தந்த தானன தானன தந்த
தானன தானன தந்த தனதான.

1199. பூதக லாதிகள் கொண்டு யோகமு மாகம கிழ்ந்து
பூசைகள் யாதுநி கழ்ந்து பிழைதேடி
போம்வழி ஏதுதெ ரிந்து ஆதிய நாதியி ரண்டு
பூரணி காரணி விந்து வெளியான
நாதப ராபர மென்ற யோகியு லாசம றிந்து
ஞானசு வாசமு ணர்ந்துள் ஒளிகாண
நாடியொ ராயிரம் வந்த தாமரை மீதில லர்ந்த
நாயகர் பாதமி ரண்டும் அடைவேனோ
மாதுசர் வேஸ்வரி வஞ்சி காளிபி டாரி*வி பஞ்சி
வாணிவ ராகிம டந்தை அபிராமி
வாழ்சிவ காமசு வுந்த்ரி †யாலமெ லா‡முக பஞ்ச
வாலைபு ராரி§இ டந்த குமையாயி
வேதபு ராணம்வி ளம்பி நீலமு ராரியர் தங்கை
மேலொடு கீழுல கங்கள் தருபேதை
வேடமெ லாமுக சங்க பாடலொ டாடல்ப யின்ற
வேணியர் நாயகி தந்த பெருமாளே (உ௬௭)

தனத்த தந்தனந் தனத்த தந்தனந்
தனத்த தந்தனந் தனதான.

1200. பெருக்க நெஞ்சுவந் துருக்கு மன்பிலன்
ப்ரபுத்த னங்கள்பண் பெணுநானும்
பிழைக்க வொன்றிலன் சிலைக்கை மிண்டர்குன்
றமைத்த பெண்தனந் தனையாரத்
திருக்கை கொண்டணைந் திடச்செல் கின்றநின்
திறத்தை அன்புடன் தெளியாதே
சினத்தில் மண்டிமிண் டுரைக்கும் வம்பனென்
திருக்கு மென்றொழிந் திடுவேனோ

* விபஞ்சி-வீணை, † ஆல மெலாம்-ஆலம் மேலாம்-பிரளய காலத்து மேலாகிய ‡ முகபஞ்ச பஞ்சமுக, § இடந்தகுமை இடம் தகு உமை,

தருக்கி யன்றுசென் றருட்க ணுன்றான்
தரித்த குன்றநின் றடியோடும்
தடக்கை கொண்டுவந் தெடுத்த வன்சிரந்
தறித்த கண்டனெண் டிசையோரும்
சுருக்க மின்றிநின் றருக்க னிந்திரன்
றுணைச்செய் கின்றநின் பதமேவும்
சுகத்தி லன்பருஞ் செகத்ர யங்களுந்
துதிக்கு மும்பர்தம் பெருமாளே. (௨௪௮)

தனந்தா தனந்தா தனந்தா தனந்தா
தனந்தான தந்த தனதான.

1201. பெருங்கா ரியம்போல் வருங்கே டடம்பால்
ப்ரியங்கூர வந்து கருவூறிப்
பிறந்தார் கிடந்தா ரிருந்தார் தவழ்ந்தார்
நடந்தார்த ளர்ந்து பிணமானுர்
அருங்கான் மருங்கே எடுங்கோள் சுடுங்கோள்
அலங்கார நன்றி தெனமூழ்கி
அகன்று சையும்போய் விழும்பா ழுடம்பால்
அலைந்தேனை அஞ்சல் எனவேணும்
இருங்கா னகம்போ யிளங்கா லைபின்போ
கவெங்கே படர்ந்தை எனவேகி
எழுந்தே குரங்கா விலங்கா புரந்தீ
இடுங்காவ லன்றன் மருகோனே
பெருங்கார் முகம்பா ணிகொண்டே இறைஞ்சார்
புறஞ்சாய அம்பு தொடும்வேடர்
புனங்கா வலங்கோ தைபங்கா அபங்கா
புகழ்ந்தோது மண்டர் பெருமாளே. (௨௪௯)

தந்தந் தனன தாத்தன தந்தந் தனன தாத்தன
தந்தந் தனன தாத்தன தனதான.

1202. பொங்குங் கொடிய கூற்றனு நஞ்சும் பொதுவில் நோக்கிய
பொங்கும் புதிய நேத்திர வலைவீசிப்

பொன்கண் டிளகு கூத்திகள் புன்கண் கலவி வேட்டுயர்
புண்கொண் டுருகி யாட்படு மயல்தீரக்
*கொங்கின் புசக கோத்திரி பங்கங் களையு மாய்க்குடி
†கொங்கின் குவளை பூக்கிற கிரியோனே
குன்றங் கதிரை பூப்‡பர மூன்றுன் றமரர் போற்றிய
குன்றம் பிறவும் வாழ்த்துவ தொருநாளே
எங்கும் பகர மாய்க்கெடி விஞ்சும் பகழி வீக்கிய
வெஞ்சண் டதனு வேட்டுவர் சரணா
விந்தம் பணிய வாய்த்தரு எந்தண் புவன நோற்பவை
மென்குங் குமகு யாத்திரி பிரியாதே
எங்குங் கலுழி யார்த்தெழ எங்குஞ் சுருதி கூப்பிட
எங்குங் குருவி ஓச்சிய திருமானை
என்றென் றவச மாய்த்தொழு தென்றும் புதிய கூட்டமொ
டென்றும் பொழுது போக்கிய பெருமாளே. (௨௫௦)

தத்தத் தனத்தத்த தத்தத் தனத்தத்த
தத்தத் தனத்தத்த தனதான.

1203. மக்கட் பிறப்புக்கு ளொக்கப் பிறப்புற்ற
மட்டுற் றசுற்றத்தார் மனையாளும்
மத்யத் தலத்துற்று நித்தப் பிணக்கிட்டு
வைத்தப் பொருட்பற்று மிகநாட
நிக்ரித் திடுத்துட்டன் மட்டித் துயிர்ப்பற்ற
நெட்டைக் கயிற்றிட்டு வளையாமுன்
நெக்குக் குருப்பத்தி மிக்குக் கழற்செப்ப
நிற்றத் துவச்சொற்கள் அருள்வாயே
திக்கப் புறத்துக்குள் நிற்கப் புகழ்ப்பித்த
சித்ரத் தமிழ்க்கொற்றம் உடையோனே
சிப்பக் குடிற்கட்டு மற்பக் குறத்திச்சொல்
தித்திப் பையிச்சிக்கு மணவாளா

* கொங்கின் புசக கோத்திரி - திருச்செங்கோடு. † கொங்கின் குவளை பூக்கிறகிரி-திருத்தணி. ‡ பரம் மூன் றுன்றுகுன்றம்-திருப்பரங்குன்றம்.

முக்கட் சடைச்சித்த ருட்புக் கிருக்கைக்கு
முத்திக் துவக்குற்று மொழிவோனே
முட்டச் சினத்திட்டு முற்பட் டிணர்க்கொக்கை
முட்டித் தொளைத்திட்ட பெருமாளே. (உருக)

தத்தனத் தத்ததன தத்தனத் தத்ததன
தத்தனத் தத்ததன தனதான.

1204. மக்களொக் கற்றெரிவை பக்கமிக் கத்துணைவர்
மற்றுமுற் றக்குரவர் அனைவோரும்
வைத்தசெப் பிற்பணமும் ரத்நமுத் திற்பணியும்
மட்டுமற் றப்பெருகும் அடியாரும்
புக்குதுக் கித்தெரிகள் தத்துவைக் கப்புகுது
பொய்க்குமெய்க் குச்செயலும் உருகாதே
புட்டமிட் டுக்கருணை நற்பதத் தைப்பாவு
புத்திமெத் தத்தருவ தொருநாளே
செக்கர்கற் றைச்சடையில் மிக்ககொக் கிற்சிறகு
சிக்கவைத் துச்சலமு மதிசூடி
சித்தமுற் றுத்தெளிய மெத்தமெத் தத்திகழு
சித்தமுத் திச்சிவமும் அருள்வோனே
கொக்குறுப் புக்கொடு*மை நிற்கும்வட் டத்தசுரை
கொட்டியொக் கக்கொலைசெய் வடிவேலா
கொற்றவெற் றிப்பரிசை யொட்டியெட் டிச்சிறிது
குத்திவெட் டிப்பொருத பெருமாளே (உருஉ)

தத்தன தத்ததன தத்தன தத்ததன
தத்தன தத்ததன தனதான.

1205. மக்கள்தா யர்க்குமரு கர்க்குமா மர்க்குமனை
விக்கும்வாழ் நர்க்குமிக மனதாடே
மைத்தவே லைக்குநெடி துற்றமா யத்துயரம்
வைத்துவா டச்சமனும் உறமேவித்
திக்குநா டிக்கரிய மெய்க்கடா விற்றிருகு
திக்கவா விக்களவு தெரியாமுன்

*மைவட்டத்துநிற்கும் அசுரரை-மைவட்டம்-கறுத்தவட்டமாகிய கடல்.

சித்தமோ வித்துயிலு மற்றுவா ழச்சிறிது
சித்ரபா தக்கமலம் அருள்வாயே

இக்குவே ளைக்கருக முக்கணு டிக்கனலை
இட்டுயோ கத்தமரும் இறையோர்முன்

எச்சரா திக்குமுற நிற்குமா யற்குமுத
லெட்டொணு வித்தைதனை இனிதீவாய்

பக்கவார் வத்துடனுள் நெக்குநா டிப்பரவு
பத்தர்பா டற்குருகு முருகோனே

பக்கம்யா னைத்திருவொ டொக்கவா ழக்குறவர்
பச்சைமா னுக்கினிய பெருமாளே (௨௫௩)

தனனத் தனதன தனனத் தனதன
தனனத் தனதன தனதான.

1206. *மதனிக் கதுகொடு பதுமப் புதுமலர்
மலையப் படைவிடு வலியாலே

வனமுற் றினவளை இனநித் திலமலை
வலையத் துகள்வளை கடலாலே

விதனப் படுமதி வதனக் கொடியற
வெருவிப் பரிமள அணைமீதே

மெலியக் கலைதலை குலையத் †தகுமினி
விரையக் குரவவர் தரவேணும்

புதனைச் சதுமுக விதியச் சுதனெதிர்
புனைவித் தவர்தொழு கழல்வீரா

பொருகைச் சரிவரி பெருகச் செறிவுறு
புனமெய்க் குறமகள் மணவாளா

முதுநற் சரவண மதனிற் சததள
முளரிப் பதிதனில் உறைவோனே

முதுமைக் கடலட ரசுரப் படைகெட
முடுகிப் பொரவல பெருமாளே. (௨௫௪)

தனதன தனன தான தனதன தனன தான
தனதன தனன தான தனதான.

1207. மதிதனை இலாதபாவி குருநெறி இலாதகோபி
மனநிலை நிலாத பேயன் அவமாயை

---

*மதனிக் கதுகொடு-மன்மதன் கரும்புவில்லைக்கொண்டு. †தகும்-தகுமா?

வகையது விடாத பேடி தவநினை விலாத மோடி
வரும்வகை இதேது காயம் என்னாடும்
விதியிலி பொலாத லோபி சபைதனில் வாராத கோழை
வினையிகல் விடாத கூளன் எனைநீயும்
மிகுபர மதான ஞான நெறிதனை விசார மாக
மிகுமுன துருப தானம் அருள்வாயே
எதிர்வரு முதார சூர னிருபிள வதாக வேலை
இயலொடு கடாவு தீர குமரேசா
இனியசொல் மருத சீலர் கருவழி வாரமல் நாளும்
இளமைய துதானு மாக நினைவோனே
நதியுட னராவு பூணு பரமர்கு ருநாத ஞான
நடைபெறு கரே மான மயில்வீரா
நகைமுக விநோத ஞான குறமினு டனேகு லாவு
நவமணி உலாவு மார்ப பெருமாளே. (உ௫௫)

தனந்தாத் தனந்தாத் தனந்தாத் தனந்தாத்
தனந்தாத் தனத்தந் தனதான.

1208. மலந்தோற் சலம்போர்த் தெலும்பாற் கலந்திட்
டிடுங்கூட் டினிற்றங் கிடுமாய
மயங்காத் தியங்காப் *பயங்கோட் டிடுங்காற்
றுடன்போக் குறத்தந் தையுமாதும்
குலந்†தாய்க் குடம்பாற் பிறந்தேற் றிடுங்கோத்
‡தடங்கூப் பிடத்தம் புவியாவும்
குலைந்§தார்ப் பெழுங்காட் டிலந்தாட் களன்பாற்
குணங்காத் துனைக்கும் பிடவாளாய்
தலந்தாட் டொடண்டாத் தளாந்தார்க் கிளங்காத்
தடந்தாட் புடைத்தன் பினர்வாழத்

*பயம் கோட்டிடும் காற்று-பிராணவாயு. †தாய்க்கு உடம்பால் பிறந்து ஏற்றிடும்கோத்து-தாயுடன் கூடப்பிறந்தவர்களின் வர்க்கம். ‡அடம்கூப்பிட-கொடுமையாய்ப் புலம்ப. §ஆர்ப்பு எழுங்காட்டில்-அழுகை யோசை எழுமுன்.

தருங்கூத் தரும்பார்த் துகந்தேத் திடஞ்சாத்
திரஞ்சாற் றிநிற்கும் பெருவாழ்வே
அலைந்தாற் றெழுங்கோச் சலந்திக் கலந்தாஸ்
பதம்போச் செனக்கன் றிடும்வேலா
அறங்காத் துறங்காத் திரம்பார்த் திருந்தோர்க்
கயர்ந்தோர்க் களிக்கும் பெருமாளே. (உ௱அ)

தனதான தானதந்த தனதான தானதந்த
தனதான தானதந்த தனதான.

1209. மனநூறு கோடிதுன்ப நொடிமீதி லேமயங்கி
மதனூட லேமுயங்கி அதிரூப
மடமாத ராசைகொண்டு புவிமீதி லேமயங்கி
மதிசீரெ லாமழிந்து கொடிதான
வினைமூடி யேதிரிந்து புவிமீதி லேயுழன்று
விரகான்மெ யேதளர்ந்து விடுநாளில்
விசையான தோகைதுங்க மயிலேறி ஓடிவந்து
வெளிஞான வீடுதந்து அருள்வாயே
தினைவேடர் காவல்தங்கு மலைகாடெ லாமுழன்று
சிறுபேதை கால்பணிந்த குமரேசா
திரையாழி சேதுகண்டு பொருராவ ணதிவென்ற
திருமால்மு ராரிதங்கை அருள்பாலா
முனிவோர்கள் தேவரும்பர் சிறையாக வேவளைந்த
முதுசூரர் தானைதங்கள் கிளையோடு
முடிகோடி தூளெழுந்து கழுகோடு பாறருந்த
முனைவேலி னலெறிந்த பெருமாளே. (உ௱ஏ)

தானதன தானதத்த தானதன தானதத்த
தானதன தானதத்த தனதான.

1210. மாறுபொரு காலனுக்கும் வானிலெழு மாமதிக்கும்
வாரிதுயி லாவதற்கும் வசையேசொல்
மாயமடவார்தமக்கும் ஆயர்குழ லோதிசைக்கும்
வாயுமிள வாடையிற்கு மதனாலே

அமணர்கள் ஜலம், தீயிலிட்ட ஏடு அபஜயப்பட்டதைக் குறித்தது.

வேறுபடு பாயலுக்கு மேயெனது பேதையெய்த்து
வேறுபடு மேனிசற்றும் அழியாதே
வேடர்குல மாதினுக்கு வேடைகெட வேகடித்து
மேவுமிரு பாதமுற்று வரவேணும்
ஆறுமிடை வாளரக்கர் நீறுபட வேலெடுத்த
ஆறுமுக னேகுறத்தி மணவாளா
ஆழியுல கேழடக்கி வாசுகியை வாயடக்கி
ஆலுமயி லேறிநிற்கும் இளையோனே
சீறுபட மேருவெற்பை நீறுபட வேசினத்த
சேவலவ நீபமொய்த்த திரள்தோளா
சேருமட லால்மிகுத்த சூர்கொடு பேர்படைத்த
தேவர்சிறை மீளவிட்ட பெருமாளே. (உருஅ)

தத்ததன தானனத் தத்ததன தானனத்
தத்ததன தானனத் தனதான.

1211. முத்துமணி யாரமொய்த் திட்டவிரு கோடுமுற்
பட்டகரி போலுமத் தனமாதர்
முற்றுமதி யார்முகத் துற்றமுனை வேலுறப்
பட்டுமுகில் போல்மனத் திருள்மூடிச்
சுத்தமதி போய்வினைத் துட்டனவ னுய்மனத்
துக்கமுற வேமிகச் சுழலாதே
சொற்கள்பல நாவினிற் றொட்டுனிரு தாடொழச்
சொற்கமல வாழ்வுசற் றருள்வாயே
கொத்துமுடி யானபத் தற்றுவிழ வேகுறிப்
புற்றவதி கோபனச் சுதன்மாயன்
கொற்றமரு காகுறக் கொச்சைமற மாதினுக்
கிச்சைமொழி கூறுநற் குமரேசா
பத்தியுட னேநினைப் பற்றுமடி யார்வினைப்
பற்றுவிடு மாமறைப் பொருளானாய்
பத்திதரு ஞானசொற் கற்றவர்கள் பாடுநற்
பட்சபத தேவர்மெய்ப் பெருமாளே. (உருசு)

தனதன தானத் தானன தனதன தானத் தானன
தனதன தானத் தானன தனதான.

1212. முருகம யூரச் சேவக சரவண எனற் பூதரி
முகுளப டீரக் கோமள முலைமீதே
முழுகிய காதற் காமுக பதிபசு பாசத் தீர்வினை
முதியபு ராரிக் கோதிய குருவேயென்
றுருகியு மாடிப் பாடியு மிருகழல் நாடிச் சூடியு
முணர்வினொ டேடிக் கூடியும் வழிபாடுற்
றுலகினொ ராசைப் பாடற நிலைபெறு ஞானத் தாவினி
உனதடி யாரைச் சேர்வதும் ஒருநாளே
மருகனெ னுமற் சூழ்கொலை கருதிய மாமப் பாதகன்
வரவிடு மாயப் பேய்முலை பருகாமேல்
வருமத யானைக் கோடவை திருகிவி ளாவிற் காய்கனி
மதுகையில் வீழச் சாடிய சதமாபுட்
பொருதிரு கோரப் பாரிய மருதிடை போயப் போதொரு
சகடுதை யாமற் போர்செய்து விளையாடிப்
பொதுவியர் சேரிக் கேவளர் புயல்மரு காவஜ் ராயுத
புரமதில் மாபுத் தேளிர்கள் பெருமாளே. (உகூ0)

தனதன தனன தனதன தனன
தனதன தனன தந்ததான.

1213. முழுமதி அனைய முகமிரு குழையில்
முனிவிழி முனைகள் கொண்டுமூவா
முதலறி வதனை வளைபவர் கலவி
முழுகிய வினையை மொண்டுநாயேன்
வழிவழி அடிமை எனுமறி வடைய
மனமுறு துயர்கள் வெந்துவாட
மதிதரு மதிக கதிபெறு மடிகள்
மகிழ்வொடு புகழும் அன்புதாராய்
எழுதிட அரிய எழில்மற மகளின்
இருதன கிரிகள் தங்குமார்பா

எதிர்பொரு மசுரர் பொடிபட முடுகி
இமையவர் சிறையை அன்றுமீள்வாய்
அழகிய குமர எழுதல மகிழ
அறுவர்கள் அமுதை உண்டவாழ்வே
அமருல கிறைவ உமைதரு புதல்வ
அரியர பிரமர் தம்பிரானே. (உகூக)

தானா தனதன தானா தனதன
தானா தனதன தனதான.

1214. மூலா நிலமதின் மேலே மனதுறு
மோகா டவிசுடர் தனைநாடி
மோனா நிலைதனை நாடா வகையிலு
மோதா நெறிமுறை முதல்கூறும்
லீலா விதமன தாலே கதிபெற
நேமா ரகசிய உபதேசம்
நீடூ ழிதனிலை வாடா மணியொளி
நீதா பலமது தருவாயே
நாலா ருசியமு தாலே திருமறை
நாலா யதுசெப மணிமாலை
நாடாய் தவரிடர் கேடா அரிகரி
நாரா யணர்திரு மருகோனே
சூலா திபர்சிவ ஞானா யமனுதை
காலார் தாவரு குருநாதா
தோதி திகுதிகு தீதி செகசெக
சோதி நடமிடு பெருமாளே. (உகூஉ)

தத்தனா தான தத்தனா தான
தத்தனா தான தனதான.

1215. மைச்சுனமார் மாம னைச்சியுமா தாவு
மக்களுமா ருத துயர்கூர
மட்டிலதோர் தீயி விக்குடில்தான் வேவ
வைத்தவர்தா மேக மதிமாய

நிச்சயமாய் நாளு மிட்டொருதா தேவு
நெட்டளவாம் வாதை அணுகாமுன்
நெக்குருகா ஞான முற்றுனதா ளோதி
நித்தலும்வாழ் வாழ்வு தருவாயே
நச்சணைமேல் வாழு மச்சுதனுல் வேத
னற்றவர்தா நாட விடையேறி
நற்புதல்வா சூரர் பட்டிடவே லேவு
நற்றுணைவா ஞால மிகவாழப்
பச்செனுநீள் தோகை மெய்ப்பரியூர் பாக
பத்தியதா மாறு முகநாளும்
பட்சமுமே லாய்ச டட்சாகூழ் பாத
பத்திசெய்வா னுடர் பெருமாளே (உ௬௩)

தனதத்தன தானன தானன
தனதத்தன தானன தானன
தனதத்தன தானன தானன தனதான.

1216. வடிகட்டிய தேனென வாயினி
லுறுதுப்பன ஊறலை யார்தர
வரைவிற்றிக மூடலி லேதரு மடவார்பால்
அடிபட்டலை பாவநிர் மூடனை
முகடித்தொழி யாமுன நீயுன
தடிமைத்தொழி லாகவெ நாளினி அருள்வாயோ
பொடிபட்டிட ராவணன் மாமுடி
சிதறச்சிலை வாளிக ளேகொடு
பொருகைக்கள மேவிய மாயவன் மருகோனே
கொடுமைத்தொழி லாகிய கானவர்
மகிமைக்கொள வேயவர் வாழ்சிறு
குடிலிற்குற மானொடு மேவிய பெருமாளே. (உ௬௪)

தனதனந் தனந்த தனதனந் தனந்த
தனதனந் தனந்த தனதான.

1217. வரிபரந் திரண்டு நடனமுஞ் சிவந்து
வதனமண் டலங்கள் குறுவோர்வாய்

மணிசிலம் பலம்ப அளகமுங் குலைந்து
வசமழிந் திழிந்து மயல்கூர

இருதனங் குலுங்க இடைதுவண் டனுங்க
இனியதொன் றுமுண்டு மடவார்தோள்

இதமுடன் புணர்ந்து மதிமயங் கினும்பொ
னிலகுநின் பதங்கள் மறவேனே

விரிபரந் தியங்கு முததியுங் கலங்க
விடமினும் பிறந்த தெனவானோர்

வெருவிநெஞ் சமஞ்சி உரனொடுந் தயங்கி
விரைபதம் பணிந்து முறையோவென்

றுரைமறந் துணங்க அயில்தொடும் ப்ரசண்ட
உயர்தலங் குலுங்க வருதோகை

ஒருபெருஞ் சிகண்டி மயிலமர்ந் திலங்கி
உலகமும் புரந்த பெருமாளே. (உகூரு)

தனதனன தான தந்த தனதனன தான தந்த
தனதனன தான தந்த தனதான.

1218. வருபவர்க ளோலை கொண்டு நமனுடைய தூதரென்று
மடிபிடிய தாக நின்று தொடர்போது

மயலதுபெ லாத வம்பன் விரகுடைய னாகு மென்று
வசைகளுட னேதொ டர்ந்து அடைவார்கள்

கருவியத னாலெ றிந்து சதைகள்தனை யேய ரிந்து
கரியபுன லேசொ ரிந்து விடவேதான்

கழுமுனையி லேயி ரென்று விடுமெனும வேளை கண்டு
கடுகிவர வேணு மென்றன் முனமேதான்

பரகிரிய லாவு செந்தி மலையினுட னேயி ருப்பர்
பழநிதனி லேயி ருந்த குமரேசா

பதிகள்பல ஆயி ரங்கள் மலைகள்வெகு கோடி நின்ற
பதமடியர் காண வந்த கதிர்காமா

அரவுபிறை பூளை தும்மை விலுவமொடு தூர்வை கொன்றை
அணிவர்சடை யாளர் தந்த முருகோனே

அரகரசி வாய சம்பு குருபாகு மார நம்பு
மடியார்தமை ஆள வந்த பெருமாளே. (௨௬௬)

தானத் தத்தத் தத்தன தத்தத் தனதான.

1219. வானப் புக்குப் பற்றும ருத்துக் கனல்மேவு
மாயத் தெற்றிப் பொய்க்குடி லொக்கப் பிறவாதே
ஞானச் சித்திச் சித்திர நித்தத் தமிழாலுன்
நாமத் தைக்கற் றுப்புகழ் கைக்குப் புரிவாயே
கானக் கொச்சைச் சொற்குற விக்குக் கடவோனே
காதிக் கொற்றப் பொற்குல வெற்பைப் பொரும்வேலா
தேனைத் தத்தச் சுற்றிய செச்சைத் தொடையோனே
தேவச் சொர்க்கச் சக்கர வர்த்திப் பெருமாளே. (௨௬௭)

தானதன தாத்த தானதன தாத்த
தானதன தாத்த தனதான.

1220. வீணையிசை கோட்டி ஆலமிட ராட்டு
வீரமுனை ஈட்டி விழியார்தம்
வேதனையில் நாட்ட மாகியிடர் பாட்டில்
வீழுமயல் தீட்டி உழலாதே
ஆணியுள வீட்டை மேவியுள மாட்டை
ஆவலுட னீட்டி அழியாதே
ஆவியுறை கூட்டில் ஞானமறை ஊட்டி
ஆனநிலை காட்டி அருள்வாயே
கேணியுற வேட்ட ஞானநெறி வேட்டர்
கேள்சுருதி நாட்டில் உறைவோனே
கீதவிசை கூட்டி வேதமொழி சூட்டு
கீரரியல் கேட்ட க்ருபைவேளே
சேணினுயர் காட்டில் வாழுமற வாட்டி
சீதவிரு கோட்டில் அணைவோனே
சீறவுணர் காட்டி லாரவழல் மூட்டி
தேவர்சிறை மீட்ட பெருமாளே. (௨௬௮)

தானன தந்தன தாத்தன தானன தந்தன தாத்தன
தானன தந்தன தாத்தன தனதான.

1221. வேடர்செ ழுந்தினை காத்திதண் மீதிலி ருந்தபி ராட்டிவி
லோசன அம்புக ளாற்செயல் தடுமாறி
மேனித ளர்ந்துரு காப்பரி தாபமு டன்புன மேற்றிரு
வேளைபு குந்தப ராக்ரமம் அதுபாடி
நாடறி யும்படி கூப்பிடு நாவலர் தங்களை யார்ப்பதி
னாலுல கங்களு மேத்திய இருதாளில்
நாறுக டம்பணி யாப்பரி வோடுபு ரந்தப ராக்ரம
நாடவ ருந்தவம் வாய்ப்பதும் ஒருநாளே
ஆடக மந்தா நீர்க்கசை யாமலு ரம்பெற நாட்டியொ
ராயிர வெம்பகு வாய்ப்பணி கயிறாக
ஆழிக டைந்தமு தாக்கிய நேகர்பெ ரும்பசி தீர்த்தரு
ளாயனு மன்றெயில் தீப்பட அதிபார
வாடைநெ டுங்கிரி கோட்டிய வீரனு மெம்பர மாற்றிய
வாழ்வென வஞ்சக ராக்ஷதர் குலமாள
வாசவன் வன்சிறை மீட்டவ னாருமடங்கலு மீட்டவன்
வானுல குங்குடி ஏற்றிய பெருமாளே. (உசுகூ)

தானன தத்ததன தானன தத்ததன
தானன தத்ததன தனதான.

1222. வேலைவா ளைக்கொடிய ஆலகா லத்தைமதன்
வீசுபா ணத்தைநிகர் எனலாகும்
வேதைசா தித்தவிழி மாதரா பத்தில்வினை
யாடிமோ கித்திரியும் வெகுரூப
கோலகா லத்தைவிட லாகிமா றக்குணவி
காரமோ டத்தெளிய அரிதான
கூறொணா தற்பரம ஞானரூ பத்தின்வழி
கூடலா கப்பெருமை தருவாயே
வாலிமார் பைத்துணிய ஏழ்மரா இற்றுவிழ
வாளிபோ டக்கருது மநாரமன்

வானுலோ கத்திலம ரேசனு லிக்கவளை
ஊதிமோ கித்துவிழ அருள்கூரும்
நீலமே னிக்குமரு காவிசா லித்துவரு
நீசர்வாழ் வைக்களையும் இளையோனே
நேசமா கக்குறவர் தோகைமா னைப்புணரு
நீபதோ ளொப்பரிய பெருமாளே. (உ௭0)

தானத்த தந்த தந்த தானத்த தந்த தந்த
தானத்த தந்த தந்த தனதான.

1223. வேலொத்து வென்றி அங்கை வேளுக்கு வெஞ்ச ரங்க
ளாமிக்க கண்களென்றும் இருதோளை
வேயொக்கு மென்று கொங்கை மேல்வெற்ப தென்று கொண்டை
மேகத்தை வென்ற தென்றும் எழில்மாதர்
கோலத்தை விஞ்ச வெஞ்சொல் கோடித்து வஞ்ச நெஞ்சர்
கூடத்தில் நின்று நின்று குறியாதே
கோதற்ற நின்ப தங்கள் சேர்பற்றி இன்ப மன்பு
கூர்கைக்கு வந்து சிந்தை குறுகாதோ
ஞாலத்தை அன்ற ளந்து வேலைக்கு ளுந்து யின்று
நாடத்தி முன்புவந்த திருமாலும்
நாடத்த டஞ்சி லம்பை மாவைப்பி ளந்த டர்ந்து
நாகத்த லங்கு லுங்க விடும்வேலே
ஆலித்தெ ழுந்த டர்ந்த ஆலத்தை உண்ட சண்ட
ராகத்தில் மங்கை பங்கர் நடமாடும்
ஆதிக்கு மைந்த னென்று நீதிக்குள் நின்ற அன்பர்
ஆபத்தி லஞ்ச லென்ற பெருமாளே. (உ௭௧)

தத்ததன தானத் தனதான
தத்ததன தானத் தனதான.

1224. இத்தரணி மீதிற் பிறவாதே
எத்தரொடு கூடிக் கலவாதே
முத்தமிழை ஓதித் தளராதே
முத்தியடி யேனுக் கருள்வாயே

தத்துவ மெய்ஞ்ஞானக் குருநாதா
சத்தசொரு பாபுத் தருதோனே
நித்தியக்ருபாகற் பெருவாழ்வே
நிர்த்தஜக ஜோதிப் பெருமாளே. (உஎஉ)

தந்தந்தன தத்தன தாத்தன தனதான
தந்தந்தன தத்தன தாத்தன தனதான.

1225. என்பந்தவி னைத்தொடர் போக்கிவி சயமாகி
இன்பந்தனை உற்றும காப்ரியம் அதுவாகி
அன்புந்திய பொற்கிணி பாற்கடல் அமுதான
அந்தந்தனி விச்சைகொ ளாஸ்பதம் அருள்வாயே
முன்புந்தி நினைத்துரு வாற்சிறு வடிவாகி
முன்திந்திய னப்பர தாத்துட னடமாடித்
தன்பந்தம றத்தவ ரோற்பவர் குறைதீரச்
சம்பந்தனெ னத்தமிழ் தேக்கிய பெருமாளே. (உஎங)

தனத்தத் தானத் தனதான
தனத்தத் தானத் தனதான.

1226. கருப்பத் தூறிப் பிறவாதே
கனக்கப் பாடுற் றுழலாதே
திருப்பொற் பாதத் தநுபூதி
சிறக்கப் பாலித் தருள்வாயே
பரப்பற் றருக் குரியோனே
பரத்தப் பாலுக் கணியோனே
திருக்கைச் சேவற் கொடியோனே
செகத்திற் சோதிப் பெருமாளே. (உஎச)

தனதனன தானத் தனதான
தனதனன தானத் தனதான.

1227. கொடியமத வேள்கைக் கணையாலே
குரைகடெடு நீலக் கடலாலே
நெடியபுகழ் சோலைக் குயிலாலே
நிலைமைகெடு மானைத் தழுவாயே

கடியாவு பூணர்க் கினியோனே
கலைகள்தெரி மாமெய்ப் புலவோனே
அடியவர்கள் நேசத் துறைவேலா
அறுமுகவி நோதப் பெருமாளே. (உஎரு)

தானன தானதனத் தனதான
தானன தானதனத் தனதான.

1228. கோடானமேருமலைத் தனமானர்
கோமாள மானவலைக் குழலாதே
நாடோறு மேன்மைபடைத் திடவேதான்
நாயேனை ஆளநினைத் திடொணாதோ
ஈடேற ஞானமுரைத் தருள்வோனே
ஈராறு தோள்கள்படைத் திடுவோனே
மாடேறு மீசர்தமக் கினியோனே
மாதானை ஆறுமுகப் பெருமாளே. (உஎசு)

தனதனத்த தனத்தன தனதான
தனதனத்த தனத்தன தனதான.

1229. சமயபத்தி வ்ருதாத்தனை நினையாதே
சரணபத்ம சிவார்ச்சனை தனைநாடி
அமையசற்கு ருசாத்திர மொழிநூலால்
அருளெனக்கி னிமேற்றுணை தருவாயே
உமைமுலைத்த ருபாற்கொடு அருள்கூறி
உரியமெய்த்த வமாக்கிநல் உபதேசத்
தமிழ்தனைக்க ரைகாட்டிய திறலோனே
சமணரைக்க ழுவேற்றிய பெருமாளே. (உஎஎ)

தனதன தாத்தனத் தனதான
தனதன தாத்தனத் தனதான.

1230. சருவிய சாத்திரத் திரளான
சடுதிக ழாஸ்பதத் தமையாத

அருமறை யாற்பெறற் கரிதாய
அனிதய வார்த்தைப் பெறுவேனே
நிருதரை மூக்கறுத் தெழுபார
நெடுதிரை யார்ப்பெழப் பொருதோனே
பொருளடி யாற்பெறக் கவிபாடும்
புலவரு சாத்துணைப் பெருமாளே. (உஎஅ)

தானத் தானன தந்ததான
தானத் தானன தந்ததான.

1231. தீதுற் றேயெழு திங்களாலே
தீயைத் தூவிய தென்றலாலே
போதுற் றுடும நங்களாலே
போதப் பேதைந லங்கலாமோ
வேதத் தோனைமு னிந்தகோவே
வேடப் பாவைவி ரும்புமார்பா
ஓதச் சூதமெ றிந்தவேலா
ஊமைத் தேவர்கள் தம்பிரானே. (உஎகூ)

தையதன தானத் தனதான
தையதன தானத் தனதான.

1232. துள்ளுமத வேள்கைக் கணையாலே
தொல்லைநெடு நீலக் கடலாலே
மெள்ளவரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே
தெள்ளுதமிழ் பாடத் தெளிவோனே
செய்யகும ரேசத் திறலோனே
வள்ளல்தொழு ஞானக் கழலோனே
வள்ளிமண வாளப் பெருமாளே. (உஅ0)

தான தனத் தனதான தான தனத் தனதான.

1233. தேனி யல்சொற் கனிமாதர் சேவை தனைக் கருதாதே
யானெ னதற் றிடுபோதம் யான றிதற் கருள்வாயே

வான வருக் கரசான வாச வனுக் கினியோனே
ஆனை முகற் கிளையோனே ஆறு முகப் பெருமாளே. (உ௪௧)

தானதன தானனத் தனதான
தானதன தானனத் தனதான.

1234. நாரியர்க ளாசையைக் கருதாதே
நானுனிரு பாதபத் மமுநாட
ஆரமுத மானசர்க் கரைதேனே
ஆனவநு பூதியைத் தருவாயே
காரணம தானஉத் தமசீலா
கானகுற மாதினைப் புணர்வோனே
சூரர்கிளை தூளெழப் பொரும்வேலா
தோகைமயில் வாகனப் பெருமாளே. (உ௪உ)

தான தனத்த தனதான தான தனத்த தனதான.

1235. நாளு மிகுத்த கசிவாகி ஞான நிருத்த மதைநாடும்
ஏழை தனக்கும் அநுபூதி ஏது தழைக்க அருள்வாயே
பூளை எருக்கு மதிநாக பூண ரளித்த சிறியோனே
வேளை தனக்கு சிதமாக வேழ மழைத்த பெருமாளே. (உ௪௩)

தத்தனத் தனதனத்த தனதான
தத்தனத் தனதனத்த தனதான.

1236. நித்தமுற் றுனைநினைத்து மிகநாடி
நிட்டைபெற் றியல்கருத்தர் துணையாக
நத்தியுத் தமதவத்தி னெறியாலே
லக்யலக் கணநிருத்தம் அருள்வாயே
வெற்றிவிக் ரமவரக்கர் கிளைமாள
விட்ட*நத் துகரனுக்கு மருகோனே
குற்றமற் றவருளத்தில் உறைவோனே
குக்குடக் கொடிதரித்த பெருமாளே. (உ௪௪)

* நத்து - சங்கு.

தானந்த தானத்தந் தனதான
தானந்த தானத்தந் தனதான.

1237. நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே
வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா
நாலங்க வேதத்தின் பொருளோனே
நானென்று மார்தட்டும் பெருமாளே. (உஅரு)

தத்தத்த தான தனதான
தத்தத்த தான தனதான.

1238. பட்டுப்ப டாத மதனாலும்
பக்கத்து மாதர் வசையாலும்
சுட்டுச்சு டாத நிலவாலும்
துக்கத்தி லாழ்வ தியல்போதான்
தட்டுப்ப டாத திறல்வீரர்
தர்க்கித்த சூரர் குலகாலா
மட்டுப் படாத மயிலோனே
மற்றொப்பி லாத பெருமாளே. (உஅசு)

தனனத் தத்தன தனதான
தனனத் தத்தன தனதான.

1239. பரவைக் கெத்தனை விசைதூது
பகரற் குற்றவர் எனமாணுன்
மரபுக் குச்சித ப்ரபுதார்
வாமெத் தத்தா வருவாயே
கரடக் கற்பகன் இளையோனே
கலைவிற் கட்குற மகள்கேள்வா
அரனுக் குற்றது புகல்வோனே
அயனைக் குட்டிய பெருமாளே. (உஅஎ)

தனதனன தாத்தனத் தனதான.

1240. பிறவியலை ஆற்றினிற் புகுதாதே
*பிரகிருதி மார்க்கமுற் றலையாதே
உறுதிகுரு வாக்கியப் பொருளாலே
உனதுபத காட்சியைத் தருவாயே
அறுசமய சாத்திரப் பொருளோனே
அறிவுளறி வார்க்குணக் கடலோனே
குறுமுனிவ னேத்துமுத் தமிழோனே
குமரகுரு கார்த்திகைப் பெருமாளே. (௨௮௮)

தத்தனத் தாத்தத் தாத்த தனதான
தத்தனத் தாத்தத் தாத்த தனதான.

1241. புத்தகத் தேட்டிற் றீட்டி முடியாது
பொற்புறக் கூட்டிக் காட்டி அருள்ஞான
வித்தகப் பேற்றைத் தேற்றி அருளாலே
மெத்தெனக் கூட்டிக் காக்க நினைவாயே
தத்தையுக் கோட்டிக் காட்டில் உறைவானைச்
†சற்கரித் தேத்திக் கீர்த்தி பெறுவோனே
கைத்தலத் ‡தீக்குப் பார்த்து நுழையாத
கற்பகத் தோப்புக் காத்த பெருமாளே. (௨௮௯)

தன்ன தனந்தன தனதான
தன்ன தனந்தன தனதான.

1242. பொன்னை விரும்பிய பொதுமாதர்
புன்மை விரும்பியெ தடுமாறும்
என்னை விரும்பி§நி ஒருகால் ‖ நின்
எண்ணி விரும்பவும் அருள்வாயே
மின்னை விரும்பிய சடையாளர்
மெய்யின் விரும்பிய குருநாத
அன்னை விரும்பிய குறமானை
அண்மி விரும்பிய பெருமாளே. (௨௯௦)

---

*பிரகிருதி - ஐம்பூதம். † சற்கரித்து - உபகரித்து. ‡ ஈகுப்பு - வண்டுக் கூட்டம். குப்பு-கும்பு. § நி- நீ. ‖ நின் எண்ணி - நின்னை எண்ணி.

தனதத்த தத்த தனதான
தனதத்த தத்த தனதான

1243. மனைமக்கள் சுற்ற மெனுமாயா
வலையைக்க டக்க அறியாதே
வினையிற்செ ருக்கி அடிநாயேன்
விழலுக்கி றைத்து விடலாமோ
சுனையைக்க லக்கி விளையாடு
சொருபக்கு றத்தி மணவாளா
தினநற்ச ரித்ர முளதேவர்
சிறைவெட்டி விட்ட பெருமாளே(உகூக)

தானனா தானன தந்ததானா
தானனா தானன தந்ததானா.

1244. வாரிமீ தேயெழு திங்களாலே
மாரவே ளேவிய அம்பினாலே
பாரெலா மேசிய பண்பினாலே
பாவியே னாவிம யங்கலாமோ
சூரனீள் மார்புதொ ளைந்தவேலா
சோதியே தோகைய மர்ந்தகோவே
மூரிமால் யானைம ணந்தமார்பா
மூவர்தே வாதிகள் தம்பிரானே. (உகூஉ)

தானதத்த தானதத்த தானதத்த தனதான
தானதத்த தானதத்த தானதத்த தனதான.

1245. வேதவெற்பி லேபுனத்தில் மேவிநிற்கும் அபிராம
வேடுவச்சி பாதபத்ம மீதுசெச்சை முடிதோய
ஆதரித்து வேளைபுக்க ஆறிரட்டி புயநேய
ஆதரத்தொ டாதரிக்க ஆனபுத்தி புகல்வாயே
காதுமுக்ர வீரபத்ர காளிவெட்க *மகுடாமா
காசமுட்ட வீசிவிட்ட காலர்பத்தி இமையோரை
ஓதுவித்த நாதர்கற்க †ஓதுவித்த முனிநாண
ஓரெழுத்தி லாறெழுத்தை ஓதுவித்த பெருமாளே()

*மகுடா மாகாச முட்ட - மகுடம் ஆகாசம் முட்ட. † ஓது வித்த முனி - தமக்கு ஆதியில் ஹரி ஓம் என ஓதுவிக்கத் தொடங்கின பிரமன்.

தனத்தத்த தான தனதான
தனத்தத்த தான தனதான.

1246. மதப்பட்ட காதல் மடவார்தம்
வசப்பட்டு நாளுந் தடுமாறி
பதப்பட்டி டாமல் அலையாது
பதிக்கெட்டு ஞானம் அருள்வாயே
மிதப்பட்டசூரர் குலகாலா
மிகப்பெற்றமூவர் முதலோனே
இதப்பட்ட கான மயிலேறி
எனக்குற்ற நாத பெருமாளே. (௨௯௪)

தனதன தத்த தனதான
தனதன தத்த தனதான.

1247. வரையற வற்ற மடமாதர்
மயலுற உற்று வசமாகி
நிரையைவி டுத்து நிதிதேடி
நினைவு கொடுத்து நிகழ்வேனோ
பரையுமை பெற்ற பரிபாலா
பரமரு கக்கும் பெரியோனே
உரையது செப்ப வருவாயே
உலகுமதித்த பெருமாளே. (௨௯௫)

தனத்தத் தான தனதான
தனத்தத் தான தனதான.

1248. தனத்துக் காக விலைபேசும்
சமர்த்துக் கார மடமாதர்
இனத்துக் காக மதிமாறி
இரக்கத் தாவி அலைவேனோ
சினத்துக் கால னணுகாமுன்
திருத்திப் பாத மருள்வாயே
வனத்துக் சாத குலமாது
மணத்துக் கான பெருமாளே. (௨௯௬)

தனத்தத் தனந்த தனதான
தனத்தத் தனந்த தனதான.

1249. மணத்துக் கடம்பு புனைதோளா
வலத்துற் றெதிர்ந்து பொருசூர்
நிணத்திற் றுளைந்த வடிவேலா
நிலத்திற் பொலிந்த வயலூரா
வணத்திற் கிளர்ந்த மயில்வாகா
மனத்திற் புகுந்து க்ருபையீவாய்
குணத்திற் சிறந்த மகாசி
குறத்திக் கிசைந்த பெருமாளே. (உகூஎ)

தானதன தானதத்த தனதான
தானதன தானதத்த தனதான.

1250. காதின்மணி ஓலையிட்டு வருமானூர்
காமவலை ஊடுபுக்கு மதிமாழ்கி
நீதிநெறி யேவிடுத்து மலையாதே
நீயுனிரு தாளளிக்க வரவேணும்
ஆதிமக மாயிபெற்ற குமரேசா
ஆறுமுக மேபடைத்த குருநாதா
தீதிலடி யார்மனத்தில் உறைவோனே
தேவர்குடி வாழவைத்த பெருமாளே. (உகூஅ)

---

குமாக்கடவுள் திருவடிகளே சரணம்.

திருப்புகழ் இரண்டாம் புத்தகம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 614.

